காஞ்சி ஸ்ரீஜகதாசார்ய சிம்மாஸனாதிபதி

பத்மவிபூஷண மஹாமஹோபாத்யாய

**P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமி**

**இந்நூல் குறித்து அருளிய அபிநந்தனம்.**

"புத்தகம் மிக மிக ரமணீயம்; ஸ்ரீரங்கம் உ. வே. ஸ். ஆர். எஸ் ஸ்வாமி நல்ல பாக்கியசாலி. ஹ்ருதய பூர்வமாக எழுதுகிறேன் சிறந்த தொண்டு புரிந்திருக்கிறார். இத்தகைய வொரு பதிப்பு ஸ்ரீ வைஷ்ணவத் திரளில் மிக அவசியமானதே. எனக்கிருந்த பெரிய தொரு குறை நன்கு தீர்ந்தது."

[illegible] 24 [illegible] அண்ண[illegible]
[illegible]

ஸ்ரீ



# ஸ்ரீமத் பகவத் கீதை

## முதல் ஷட்கம்

(முதல் ஆறு அத்யாயங்கள்)



ந்யாய வேதாந்த வித்வான்

ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரிய ஸ்வாமியின்

உபந்யாஸங்களிலிருந்து

தொகுத்து எழுதியவர்

மயிலாப்பூர் ஸி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார்

42, மேல உத்திர வீதி, ஸ்ரீ ரங்கம், திருச்சி-6.

செந்தமிழ் வேதியர்

ஸ்ரீ. உ. வே. குமாரவாடி சே. ராமாநுஜாசாரியரால்

பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டது.

29/8, ஆபிரகாம் முதலி தெரு,
மயிலாப்பூர், மதராஸ் - 600004.

முதல் பதிப்பு—1977
வெளியீடு 16—8—77—திருவாடிப்பூரம்.
விலை ரூ. 6/-



# ஸமர்ப்பணம்

வைகுண்டவாசி

ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரிய ஸ்வாமியின்

ஐந்தாவது அஞ்சலி மலர்

Free India Press, Madras-600 002

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பதிப்புரை

ஈச்வரனும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட்டு, வெளியிட்ட சாஸ்திரம் கீதை. ''வார்த்தை அறிபவர் மாயவற்கு ஆளன்றி ஆவரோ'' என்று ஈச்வரனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வார், திருத்தேர்த் தட்டு வார்த்தைகளுக்கு ''ஆசார்ய ருசி பரிக்ருஹீத'' முத்திரை யிட்டார்.

பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளி உரைத்த கணக்கறு நலத்தனன் அந்தமில் ஆதியம் பகவன் 'அறிவினால் குறைவில்லா, அகல் ஞாலத்தவர் அறிய நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தி'. ''சேயன், அணியன், சிறியன் மிகப் பெரியன், ஆயன் துவரைக் கோனாய் நின்ற மாயன்—அன்று ஓதிய வாக்கதனைக் கல்லார், உலகத்தில் ஏதிலராம், மெய்ஞ்ஞானமில்'' என்று கீதையின் இன்றியமையாத தன்மையை அறுதியிட்டார் திருமழிசைப் பிரான்.

ஆழ்வார்களை அடியொற்றி, மாறன் அடிபணிந்து உய்ந்தவரான ஸ்ரீராமாநுஜர் ஸநாதன தர்மத்தின் பிரஸ்தானத்திரயத்துள் சிறந்து விளங்கும் இந்த கீதா சாஸ்திரத்துக்கு மிகச் சிறந்ததொரு உரை வகுத்திட்டார்.

ஸ்ரீ ராமாநுஜ பாஷ்யத்தையும், வேதாந்த தேசிகனின் தாத்பர்ய சந்திரிகையையும், உள்ளத்தில் கொண்டு, அஸ்மத் ஆசார்ய வர்யரான ஸ்ரீ. உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி (வைகுண்ட வாஸி) சென்னை வாழ் பெருமக்களுக்கு அவ்வப்போது ஆற்றி வந்த

கீதைப் பேருரைகளை அடியேனது ஆப்த தமரான குமாரவாடி—(மயிலை) எஸ். ஆர். ஸ்ரீனிவாஸ அய்யங்கார் ஸ்வாமி ஏடுபடுத்தி வந்தார்.

மிக விரிவான உரைகளை கற்கவோ, கேட்கவோ, அவகாசமின்றி அவசரப்படும் இன்றைய உலகுக்கு, கீதையின் உயரிய கருத்துக்களை உதவும் வண்ணம் ஸ்வாமியின் உரையைத் தழுவிய சுருக்கம் இப் பதிப்பில் தனி நூலாக வெளியிடப் பெறுகிறது.

முதன் முதலாக ஸம்பிரதாய சுத்தி ஏற்படும் வகையில் கீதையின் பதினெட்டு, அத்தியாயங்களையும் மூன்று ஷட்கங்களாகப் பிரித்து அத்தியாயக் கருத்துக்களையும் தனித்தனி சுலோகங்களில் தெளிவுறுத்தி ஸ்ரீராமாநுஜருக்கு வழிகாட்டியவர் ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்யர் ஸ்ரீ ஆளவாந்தாரே ஆவர்.

முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு, பின் தாமதனை ஓர்த்து வெளியிடும் 'இந்நூல் ஸ்ரீ வைஷ்ணவ உலகுக்குக் காலமறிந்து செய்யும் ஒரு நல்லுதவியாகும். மூன்று ஷட்கங்களாக வெளிவரும் இதன் முதல் ஷட்கத்தை ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் வரவேற்று ஆதரித்து, மேலும் இவ்வகை நூல்கள் பல வெளிவர உதவுமாறு பணிவுடன் பிரார்த்திக்கிறேன்.

மயிலை
5—7—77

தாஸன்
சே. ராமாநுஜன்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

"பஹூநி மே வ்யதீதானி ஜந்மானி தவசார்ஜுன" என்று, "உனக்கும் 'மாறி மாறி' பிறவிகள் பல. நானும் "சன்மம் பல பல செய்து வெளிப்படுபவன்" என்று தன் அவதாரங்கள் எண்ணிறந்தன என்பதை அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் எடுத்துக் காட்டியிருக்கிறான்.

பகவான் எதற்காகப் பிறக்க வேணும்? "நானும் பிறந்து நீயும் பிறக்க வேணுமோ" என்று அர்ஜுனனை கிருஷ்ணன் கேட்டபடி, நம் பிறவியை அறுக்கவே, மண்மிசை யோனிகள் தோறும் அவன் அவதரிக்கிறான்.

அவனுடைய எண்ணிறந்த அவதாரங்களில் தசாவதாரம் முக்கியமானவை. அவைகளில் ராம கிருஷ்ணாவதாரங்களே சிறந்தவை. பகவானாயிருந்தும் தன் பரத்துவத்தை மறைத்து மனிதனாகவே தன்னைக் காட்டிக் கொண்ட ராமனைக் காட்டிலும், பிறக்கும்போதே சங்கு சக்கரத்தோடு வந்து அவதரித்து, அவ்வப்போது தன் தேவத்துவத்தைக் காட்டி, மற்ற தேவதைகளெல்லாம் தன்னிடம் தோற்று ஓடி பரிபவம் காணும்படி பரத்வம் விஞ்சி நின்ற அவதாரம் க்ருஷ்ணாவதாரமே. அன்று, கஜேந்திரனென்கிற யானைக்கு அருளையீந்த பரமன், க்ருஷ்ணாவதாரத்தில் ததிபாண்டனின் பானைக்கும் மோக்ஷமருளினான். "ஏகோ ஹவை நாராயண ஆஸீத்; ந ப்ரம்மா ந ஈசன;" என்கிறபடி சுருதி சித்தமான பரத்துவத்தை தெளிவுறக் காட்டும் அவதாரம் கிருஷ்ண வதாரமே. ஸகல மனுஜ நயன விஷயதாம் கத:, என்கிறபடி இன்னார், இனயர் என்றில்லாமல், "அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்துப் பெண்கள் கட்டவும் அடிக்கவும் ஆம்படி முற்றிலும் அறிவற்ற உரலினோடு இணைந்து இருந்து ஏங்கிய எளிவரு நிலையை 'பரம சேதனன்' ஏற்றுக் கொண்ட அவதாரம் இதுவன்றோ! மஹாபாரதம் வியாஸர் வாயில் ஐந்தாம் வேதமானதும் தூது போனவன் ஏற்றத்தால் அன்றோ? தூதுபோன இழி தொழிலும், புருவம் நெறித்த இடத்தில் தேரை நடத்தி பார்த்தனுக்கு சாரதியாய் ரதம் செலுத்தியதும் எளிமையின் எல்லை நிலம் அன்றோ!

இப்படி தன் பரதவம் ஸௌலப்யம் (மேன்மை நீர்மை) இரண்டும் தோற்றி இருக்கச் செய்தே பகவான் ஆசார்ய பதத்தை ஆசைப்பட்டு, ''சிஷ்யத் தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்'' என்று அர்ஜுனன் சொன்ன உடனே, அவனைப் பற்றுசாகக் கொண்டு அறிவினுல் குறைவில்லா அகல் ஞானத்தவர் அறிய நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தி கிருஷ்ணனே யல்லவா ?

ஆயனாய் பிறந்த அவன் அர்ஜுனனுகிற கன்றுக் குட்டியை வியாஜமாகக் கொண்டு, உபநிஷத்துக்களாகிற பசுவைக் கறந்து நம்மாழ்வார் போன்ற ஞானிகளுக்கு 'கீதை அமுதம்' என்னும் பாலை வழங்கிய வள்ளல் அல்லவா ?

கீதை அமுதத்தைப் பருகிப் பருகிக் களித்தவர் பாருலகில் பலராவர். அவர் தம்முள், கீதா ப்ரவசனமே தன் தனிச் சிறப்பாகக் கொண்டிருந்த ஸ்ரீமத் உ.வே. காரப்பங்காடு வேங்கடாசாரிய ஸ்வாமி, கீதார்த்தங்களை தெளிவுறச் சொல்வதில் தங்நிகரற்று விளங்கினார். கீதை தனி அழகுடன் ஒளிவிடும் வகையில் தன் நாவன்மையைக் காட்டியவர் காரப்பங்காடு ஸ்வாமியே ஆவர்.

அடியேனுக்கு இந்தப் பிறவியில் கிடைத்த பெரும் பேறு அந்த ஸ்வாமியின் திருவாக்கைப் பல கால் செவி மடுக்கும் பாக்கியம் கிட்டியதேயாம். ''யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்'' என்ற ஓர் நைப்பாசையால், ''ஆசை பற்றி அறைய லுற்றேன்'' என்கிற கணக்கில் அடியேன் கேட்டு, ஏடுபடுத்திய சிலவற்றை, சிறிது சுருக்கி வெளியிட விழைந்தேன்.

இதை ஊக்குவித்துப் பொருள் உதவியும் புரிந்த மஹான்களுக்கு அடியேன் என்றும் நன்றி மறவேன்.

இந் நூலுக்கு துணை நின்று, பரிசோதித்து உதவிய ஸ்ரீமான் உ. வே. குமாரவாடி சே. ராமாநுஜாசாரியாருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் இந்த கீதை அமுதத்தைப் பருகி, பார்த்தசாரதியின் அருள் பெற்று ஆத்ம ச்ரேயஸ் பெறுவர் என்பதில் சந்தேகமேயில்லை.

ஸ்ரீரங்கம்,
15—8—77

ஸி. ஆர். ஸ்ரீனிவாஸ தாஸன்



# ॥ श्रीमद्भगवद्गीता ॥

## ॥ प्रथमोऽध्यायः ॥

धृतराष्ट्र उवाच –

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥ १ ॥

सञ्जय उवाच –

दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसंगम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५ ॥

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७ ॥

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिर्जयद्रथः ॥ ८ ॥

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥

तस्य संजनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥ १२ ॥

ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।
सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४ ॥

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥

द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक्पृथक् ॥ १८ ॥

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान्कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः ॥ २० ॥

हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

अर्जुन उवाच –

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥

यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

संजय उवाच –

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥ २५ ॥

तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ २६ ॥

श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥ २७ ॥

कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ।

अर्जुन उवाच –

दृष्ट्वेमान्स्वजनान्कृष्ण युयुत्सून्समुपस्थितान् ॥ २८ ॥

सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥

गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३० ॥

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१ ॥

न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।
किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥

येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥

आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥

एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥

निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्सबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२ ॥

दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।
उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

संजय उवाच –

एवमुक्त्वार्जुनः संख्ये रथोपस्थ उपाविशत् ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ।

## ॥ द्वितीयोऽध्यायः ॥

सञ्जय उवाच —

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

श्रीभगवानुवाच —

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

क्लैब्यं मास्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥ ३ ॥

अर्जुन उवाच —

कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान् ॥

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ॥

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥

न हि प्रपश्यामि ममापनुद्या-
द्यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं
राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

संजय उवाच —

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतपः ।
न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १० ॥

श्रीभगवानुवाच —

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६ ॥

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७ ॥

अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८ ॥

य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९ ॥

न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥ २१ ॥

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥ २४ ॥

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।
तथापि त्वं महाबाहो नैवं शोचितुमर्हसि ॥ २६ ॥

जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि । २७ ॥

अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८ ॥

आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् । २९ ॥

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३० ॥

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१ ॥

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२ ॥

अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३ ॥

अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम् ।
संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥

भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५ ॥

अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।
निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६ ॥

हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।
तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७ ॥

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८ ॥

एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।
बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९ ॥

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।
बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४२ ॥

कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३ ॥

भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४४ ॥

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५ ॥

यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।
तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६ ॥

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥

योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४८ ॥

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥ ५० ॥

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥ ५१ ॥

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५२ ॥

श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥ ५३ ॥

अर्जुन उवाच—

स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥ ५४ ॥

श्रीभगवानुवाच—

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५ ॥

दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७ ॥

यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥

यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥ ६० ॥

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६२ ॥

क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३ ॥

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम् ॥ ६६ ॥

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७ ॥

तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।
तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥

विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।
निर्ममो निरहंकारः स शान्तिमधिगच्छति ॥ ७१ ॥

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वास्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ७२ ॥

## ॥ तृतीयोऽध्यायः ॥

अर्जुन उवाच –

ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।
तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥

व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

श्रीभगवानुवाच –

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥

कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।
इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥

यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७ ॥

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्रापि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८ ॥

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥ ९ ॥

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥ १० ॥

देवान्भावयतानेन ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

इष्टान्भोगान्हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः ॥ १२ ॥

यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।
भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥ १३ ॥

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥ १५ ॥

एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।
अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६ ॥

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥ १७ ॥

नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥

तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२ ॥

यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।
संकरस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।
कुर्याद्विद्वांस्तथासक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५ ॥

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६ ॥

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहङ्कारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७ ॥

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८ ॥

प्रकृतेर्गुणसंमूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥ २९ ॥

मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३० ॥

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥ ३१ ॥

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३ ॥

इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४ ॥

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

अर्जुन उवाच—

अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३६ ॥

श्रीभगवानुवाच—

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।
महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७ ॥

धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च ।
यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥

इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥

## ॥ चतुर्थोऽध्यायः ॥

श्रीभगवानुवाच –

इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।
विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

एवं परंपराप्राप्तमिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परंतप ॥ २ ॥

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥

अर्जुन उवाच –

अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

श्रीभगवानुवाच –

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥ ५ ॥

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६ ॥

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥ ७ ॥

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १० ॥

ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११ ॥

काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२ ॥

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३ ॥

न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७ ॥

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥

यस्य सर्वे समारम्भाः कामसंकल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥ १९ ॥

त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित्करोति सः ॥ २० ॥

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥ २२ ॥

गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥

यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥

श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परंतप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥ ३६ ॥

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७ ॥

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥ ३८ ॥

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥ ४१ ॥

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

---

# ॥ पञ्चमोऽध्यायः ॥

अर्जुन उवाच –

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥

श्रीभगवानुवाच –

संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३ ॥

सांख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ४ ॥

यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५ ॥

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म न चिरेणाधिगच्छति ॥ ६ ॥

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपन्श्वसन् ॥ ८ ॥

प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवांभसा ॥ १० ॥

कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥ ११ ॥

युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण फले सक्तो निबद्ध्यते ॥ १२ ॥

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥ १३ ॥

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५ ॥

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६ ॥

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८ ॥

इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः ॥ १९ ॥

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद्ब्रह्मणि स्थितः ॥ २० ॥

बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम् ।
स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते ॥ २१ ॥

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ २२ ॥

शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६ ॥

स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ २७ ॥

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८ ॥

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ २९ ॥

---

## ॥ षष्ठोऽध्यायः ॥

भगवानुवाच –

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३ ॥

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।
सर्वसंकल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥

बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६ ॥

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७ ॥

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥ ८ ॥

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥ १२ ॥

समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३ ॥

प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥

युञ्जन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।
शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७ ॥

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥ १९ ॥

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ २० ॥

सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१ ॥

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥ २२ ॥

तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥ २३ ॥

संकल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥ २४ ॥

शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत् ॥ २५ ॥

यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६ ॥

प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७ ॥

युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।
सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३० ॥

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२ ॥

अर्जुन उवाच

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम् ॥ ३३ ॥

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४ ॥

श्रीभगवानुवाच –

असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥ ३५ ॥

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६ ॥

अर्जुन उवाच –

अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७ ॥

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥

एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥ ३९ ॥

श्रीभगवानुवाच–

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

प्राप्य पुण्यकृतांल्लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२ ॥

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३ ॥

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।
श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७ ॥

---

இப்படி இதில் சொல்லப்படும் பொருளினாலும் கீதை மிகச் சிறந்தது.

## ப்ரபந்த வைலக்ஷண்யம்:

கீதையின் அவதாரமே இதை நன்கு காட்டும். க்ருஷ்ணன் பாண்டவ தூதனாக துரியோதனனிடம் செல்கிறான். அவர்களுக்கு ஐந்து ஊராவது கொடுக்கும்படி கேட்கிறான். 'ஐந்து ஊசிகுத்தும் இடமும் பாண்டவர்களுக்குக் கொடேன்' என்கிறான் துரியோதனன். பாரத யுத்தம் நடக்க ஏற்பாடாகிறது. க்ஷத்ரியன் செய்யும் யுத்தம் ஓர் யஜ்ஞம். அதற்கு புண்ய பூமியும் நல்ல காலமும் அமைய வேண்டும். ஆதலால் இரு திறத்தினரும் தங்கள் சேனைகளுடன் தர்ம க்ஷேத்ரமான குரு க்ஷேத்திரத்தில் கூடியுள்ளனர்.

துரியோதனன் தந்தை திருத்ராஷ்ட்ரன். இவன் யுத்தத்தைக் காண விரும்புகிறான். ஆனால் இவனுக்கு இரண்டு கண்ணுமில்லை. உட்கண்ணான அறிவு கண்ணுமில்லை. ஸஞ்சயன் என்பவன் உத்தமன், நல்ல ஞானி. வியாசரின் அருளினால் ஞானக்கண் பெற்றவன். போரில் நடப்பதை உள்ளபடி அறிந்து அப்போதைக்கப்போது திருத்ராஷ்டரனுக்குச் சொல்லுகிறான். **தர்மக்ஷேத்ரே, குரு க்ஷேத்ரே ...... கிமகுர்வத** குரு க்ஷேத்திரத்தில் கூடின இரு திறத்தினரும் என்ன செய்தார்கள்? என்று முதலில் திருத்ராஷ்ட்ரன் ஸஞ்சயனைக் கேட்கிறான்.

## துரியோதனனின் கலக்கம்:

துரியோதனன் பாண்டவ சேனையைப் பார்க்கிறான். தன் சைன்யம் பாண்டவ சைன்யத்தை வெற்றி காண முடியாது என அவன் மனதில் படுகிறது. அப்போது அவன் தன் சேனைத் தலைவர்களைப் பார்த்து தன்னை எப்படியாவது காப்பாற்றும்படி வேண்டுகிறான்.

இப்படி தைர்யம் இழந்து சொன்ன அவனை உற்சாகப் படுத்த பீஷ்மர் சிம்மநாதம் செய்து தன் சங்கை எடுத்து ஒலிக்கிறார். மற்றவர்களும் அவரவர் சங்கங்களை எடுத்து ஊதுகிறார்கள். பகவான் க்ருஷ்ணன் தன் பாஞ்சஜன்யம் என்னும் சங்கை முழங்குகிறான். இந்த சங்கத்தின் ஒலியே துரியோதனாதிகளின் இதயத்தை பிளந்துவிட்டது என்கிறான் ஸஞ்சயன்.

# 5

## அர்ஜுனனின் சோகம்:

பிறகு அர்ஜுனன் தன் சாரதியான கண்ணனைப் பார்த்து '**சேனயோர் உபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத**' என்கிறான். ஆச்ரித பரதந்திரனை (பக்த பராதீனனை) பகவான் அர்ஜுனன் சொன்னபடியே இரண்டு சேனைகளின் இடையில் ரதத்தைக் கொண்டு போய் நிறுத்துகிறான்.

அப்போது அர்ஜுனன் துரியோதனாதிகளின் சேனையைப் பார்க்கிறான். தந்தைக்கு ஒத்தவரும், ஆசார்யர்களுமான பெரியோர்கள் அச்சேனையில் இருப்பதைக் கண்டு அர்ஜுனன் "இப்படிப்பட்ட பெரியோர்களுடன் நான் எப்படி போர் புரிவேன்! நான் யுத்தம் செய்ய விரும்பவில்லை" என்று சொல்லி, சோகித்து, காண்டீபம் என்னும் தன் வில்லைக் கையிலிருந்து நெகிழ விட்டு, ரதத்தில் அமர்ந்து உட்கார்ந்து விட்டான்

**பார்த்த ஏவ தநுர்தர:** என புகழ் பெற்ற சிறந்த வில்லாளியும் நல்ல தைர்யசாலியுமான அர்ஜுனன் இதுவரையில் இப்படி அதைர்யப்பட்டதேயில்லை. துரியோதனனும் எதிரிகளின் படையைக் கண்டு கலங்கினான். ஆனால் அவனுடைய கலக்கம் பயத்தினால்; அர்ஜுனனுடைய சோகமோ கருணையினால்.

அர்ஜுனனின் நிலையை நம் ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் — '**ஸது பார்த்தோ மஹாமநா பரம காருணிகோ தீர்கபந்து பரம தார்மிக: உபவிஸத்**' எனக் கொண்டாடியிருக்கிறார்.

**ஸது பார்த்தோ** — துரியோதனன் போலில்லை அர்ஜுனன். இவன் சிறந்த வில்லாளி என்பதை "து" காரம் காட்டுகிறது.

**மஹா மநா** — தான் வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும், பிறர் நன்றாக வாழ வேண்டும் என்கிற பரந்த மனப்பான்மை உடையவன்; சிறந்த வீரன் இவன். போரில் இவனால் ஆகாதது ஒன்றுமில்லை. அப்படியிருக்க "**நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண**" — எனக்குப் போரும் வேண்டாம் வெற்றியும் வேண்டா என்று சொல்வதற்கு காரணம் உறவினர் பக்கல் உள்ள கருணையேயாம்.

**பரம தார்மிக:**— விஷத்தைக் கொடுப்பவர், வீட்டிற்கு நெருப்பை இடுபவர் **ஆததாயி** எனப்படுபவர். துரியோதனனும் அவனைச் சேர்ந்தவர்களும் ஆததாயிகளே. அவர்களைக் கொல்வதில் தவறேயில்லை. ஆனால் அர்ஜுனன் தன் ஆசார்யர்களை அப்படி நினைக்கவில்லை அவ்வளவு தார்மிகன் இவன்.

பார்த்தசாரதியை சகாயமாகக் கொண்ட இத்தகைய அர்ஜுனன் பந்துஸ்நேகத்தினாலும் கருணையினாலும் யுத்தத்திலிருந்து நிவர்த்தி அடைந்து விட்டான் என்கிறது முதல் அத்யாயம்.

கத்தியைக் கொண்டு ரண சிகிச்சை செய்யும் ஒரு மருத்துவன் (ஆபரேஷன் செய்யும் ஒரு டாக்டர்) நோயாளி வருந்துவதைக்கண்டு இரக்கம் காட்டினால் அது அவனுடைய தொழிலுக்குத் தகாதது ஒரு நீதிபதி குற்றவாளியினிடம் இரக்கப்பட்டு அவனை தண்டிக்காவிடில் அது நீதிபதிக்கு குற்றமேயாகும். அதே போல ஒரு க்ஷத்திரியன் போர்களத்தில் எதிரிகளிடம் நட்போ இரக்கமோ கொள்வது குற்றமேயாம் என்று சொல்லிவிட்டு இரண்டாம் அத்யாயம் தொடக்கத்தில் க்ருஷ்ணன் '**குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம்**' எங்கிருந்து உனக்கு இந்த மோஹம் உண்டாயிற்று என்று கேட்டு, சில ஸ்லோகங்களில் சொல்லுகிறான். "அர்ஜுன! இந்தக் கலக்கம் க்ஷத்ரிய தர்மமன்று. இழிவான சரித்திரம். இதனை பெரியோர் ஏற்க மாட்டார்கள் உன் கீர்த்திக்கும் புகழுக்கும் பொருந்தாது" என்று பலவிதமாக அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன் சொல்லுகிறான்.

அதற்கு அர்ஜுனன்— "**கதம் பீஷ்மம் அஹம்ஸங்க்யே** வணங்கத்தக்க பீஷ்மருடன் நான் எப்படி போர் புரிவேன்?" என்று மறுபடியும் சில வார்த்தைகளைக் கூறுகிறான்.

"க்ருஷ்ணா! நீ சாந்தீபினியின் சிஷ்யனல்லவா! குலத்திலும் ஞானத்திலும் பெரியவர் பீஷ்மர்; வீரபுருஷன்; எனக்கு பாட்டனுமாவார். அவ்வாறே த்ரோணரும். இவர் எனக்கு குரு. அஸ்த்திர சஸ்த்திர வித்யையை (போர் கல்வியை) எனக்கு கற்றுக்கொடுத்தவர் இப்படி மேன்மையுள்ளவரின் பாதங்களில் மலரையிட்டு நான் அர்ச்சிப்பது ந்யாயம். அப்படி அர்ச்சிக்காமல் இருப்பதே குற்றம். அப்படியிருக்க இத்தகையவர்களின் மார்பில் அம்பையிட்டு அடிப்பது ந்யாயமாகுமோ? என்று பலவிதமாகச் சொல்லி, கலக்கமுற்று முடிவில் அர்ஜுனன் க்ருஷ்ணனைப் பார்த்து :—

**யச்ச்ரேய: ஸ்யாந் நிஸ்சிதம் ப்ரூஹி தன்மே! சிஷ்யஸ் தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்!!** எதைச் செய்தால் எனக்கு ச்ரேயஸ் சித்திக்குமோ அதை கலங்கியிருக்கும் என்னால் நிச்சயிக்க முடியவில்லை. நீ எனக்கு ஆசார்யன். நான் உனக்கு சிஷ்யன். எனக்கு எது ஹிதமோ (ஆத்ம நன்மையோ) அதை நீ எனக்கு உபதேசம் செய்ய வேண்டும்" என்று சொல்லி க்ருஷ்ணனை சரணம் பற்றுகிறான்.

இதை வ்யாஜமாகக் (பற்றுசாக) கொண்டு க்ருஷ்ணன் உலகத்தாருக்குச் சிறந்த சாஸ்திரமான கீதையை உபதேசிக்க ஆரம்பிக்கிறான்

**ஈச்வரனும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட்டிருக்கும்:**

ஸர்வஜ்ஞரும் ஸர்வ சக்தருமான பகவான் உலகத்தவர்களுக்கு நன்மையை உபதேசிக்க விரும்பி இங்கு வந்து க்ருஷ்ணனாய் அவதரித்தான். எவரும் இவனது ஞான சக்தியை அறிந்து இவனை ஆசார்யனைப் பற்றி உபதேசம் பெற விரும்பவில்லை எல்லோரும் வியாஸ பராசரர்களையே ஞானவான்களாகக் கருதி அவர்களையே ஆசார்யர்களாகப் பற்றினார்களே ஒழிய, க்ருஷ்ணனை எவரும் மதித்துப் பார்க்கவில்லை. இது பகவானுக்கு ஒரு பெரிய குறையாக இருந்தது அர்ஜுனன் "சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று சொன்ன உடனே, இவனைப் பற்றாசாகக் கொண்டு, சிறந்த சாஸ்திர அர்த்தத்தை யெல்லாம் கீதையை உபதேசிப்பதின் மூலம் உலகத்தவரின் உய்வுக்காக வாரி வழங்கி விட்டான ஸ்ரீ க்ருஷ்ணன்.

गीताशास्त्रं इदं पुण्यं यःपठेत्प्रयतः पुमान् ।
विष्णोः पदमवाप्नोति भयशोकादिवर्जितः ।।

**கீதா சாஸ்த்ரம் இதம் புண்யம் ய: படேத் ப்ரயத: புமான்**
**விஷ்ணோ: பதம் வாப்நோதி பய சோகாதி வர்ஜித:**

இந்த பகவத் கீதையை படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் மன சாந்தியும், இஹபர நன்மைகளும் உண்டாகும். சோகம், பயம் இவைகள் நீங்கும் என்பது நிச்சயம்.

**பரமாசார்யரான ஆளவந்தாரின் தனியன்.**

यत्पदांभोरुहध्यान – विध्वस्ताशेषकल्मषः ।
वस्तुतां उपयातोऽहम् यामुनेयं नमामि तम् ।।

**யத் பதாம் போருஹ த்யாந வித்வஸ்தா சேஷ கல்மஷ:**
**வஸ்து தாம் உபயா தோZம் யாமுநேயம் நமாமிதம்.**

எவருடைய திருவடித் தாமரையை த்யானம் செய்வதினால் எல்லா வினைகளும் தொலையப்பெற்று, நான் ஸத்தை பெற்றவனா வேனோ அந்த ஆளவந்தாரை வணங்குகிறேன்.

ஸ்ரீ வைஷ்ணவ ப்ரதமாசாரியர் ஸ்ரீ பாஷ்யகாரர் என்னும் ஸ்ரீராமாநுஜர். அவருடைய ப்ரதமாசாரியர் ஸ்ரீ ஆளவந்தார். இவர் **கீதா ஸங்க்ரஹம்** என்கிற 32 ஸ்லோகங்களினால் கீதையின் பொருளை அழகாய் சுருங்க அருளிச் செய்திருக்கிறார்.

## கீதா ஸங்க்ரஹம்

(முதல் ஸ்லோகம்)

स्वधर्मज्ञानवैराग्य साध्यभक्त्येकगोचरः ।
नारायणः परं ब्रह्म गीताशास्त्रे समीरितः ॥

**ஸ்வதர்ம ஜ்ஞாந வைராக்ய ஸாத்ய பக்த்யேக கோசர**
**நாராயண பரம் ப்ரஹ்ம கீதா சாஸ்த்ரே ஸமீரித :**

சேதனர் அவரவர்களுக்குரிய கர்மா நுஷ்டானத்தைச் செய்ய வேண்டும் என்பதையும், ஞான யோகத்தையும், அதனால் உண்டாகும் விஷய வைராக்யத்தையும், அதனால் பெறக்கூடிய பக்தியோகத்தையும் சொல்லி, அந்த பக்தி ச்ரிய: பதியான நாராயணன் ஒருவனிடமே இருக்க வேண்டுமென்பதையும், கீதா சாஸ்திரத்தில் ஸ்ரீ க்ருஷ்ணன் அருளிச் செய்திருக்கிறான்.



ஸ்ரீ

# ஸ்ரீமத் பகவத்கீதை

## முதல் அத்யாயம்

धृतराष्ट्र उवाच—

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत संजय ॥ १ ॥

*திருதராஷ்ட்ர உவாச—*

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥ 1

*திருதராஷ்ட்ரன் சொன்னது—*

என் புதல்வரும் பாண்டுவின் புத்திரர்களும் தர்மம் விளையும் பூமியான குருக்ஷேத்திரத்தில் கூடினவர்கள் அங்கு என்ன செய்தார்கள்? என்று ஸஞ்ஜயனை திருதராஷ்ட்ரன் முதல் முதலில் கேட்கிறான்.

மதுசூதன சரஸ்வதி என்பவர் ஒரு சிறந்த அத்வைதி. க்ருஷ்ணபக்தி நிறைந்தவர். இவர் இந்த ஸ்லோகத்திற்கு அழகான ஒரு கருத்து சொல்லியிருக்கிறார்.

ஒரு போஜனசாலையில் பலர் கூடியிருந்தால் அவர்கள் அங்கு என்ன செய்கிறார்கள் என்பது என்ன கேள்வி? போஜனம்தான் செய்வார்கள். அதுபோல யுத்த பூமியில் கூடினவர்கள் போர்தானே செய்வார்கள்? அப்படியிருக்க அங்கு என்ன செய்தார்கள் என்று கேட்கும் திருதராஷ்ட்ரனின் கருத்து என்ன?

பாண்டவர்கள் ஏற்கனவே தர்மிஷ்டர்கள். அந்த தர்ம பூமியில் வந்தவுடன் அவர்களுக்கு தர்மபுத்தி மேலெழுந்து, நமக்கு யுத்தமும் வேண்டாம், ராஜ்யமும் வேண்டாம், ஏற்கனவே காட்டில் இருந்து பழக்கப்பட்டிருக்கிறோம், காட்டிற்கே போய்விடுவோம் என்று போரிலிருந்து விலகி விட்டார்களா? அல்லது தன் புத்திரர்களுக்குத்தான் நல்ல புத்தி உண்டாகி, பாண்டவர்களுக்கு ஐந்து ஊரே கொடுத்து

விடுவோம் என்று தோன்றிப் போரிலிருந்து விலகிவிட்டார்களா? என்ற கருத்துடன் அவன் கேட்டிருக்கிறான். இவ்விரண்டில் முதல் சொன்னதே அவனுக்கு அபிமதம் (இஷ்டம்). அவர்களுக்கு ஐந்து ஊர் கொடுப்பதை அவன் விரும்பவில்லை.

இன்னும், இங்கே திருதராஷ்ட்ரன் மாமகா: என்று தன் புத்திரர்களை அபிமானித்துச் சொன்னதே, அவர்கள் விநாசத்திற்குக் காரணம். துச்சரித்திரமுள்ளவர்களுடைய அபிமானம் நமக்கு விநாசத்தையே கொடுக்கும். மஹான்களின் அபிமானமே நமக்கு ச்ரேயஸ் சித்திக்கச் செய்யும், என்கிற உண்மையும் இங்கு வெளியாகிறது.

सञ्जय उवाच—

दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसंगम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

ஸஞ்ஜய உவாச—

த்ருஷ்ட்வா து பாண்டவாநீகம் வ்யூடம் துர்யோதனஸ்ததா ।
ஆசார்யமுபஸங்கம்ய ராஜா வசனமப்ரவீத் ॥ 2

பச்யைதாம் பாண்டுபுத்ராணாமாசார்ய மஹதீஞ் சமூம் ।
வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ சிஷ்யேண தீமதா ॥ 3

ஸஞ்ஜயன் கூறியது—

அரசனை துரியோதனன் போருக்கு அணிவகுத்து நிற்கும் பாண்டவ சேனையைப் பார்த்து தன் ஆசார்யரான துரோணரிடம் பின்வருமாறு சொன்னான்:

ஆசார்யரே! உமது சிஷ்யனும் துருபதன் புதல்வனுமான புத்திமான் த்ருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப்பட்டுள்ள பாண்டவ சேனையைப் பாரும்.

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५ ॥

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுந ஸமா யுதி ।
யுயுதாநோ விராடச்ச த்ருபதச்ச மஹாரத: ॥ 4

த்ருஷ்டகேதுச் சேகிதாந: காசிராஜச்ச வீர்யவாந் ।
புருஜித் குந்திபோஜச்ச சைப்யச்ச நரபுங்கவ: ॥ 5

யுதாமந்யுச்ச விக்ராந்த உத்தமௌஜாச்ச வீர்யவாந் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாச்ச ஸர்வ ஏவ மஹாரதா: ॥ 6

இந்த பாண்டவ சேனையில் சூரர்களும் பெரிய வில்லாளிகளும் போர்புரிவதில் பீமார்ஜுனர்களுக்கு ஒத்தவருமான யுயுதானன், விராடன், மஹாரதனான த்ருபதன் த்ருஷ்டகேது சேகிதானன், வீரனான காசிராஜன் புருஜித் குந்திபோஜன், மனிதச்ரேஷ்டனான சைப்யன், பராக்ரமசாலியான யுதாமன்யு உத்தமௌஜன் வீரமிக்க சுபத்ரையின் மகன் அபிமன்யு, திரௌபதியின் புதல்வர்கள் இப்படி பல மஹாரதர்கள் இருக்கிறார்கள். (பதினாயிரம்பேர்களை ஒருவனாகயிருந்து வெல்லுபவன் மஹாரதன் எனப்படுவன்.)

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७ ॥

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिर्जयद्रथः ॥ ८ ॥

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११ ॥

அஸ்மாகம் து விசிஷ்டா யே தாந் நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தான்
ப்ரவீமி தே ॥ 7

பவான் பீஷ்மச்ச கர்ணச்ச க்ருபச்ச ஸமிதிஞ்ஜய: ।
அச்வத்தாமா விகர்ணச்ச ஸௌமதத்திர் ஜயத்ரத: ॥ 8

அன்யே ச பஹவ: சூரா மதர்த்தே த்யக்த ஜீவிதா: ।
நாநா சஸ்த்ர ப்ரஹரணா: ஸர்வே யுத்த விசாரதா: ॥ 9

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।
பர்யாப்தந்த்வித மேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ॥ 10

அயனேஷு ச ஸர்வேஷு யதாபாக மவஸ்த்திதா: ।
பீஷ்ம மேவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி ॥ 11

*பிராஹ்மணோத்தமரே ! இனி நம் சிறந்த சேனைத் தலைவர்களையும் சொல்லுகிறேன் கேளும்.*

*தாங்கள், பீஷ்மர், கர்ணன், போரில் வெற்றியே காணும் கிருபாசாரியர், அசுவத்தாமன், விகர்ணன், சோமதத்தனின் புத்திரன் பூரிசிரவசு, ஜயத்ரதன்;*

*இன்னும் பல சூரர்கள் என்பொருட்டு உயிரைக் கொடுத்து போர்புரிய பல ஆயுதங்களைத் தாங்கி எல்லோரும் யுத்தத்தில் தேர்ந்தவர்களாயிருக்கின்றனர்.*

*பீஷ்மரால் காக்கப்பட்ட நம் சேனை அபரிமிதமாக உள்ளது. பீமனால் காக்கப்பட்ட பாண்டவ சேனையோ மிதமாக உள்ளது. ஆனாலும் நம் சேனை பாண்டவ சேனையை வெற்றிகாணப் போதாது. ஆகையினால் நீங்கள் எல்லோரும் அவரவரிடங்களிலிருந்து பீஷ்மரைக் கவனமாகக் காக்க வேண்டும்.*

तस्य सञ्जनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥ १२ ॥

ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।
सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४ ॥

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥

द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक्पृथक् ॥ १८ ॥

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

தஸ்ய ஸஞ்ஜநயந் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ: I
ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: சங்கந்தத்மௌ ப்ரதாபவாந் II

தத: சங்காச்ச பேர்யச்ச பணவாநககோமுகா: I
ஸஹஸைவாப்யஹந்யந்த ஸ சப்தஸ்துமுலோऽபவத் II 13

தத: ச்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்தநேஸ்திதௌ I
மாதவ: பாண்டவச்சைவ திவ்யௌ சங்கௌ ப்ரதத்மது: II

பாஞ்சஜந்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தந் தனஞ்ஜய: I
பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா வ்ருகோதர: II

அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர: I
நகுல: ஸஹதேவச்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ II 16

காச்யச்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மஹாரத: ।
த்ருஷ்டத்யும்நோ விராடச்ச ஸாத்யகிச்சாபராஜித: ॥ 17

த்ருபதோ த்ரௌபதேயாச்ச ஸர்வச: ப்ருதிவீபதே ।
ஸௌபத்ரச்ச மஹாபாஹு: சங்காந் தத்மு: ப்ருதக் ப்ருதக்॥

ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் ।
நபச்ச ப்ருதிவீஞ்சைவ துமுலோ வ்யநுநாதயன் ॥ 19

இப்படி துரியோதனன் சொன்னதும் வீரரும் குருவம்சத்துப் பெரியவரும், பாட்டனுமான பீஷ்மர் துரியோதனனை உத்ஸாகப்படுத்த உரத்த குரலில் சிம்மநாதம் செய்து கர்ஜித்து தன் சங்கத்தை ஊதினர்.

பிறகு பல சங்கங்களும் பேரிகைகளும் மத்தளங்களும் தப்பட்டைகளும் கொம்புகளும் உடனே முழங்கின. அந்த முழக்கம் ஓர் பேரொலியாக ஆயிற்று.

வெண்மை குதிரைகள் பூட்டிய பெரிய தேரில் அமர்ந்திருந்த கிருஷ்ணனும் அர்ஜுனனும் தெய்வத்தன்மை பொருந்திய தங்கள் சங்கங்களை முழங்கினர்.

க்ருஷ்ணன் பாஞ்சஜன்யம் என்னும் தன் சங்கையும், அர்ஜுனன் தேவதத்தம் என்னும் சங்கையும், பயங்கர செயலைச் செய்யும் பீமன் பௌண்ட்ரம் என்னும் சங்கத்தையும் ஊதினர்கள்.

குந்தி புத்திரனை யுதிஷ்டிரராஜா அனந்த விஜயம் என்கிற சங்கையும், நகுல சகதேவர்கள் ஸுகோஷம் மணி புஷ்பகம் என்னும் சங்குகளையும் ஊதினர்கள்.

விற்படையில் சிறந்த காசிராஜனும் மஹாரதனை சிகண்டியும், த்ருஷ்டத்யும்னனும், விராடதேசத்தரசனும், பிறரால் ஜெயிக்க முடியாத ஸாத்யகியும் த்ருபதனும், த்ரௌபதியின் புத்திரர்களும், புஜபலமிக்க சுபத்ரையின் குமாரன் அபிமன்யுவும் எல்லோரும் அவரவர் சங்கங்களை ஊதினர்கள்.

ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலிகளால் நிரப்பிய அந்த பேரொலி துரியோதனாதிகளின் இருதயங்களைப் பிளந்தது.

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान्कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः ॥ २० ॥

हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

அத வ்யவஸ்திதாந் த்ருஷ்ட்வா தார்தராஷ்ட்ராந் கபித்வஜ: ।
ப்ரவ்ருத்தே சஸ்த்ரஸம்பாதே தநுருத்யம்ய பாண்டவ: ॥ 20

ஹ்ருஷீகேசம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே ।

அநுமார்க் கொடியை உடைய அர்ஜுனன் போருக்குத் தயாராயுள்ள துரியோதனாதிகளைப் பார்த்துவிட்டு பகவானுன கண்ணனைப் பார்த்து இவ்வார்த்தையைச் சொன்னுன். என்கிறுன் ஸஞ்சயன்.

अर्जुन उवाच—

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥

यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

அர்ஜுன உவாச—

ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மேSச்யுத ॥

யாவதேதாந் நிரீக்ஷேSஹம் யோத்துகாமாநவஸ்திதான் ।
கைர்மயா ஸஹ யோத்தவ்யமஸ்மிந் ரணஸமுத்யமே ॥

யோத்ஸ்யமாநாநவேக்ஷேSஹம் ய ஏதேSத்ர ஸமாகதா: ।
தார்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர் யுத்தே ப்ரியசிகீர்ஷவ: ॥

அர்ஜுனன் கூறியது—

ஹே கிருஷ்ணு ! என் ரதத்தைக் கொண்டுபோய் இரண்டு சேனைகளின் நடுவில் நிறுத்து. இந்த போரில் நான் யாருடன் யுத்தம் செய்யவேண்டும். அந்த கெட்ட எண்ணமுள்ள

துரியோதனனுக்கு உதவி செய்ய யார் யார் வந்திருக்கிறார்கள் என்பதை நான் காணவேணும் என்கிறான் அர்ஜுனன்.

सञ्जय उवाच—

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥ २५ ॥

तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ २६ ॥

श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥ २७ ॥

कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ।

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசநே பாரத ।
ஸேநயோருபயோர் மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் ॥

பீஷ்மத்ரோண ப்ரமுகத: ஸர்வேஷாஞ்ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த்த பச்யைதாந் ஸமவேதாந் குரூநிதி ॥

தத்ராபச்யத் ஸ்திதாந் பார்த்த: பித்ருநத பிதாமஹாந் ।
ஆசார்யாந் மாதுலாந் ப்ராத்ருந் புத்ராந் பௌத்ராந்
ஸகீம்ஸ்ததா ॥

ச்வசுராந் ஸுஹ்ருதச்சைவ ஸேநயோருபயோரபி ।
தாந்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந் பந்தூநவஸ்திதாந் ॥

க்ருபயா பரயாSSவிஷ்டோ விஷீதந்நிதமப்ரவீத் ।

ஸஞ்சயன் கூறியது—

இவ்வாறு அர்ஜுனன் சொன்னதும் ஆச்ரித பாரதந்த்ரனான பகவான் பார்த்தசாரதி ரதத்தை இரு சேனைகளின் நடுவில், பீஷ்மர் துரோணர்களுக்கு எதிரில், எல்லா அரசர்களின்

முன்பு சிறந்த ரதத்தை நிறுத்தி, "அர்ஜுனா! இங்கு உன்னுடன் போர்புரியக் கூடியுள்ள கௌரவர்களைப் பார்" என்றான்.

அப்போது அர்ஜுனன் அப்போர்க்களத்திலிருந்த தகப்பன்மார்களையும், பாட்டன்மார்களையும், ஆசார்யர்களையும் அதேபோல மாமன்மார்களையும் சகோதரர்களையும் புத்திரர்களையும் நண்பர்களையும் கண்டான்.

குந்திபுத்திரனான அர்ஜுனன் அங்கே தன் எதிரில் நிற்கும் உறவினர்களைக் கண்டு அதிக கருணையால் மனம் தளர்ந்து துக்கித்துப் பின்வருமாறு சொன்னான்.

अर्जुन उवाच—

दृष्ट्वेमान्स्वजनान्कृष्ण युयुत्सून्समुपस्थितान् ॥ २८ ॥

सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥

गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ३० ॥

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१ ॥

न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।
किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥

येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥

आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥

एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥

निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्सबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२ ॥

दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।
उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

**அர்ஜுந உவாச—**

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும்
ஸமுபஸ்திதம் ॥

ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிசுஷ்யதி ।
வேபதுச்ச சரீரே மே ரோமஹர்ஷச்ச ஜாயதே ॥ 29

காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக் சைவ பரிதஹ்யதே ।
ந ச சக்நோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மந: ॥ 30

நிமித்தாநி ச பச்யாமி விபரீதாநி கேசவ ।
ந ச ச்ரேயோऽநுபச்யாமி ஹத்வா ஸ்வஜநமாஹவே ॥ 31

ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச ।
கிந்நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகைர் ஜீவிதேந வா ॥

யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா:
ஸுகாநி ச ।
த இமேऽவஸ்திதா யுத்தே ப்ராணாந்ஸ்த்யக்த்வா தநாநி ச ॥

ஆசார்யா: பிதர: புத்ரா: ததைவ ச பிதாமஹா: ।
மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்திநஸ் ததா ॥

ஏதாந் ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந ।
அபி த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ॥

நிஹத்ய தார்தராஷ்ட்ராந் ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்ஜநார்தந ।
பாபமேவாச்ரயேதஸ்மாந் ஹத்வைதாநாததாயிந: ॥ 36

தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ராந்
ஸபாந்தவாந் ।
ஸ்வஜநம் ஹி கதம் ஹத்வா ஸுகிந: ஸ்யாம மாதவ ॥ 37

யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹதசேதஸ: ।
குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் ॥ 38

கதம் ந ஜ்ஞேயமஸ்மாபி: பாபாதஸ்மாந்நிவர்திதும் ।
குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜநார்தந ॥ 39

குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸநாதநா: ।
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்நமதர்மோऽபிபவத்யுத ॥ 40

அதர்மாபிபவாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ॥

ஸங்கரோ நரகாயைவ குலக்நாநாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோதகக்ரியா: ॥ 42

தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கரகாரகை: ।
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாச்ச சாச்வதா: ॥ 43

உத்ஸந்ந குலதர்மாணும் மநுஷ்யாணும் ஜநார்தந ।
நரகே நியதம் வாஸோ பவதீத்யநுசுச்ரும ॥ 44

அஹோ பத மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதா வயம் ।
யத்ராஜ்யஸுகலோபேந ஹந்தும் ஸ்வஜநமுத்யதா: ॥ 45

யதி மாமப்ரதீகாரம் அசஸ்த்ரம் சஸ்த்ரபாணய: ।
தார்தராஷ்ட்ரா ரணே ஹந்யுஸ்தந்மே க்ஷேமதரம் பவேத் ॥

க்ருஷ்ணு ! போர்புரிய கூடியிருக்கும் இந்த உறவினர்களைப் பார்த்து என் அவயவங்கள் சோர்வடைகின்றன. வாயும் உலர்கிறது, என் உடல் நடுங்குகிறது, மயிர் சிலிர்க்கிறது. கையில் இருந்து என் காண்டீபம் தானுகவே நழுவுகிறது. உடல் எரிகிறது. என்னுல் நிற்கமுடியவில்லை. என் மனம் சுழல்கிறது.

ஹே கேசவ ! நான் கெட்ட சகுனங்களைக் காண்கிறேன். சொந்த ஜனங்களைக்கொல்வதில் என்ன நன்மையுண்டு ?

கோவிந்தா ! இவர்களைக்கொன்று பெறும் ராஜ்யத்தினுலோ, போகங்களினுலோ உயிர் வாழ்வதினுலோ என்ன பயன் ?

எவர்களுக்காக நாம் ராஜ்ய போகங்களை விரும்புகிருேமோ அவர்களே இங்கு தங்கள் உயிரையும் பொருளையும் துறந்து போருக்கு கூடியிருக்கின்றனர்.

ஆசார்யர்கள், தகப்பன்மார்கள், பிள்ளைகள், பாட்டன் மார்கள், பேரன்கள், அம்மான்கள், மாமனுர் மைத்துனர் சம்பந்திகளுமாக இருக்கின்றனர்.

மதுசூதனு ! மூவுலகும் கிடைப்பதாகயிருந்தாலும், நான் இவர்களைக் கொல்ல சம்மதியேன். இந்த அல்ப ராஜ்யத்திற்காகவா நான் இவர்களைக் கொல்வேன்.

ஜனுர்த்தனு ! துரியோதனுதிகள் நூறுபேர்களை மாத்திரம் கொல்வதினுலும் நமக்கு என்ன சந்தோஷம் உண்டாகும். அவர்கள் ஆததாயிகள், பாபிகள் என்றுலும் நமக்கு கெடுதல் செய்தவர்களுக்கு பதில் தீம்பு செய்வதினுல் நமக்கு பாபமே சித்திக்கும்.

மாதவ! ஆதலால் நம் உறவினர்களான துரியோதனாதிகளை நாம் கொல்வது தகாது. உறவினர்களைக் கொன்றுவிட்டு நாம் என்ன சுகத்தைப் பெறப்போகிறோம்!

போரினால் விளையும் பல கேடுகள் —

பேராசையினால் அறிவுகெட்ட இவர்கள் போரினால் ஏற்படும் குல நாசத்தையும் பாவத்தையும் அறியவில்லை.

ஜனார்த்தன! குல நாசத்தினால் ஏற்படும் கெடுதலை நன்கு அறிந்த நாம் இந்த பாபச்செயலிலிருந்து விலக வேண்டாமா?

குலநாசமடைந்தால் தொன்று தொட்டு வரும் குல தர்மங்கள் அழியும். தருமம் அழிந்தால் குலம் முழுதும் அதர்மம் சூழ்ந்துவிடும்.

க்ருஷ்ணா! அவ்வாறு அதர்மம் மேலிட்டால் குலப் பெண்கள் கற்பை இழந்து கெட்டுப்போவர். பெண்கள் கெட்டால் ஜாதிக்கலப்பு ஏற்படும்.

ஜாதிக் கலப்பு மஹாபாபம் —

இந்த ஜாதிக்கலப்பு என்பது மஹாபாபம் அன்றோ! இப்படி ஜாதி குலம் இவைகளை அழித்தவர்களுக்கு ரௌரவாதி கொடும் நரகமே சித்திக்கும். அவர்களின் பித்ருகளுக்கும் சிராத்தபிண்டம், தர்ப்பணம் செய்வாரின்றி அவர்களும் நரகில் விழுவார்கள்.

வர்ணக்கலப்பை உண்டாக்கும் இத்தகைய தீங்குகளினால் நிலையான ஜாதி தர்மம் அழியும்.

குலதர்மம் அழிதல் —

ஜனார்த்தன! குலதர்மம் அழிந்த மனிதர்களுக்கு நிலையான நரகவாசமே கிடைக்கும் என்பதைக் கேட்டிருக்கிறோம்.

ஐயோ! என்ன பாபம்! ராஜ்ய ஆசையினால் உறவினர்களைக் கொல்வதான மஹா பாபத்தைச் செய்ய நாம் துணிந்தோமே!

ஒருக்கால் யுத்தம் செய்யாமலிருக்கும் என்னை துரியோதனாதிகள் கொல்வரேயாயினும் அது எனக்கு நன்மையே ஆகும்.

संजय उवाच—

एवमुक्त्वार्जुनः संख्ये रथोपस्थ उपाविशत् ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத் ।
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்நமாநஸ: ॥ 47

ஸஞ்ஜயன் கூறியது—

அர்ஜுனன் யுத்தபூமியில் இவ்வாறு குல நாசத்தையும் அதனால் ஏற்படும் பாபத்தைக் குறித்தும் சோகித்து மனம் நொந்து காண்டீபம் என்கிற தன் வில்லை கீழே எறிந்துவிட்டு தன் தேர் தட்டில் உட்கார்ந்துவிட்டான், என்கிறான் ஸஞ்ஜயன்.

முதல் அத்யாயம் முற்றிற்று.

## இரண்டாம் அத்யாயம்

सञ्जय उवाच—

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

ஸஞ்சய உவாச—

தம் ததா க்ருபயாவிஷ்டமச்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீதந்தமிதம் வாக்யமுவாச மதுஸூதந: ॥ 1

ஸஞ்சயன் சொன்னது—

முன் அத்யாயத்தில் சொன்னபடி தகாதவர்களைக்குறித்து வருந்தி கண்ணீர்விட்டு அர்ஜுனன் ரதத்தில் உட்கார்ந்து விட்டான். அவனைப்பார்த்து பகவான் கிருஷ்ணன் சில வார்த்தைகளைச் சொன்னான்.

श्रीभगवानुवाच—

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

क्लैब्यं मा गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥ ३ ॥

ஸ்ரீபகவான் உவாச—

குதஸ் த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் |
அநார்யஜுஷ்ட மஸ்வர்க்ய மகீர்த்திகர மர்ஜுந || 2

க்லைப்யம் மாஸ்ம கம: பார்த்த நைதத் த்வய்யுபபத்யதே |
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்ப்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட
பரந்தப || 3

க்ருஷ்ணன் சொன்னது—

அர்ஜுன! உன் ஆத்ம தன்மைக்குச் சேராததும் உனக்கு இழிவை உண்டுபண்ணக்கூடியதுமான இந்த சோகம் அறிவில்லாதவனைப்போல தகாத இடத்தில் உனக்கு ஏனோ உண்டாயிற்று. (கச்மலம் என்றால் அழுக்கு, தோஷம்)

போருக்கு வந்த பிறகு சத்ருக்களிடம் கருணை உண்டாவது குற்றமாகும். அர்ஜுன! லோகத்தில் பாபிகளைக் கொன்றுதானே தர்மத்தை நிலைநாட்டவேண்டும். குந்தியின் வயிற்றில் பிறந்த நீ இப்படி வருந்தலாமா? இந்த சோகம் உனக்குத் தகாது. இது மன பலஹீனத்தினால் உண்டானது. ஆதலால் அர்ஜுன! நீ இந்த சோகத்தைவிட்டு தைர்யமாய் யுத்தம் செய்ய எழுந்திரு என்கிறான் கண்ணன்.

अर्जुन उवाच—

कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान् ॥ ५ ॥

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ॥

அர்ஜுன உவாச—

கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுஸூதந |
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதந || 4

குருநஹத்வா ஹி மஹாநுபாவான்
ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே |
ஹத்வார்த்த காமாம்ஸ்து குருநிஹைவ
புஞ்ஜீய போகான் ருதிரப்ரதிக்தான் || 5

ந சைதத்வித்ம: கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: |
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்-
தேऽவஸ்திதா: ப்ரமுகே தார்தராஷ்ட்ரா: || 6

அர்ஜுனன் சொன்னது—

இப்படி க்ருஷ்ணன் சொன்னதைக்கேட்ட அர்ஜுனன் மறுபடியும் சொல்லுகிறான்.

மதுசூதன! பூஜிக்கத்தகுந்த பீஷ்மர் துரோணர் இவர்களை நான் அம்புகளால் அடித்து எப்படிப் போர் புறிவேன்.

நாம் அவர்களை ஜயிக்கலாம். அல்லது அவர்கள் நம்மை ஜயிக்கலாம். இவ்விரண்டில் எது சிறந்தது என்பதை நான் உணரவில்லை. எவர்களைக்கொன்று நாம் உயிர்வாழ விரும்போமோ அந்த திருதராஷ்ட்ரன் புத்திரர்களே நம் முன் எதிர்த்து நிற்கின்றனர்.

कार्पण्यदोषोपहतस्वभावः
पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे
शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥ ७ ॥

न हि प्रपश्यामि ममापनुद्या-
द्यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं
राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

கார்பண்ய தோஷோபஹத ஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: |
யச்ச்ரேய:ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந்மே
சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் || 7

ந ஹி ப்ரபச்யாமி மமாபநுத்யாத்
யச்சோக முச்சோஷணமிந்த்ரியாணாம் |
அவாப்ய பூமாவஸபத்நம் ருத்தம்
ராஜ்யம் ஸுராணாமபி சாதிபத்யம் || 8

க்ருஷ்ணா ! எது தர்மம், எது அதர்மம் என்பது எனக்குத் தெரியவில்லை. இயற்கையாய் எனக்குள்ள தைர்யம் இப்போது எனக்கில்லை. இதந சோகத்தைப்போக்க உபாயமும் எனக்குத் தெரியவில்லை.

ஆதலால் கிருஷ்ணா ! எதைச் செய்தால் எனக்கு ச்ரேயஸ் சித்திகுமோ, எது என் ஆத்மாவுக்கு சிறந்த தன்மையை அளிக்கக்கூடியதோ அதை நீயே நிச்சயித்து எனக்கு உபதேசம் செய்யவேண்டும். நான் உனது சிஷ்யன் நீ எனது ஆசார்யன் உன்னை நான் சரணம் பற்றுகிறேன். சரண் புகுந்த என்னை நீ கட்டளையிடு.

கிருஷ்ணா ! இந்த உலகமுழுதும் ஒரு குடைக்கீழ் ஆளுவதாக இருநதாலும் அல்லது இந்திரலோகமே கிடைப்பதாக இருந்தாலும் அவைகளால் இப்போது எனக்கு ஏற்பட்டிருக்கும சோகம்நீஙகாது. ஆகையினால் நீயேதான் இந்த என் மனக் கலக்கத்தைப் போக்கக்கூடிய உபாயத்தை ஆராய்ந்து எனக்கு அருளவேண்டும், என்று அர்ஜுனன் க்ருஷ்ணனை பிரார்த்திததான.

संजय उवाच—

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतपः
न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १० ॥

ஸஞ்ஜய உவாச—

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்த முக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ॥

தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ பாரத ।
ஸேநயோருபயோர் மத்யே விஷீதந்தமிதம் வச: ॥ 10

ஸஞ்ஜயன் கூறியது—

எப்படிப்பட்ட பகைவரையும் போரில் வெல்ல சக்தி பெற்ற அர்ஜுனன் இவ்வாறு கூறி நான் யுத்தம் புரியேன் என்று சொல்லி தன் தேரில உட்கார்ந்து விட்டான்.

பார்த்த ஏவ தநுர்தர! என கொண்டாடப்பட்ட அர்ஜுனன், க்ருஷ்ணன சொன்ன வார்த்தையைக் கேளாமல் சோகித்து கலங்கி போரிலிருந்து விலகினது என்ன ஆச்சர்யம் என்கிறுன் ஸஞ்ஜயன்.

முதல் அத்யாயமும் இரண்டாம் அத்யாயம் பத்து ச்லோகங்கள் முடிய அர்ஜுன விஷாத யோகம் முடிவடைகிறது. இதுவரையில் உள்ளவை உபோத்காதம் (முன்னுரை). எப்போது எப்படி, எதற்காக கீதை அவதரித்தது என்பதே சொல்லப்பட்டது.

## ஸ்ரீ ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹம்

अस्थानस्नेहकारुण्यधर्माधर्मधियाकुलम् ।
पार्थं प्रपन्नमुद्दिश्य शास्त्रावतरणं कृतम् ॥

அஸ்த்தாந ஸ்நேஹ காருண்ய தர்மாதர்மதியாSSகுலம் ।
பார்த்தம் ப்ரபந்நம் உத்திச்ய சாஸ்த்ராவதாணம் க்ருதம் ॥

தகாத இடத்தில் ஸ்நேகமும் கருணையும் உடையவனும், ஸ்வதர்மத்தில் (க்ஷத்ரிய தர்மமான யுத்தத்தில்) அதர்ம புத்தி உடையவனும், இவைகளால் கலக்கமுற்று பகவானை சரணாகதி செய்த அர்ஜுனனைக் குறித்து க்ருஷ்ணன் தத்வஹித புருஷார்த்த உபதேசம் செய்ய ஆரம்பிக்கிறுன்.

*ஸ்ரீமதே ராமாநுஜாய நம:*

# ஸ்ரீமத் பகவத்கீதை

## உபதேச ஆரம்பம்

श्रीभगवानुवाच—

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११ ॥

*ஸ்ரீ பகவாந் உவாச—*

**அசோச்யாநந்வசோசஸ் த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே |**
**கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா: ||**

*ஸ்ரீ பகவாந் கூறியது—*

*அர்ஜுநா! நீ வருந்தத்தகாதவர்களைக் குறித்து வருந்துகிறாய். அறிவுள்ளவன் போலவும் பேசுகிறாய். அறிவுள்ளவர்கள் சரீரத்தைப்பற்றியும், ஆத்மாவைப்பற்றியும் சோகிக்க மாட்டார்கள்*

அர்ஜுனன், பீஷ்மர் த்ரோணர்களை நான் எப்படி அம்பினால் அடித்துக் கொல்வேன் என்று அறிவில்லாதவன் போலவும், பித்ரு காரியம் செய்யப்படாமல் அவர்கள் நரகம் போவார்களே என்று ஆத்மா அழிவில்லாதது என ஞானியைப் போலவும் பேசியிருக்கிறான். இதை மனத்தில் கொண்டு, அவனைப் பரிஹஸிப்பதுபோல க்ருஷ்ணன் பேசுகிறான்.

இந்த உடல் என்றைக்காவது ஒருநாள் அழியத்தான் போகிறது. இதை உலக அனுபவத்தில் நாம் அறிகிறோம். ஆனால் இந்த அறிவு உறுதியாக நமக்கில்லை. வெள்ளரிப் பழத்திற்கு அள்ளு கட்டினுப் போல — இச்சரீரம், என்பர் பெரியோர். வெள்ளரிப்பழம் விற்பவர் விடியற்காலையில் நல்ல பழமாகப் பறித்து அது விற்கும் வரையில் வெய்யிலில் வெடிக்காமலிருக்க ஒரு பனை ஓலையினால் சுற்றிக் கட்டிவைப்பர். ஆனால் பகல் வெப்பம் ஏறியதும் அது வெடித்தே தீரும். அதேபோல்தான் நம் உடலும். நாம் என்ன போஷாக்கு

செய்து மருந்து (டானிக்) சாப்பிட்டாலும் முதுமையால் அது ஒருநாள் அழிந்தே தீரும்.

உடலில் உறையும் ஜீவனோவெனில் நித்யன், அழிவு இல்லாதவன். பீஷ்மர், த்ரோணர் ஆத்மாக்களுக்கு அழிவே இல்லை. ஆகலால், அர்ஜுன! அவர்களின் அழியக்கூடிய சரீரத்தைப்பற்றியும், அழிவேயில்லாத ஆத்மாவைப்பற்றியும் நீ சோகிக்க வேண்டியதில்லை. (கதாஸு:- சரீரம்; அகதாஸு:- ஆத்மா).

ஸாதாரணமாகக் கருணை என்பது உத்தம குணம்தான். ஆனால், சில இடங்களில் கருணை அபகுணமாகும். நோயாளி வருந்துவதைக் கண்டு ஆபரேஷன் செய்யும் ஒரு டாக்டர் இரக்கம் காட்டுவதும், குற்றவாளியினிடம் ஒரு நீதிபதி மனமிரங்கி அவனைத் தண்டியாமல் விடுவதும் எப்படிக் குற்றமோ, அதேபோல போரில் க்ஷத்ரியன் போர்க்களத்தில் சத்ருக்களிடம் கருணை செய்வது குற்றமேயாம்.

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: ।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥ 12

## முன்னுரை

அர்ஜுனன் க்ருஷ்ணனைப் பார்த்து, 'யச்ச்ரேய: ஸ்யாந்மே' – 'எதைச் செய்தால் எனக்கு ச்ரேயஸ் ஸித்திக்குமோ, அதை நீ எனக்கு அருளிச் செய்யவேண்டும்' என்று கேட்டிருக்கிறான்.

ச்ரேயஸ் பதம் ஆத்மாவின் நன்மையைக் குறிக்குமே ஒழிய சரீர க்ஷேமத்தைச் சொல்லாது; ஆதலால் க்ருஷ்ணன் கீதையில் "மறுபிறவியில்லாத மோக்ஷ புருஷார்த்தமே ஒரு ஜீவன் பெறக்கூடிய ச்ரேயஸ்" என்பதைச் சொல்லியிருக்கிறான்.

இந்த உத்தமமான ஆத்ம நன்மையை தாழ்ந்த நிலையில் கட்டுண்டிருக்கும் ஜீவன் படிப்படியாகத்தான் பெறமுடியும். இதையே கீதையில் பகவான் ஒரு ஸோபாநம் (படிக்கட்டு) மாதிரி நமக்கு அறிவித்திருக்கிறான்.

## சரீர ஆத்ம ஜ்ஞானம்

இதற்கு முதல் படிக்கட்டு கர்மயோகம். இதைச் செய்ய சரீர - ஆத்ம ஜ்ஞானம் வேண்டும். இந்தச் சரீர ஆத்ம விவேகமில்லாதவன் கர்மயோகத்தில் இழியமுடியாது.

மனிதனுக்கு அன்னமும். தேவர்களுக்கு அமிர்தமும், பசு பக்ஷிகளுக்கு புல் பூண்டும் ஆகாரமாகிறதுபோல ஞானிகளுக்கு பகவத்தாஸ்யமே (அதாவது பகவானுக்குக் தொண்டு செய்வதே) ஆஹாரமாகும் இதற்கு அந்த ஞானிகளுக்கும் சரீர - ஆத்மஞானம் வேண்டும். ஆதலால் கீதையில் பகவான் முதல் முதலில், ஞானி முக்யமாய் அறியவேண்டிய சரீர-ஆத்ம ஞானத்தை உபதேசிக்கிறான்.

மதங்கள் பல — இவ்வுலகில் பல மதங்கள் உள்ளன. அவைகளில் த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் இம் மூன்றுமே வைதிக மதங்களாகும்.

இம் மூன்று மதஸ்தரும் உபநிஷத், ப்ரஹ்மஸூத்ரம், கீதை இம் மூன்றையும் தங்கள் மதங்களுக்கு ஆதாரமாகக் கொண்டுள்ளனர். இந்த ஸ்லோகத்தின் பொருளை அனுபவிப்பதற்கு முன் இம் மதங்களின் கொள்கையை நாம் சுருக்கமாக அறியவேண்டும்.

### அத்வைத மதம்

இம்மதத்தில் ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள். ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே. ப்ரஹ்மத்தைத் தவிர உலகில் வேறு எப்பொருளும் உண்மையில் இல்லை. அஞ்ஞானத்தினால் (அறிவின்மையினால்) அது நமக்கு பலவித பொருள்களாக தோன்றுகின்றது. அஜ்ஞானம் நீங்கி, உண்மை அறிவு பெற்று எல்லாம் ப்ரஹ்மம் என்று தோன்றுவதே முக்தி (மோக்ஷம்). இதைப் பெற ஞானமே ஸாதனம்.

### விசிஷ்டாத்வைத மதம்

சித், அசித், ஈச்வரன், (அதாவது ஜீவாத்மா, ஜடப்பொருள், பரமாத்மா) என்கிற மூன்று தத்துவங்களும் உண்மை. எப்போதும் உள்ளவை. தனிப்பட்ட தத்வங்கள், ஜீவாத்மாக்கள் பல, ஒன்றல்ல, இது எப்போதும் ப்ரஹ்மத்

துடன் (ஈச்வரனுடன்) கூடியேயிருக்கும். சேதன சேதனங் களோடு கூடிய ப்ரஹ்மம் ஒன்று என்பதுதான் விசிஷ்டாத் வைதம்.

பரமபதமென்னும் தேசவிசேஷம் சென்று பகவானுக்குத் தொண்டு செய்வதே புருஷார்த்தம் (ஜீவன் பெறக்கூடிய மேலான பலன்) இதுதான் மோக்ஷம். இதைப்பெற பக்தியோ, ப்ரபத்தியோதான் ஸாதநம். த்வைதந்திற்கும் விசிஷ்டாத் வைதத்திற்கும் அதிக வித்யாசமில்லை. ஜீவன்கள் பகவானை விட்டு தனிப்பட்டிருப்பவை என்பதுதான் வாசி.

இம்மூன்று மதஸ்தரும் தங்கள் தங்கள் கொள்கைக்குச் சேர இந்த ஸ்லோகத்திற்கு விரிவாக உரை செய்திருக்கிறார்கள்.

## ச்லோகத்தின் பொருள்

அர்ஜுனா! எப்பொழுதும் நான் இருந்ததில்லை என்பதும் இல்லை; நீ இருந்ததில்லை என்பதுமில்லை; இந்த அரசர்களும் இருந்ததில்லை என்பதுமில்லை. இனிமேலும் நாம் எல்லோரும் இருக்கப்போவதில்லை என்பதுமில்லை.

அதாவது இறந்த காலத்தில் நானுமிருந்தேன், நீயும் இருந்தாய், இந்த அரசர்களும் இருந்தார்கள். வரும் காலத் திலும் நானும் நீயும் இவர்களும் இருக்கப்போகிறோம் இரண்டு 'ந' காரத்தையிட்டு பொருளை உறுதிப்படுத்துகிறான். நான், நீ, இவர்கள், எப்போதும் இருந்ததில்லை என்பதில்லை, அதாவது எப்போதும் இருப்பவர்களே, என்கிறான்.

இந்த ச்லோகத்தினால் ஜீவன் நித்யனாகையினால் அழிவில்லாதவன், என்று ஜீவனின் காலத்ரய வர்த்தித்வத்தை (மூக்காலத்திலும் உள்ளவன் என்பதை)ச் சொல்கிறான். இறந்தகாலம், நிகழ்காலம், வரும்காலம் என முக்காலத்திலும் உள்ள தத்வம் நித்யம். ஒருகாலத்தில் இருந்து ஒரு காலத்தில் இல்லாதது அநித்யம். சரீரம் ஒரு காலத்தில் இருந்து ஒரு காலத்தில் அழிகிறபடியால் அது அநித்யம்.

பகவான் நித்யன் என்பது பொதுவாக எல்லோருக்கும் தெரியும், அர்ஜுனனும் அறிவான். ஆதலால் தன்னைச் சொல்லி நான் எப்படி நித்யனோ, அதுபோல நீயும் நித்யன், இவர்களும் நித்யர்கள் என்கிறான்.

இங்கே பகவான் நான் என்று தன்னைச் சொல்லி, நீ என்று அர்ஜுனனையும், இவர்கள் என்று மற்றவர்களையும் தனித் தனியாகப் பிரித்து சொல்வதினால், பகவான் வேறு, ஜீவன் வேறு என்பதும், ஜீவாத்மாக்களெல்லாம் ஒன்றல்ல பல என்பதையும் தெளிவாகச் சொல்லியிருக்கிறான். இப்படி இந்த முதல் ச்லோகத்தில் விசிஷ்டாத்வைதமே ஸ்தாபிக்கப்படுகிறது.

## பிறப்பு இறப்பு என்பது என்ன ?

உலகில் ஒருவன் பிறக்கிறான் இறக்கிறான் என்பது, ஒரு ஜீவனுக்கு ஏற்படும் உடலின தொடர்பைப் பற்றியேயாம். ஜீவன ஓர் உடலைப் பெற்றால் பிறந்தான் என்றும், ஓர் உடலை விட்டு விலகினால் இறந்தான் என்றும் சொல்லுகிறோமே ஒழிய, ஜீவனுக்கு பிறப்புமில்லை இறப்புமில்லை.

ஜீவன் வேறுபட்ட தத்வம்: சரீரம் வேறுபட்டது. கை கால் முதலிய அவயவக்கூட்டங்களோடு கூடிய பிண்டம் சரீரம். இது ஆத்மா அன்று. ஆத்மா நம் கண்ணுக்குத் தெரியாத வேறு தத்வம். அவன் நித்யன் என்கிற உண்மை நமக்கு எளிதில் மனதில் படுகிறதில்லை.

இந்த ச்லோகத்தில் ஜீவ பர பேதத்தையும், ஜீவன் பல என்பதையும் பகவான் சொல்லியிருக்கிறான், என்பதை எல்லா மதஸ்தர்களும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இங்கு கிருஷ்ணன் சொலவது ஸ்வாபாவிக – இயற்கையான பேதமா, அல்லது ஔபாதிக - ஒரு உபாதியைப்பற்றிய, பேதமா என்பதில் தான் ஆசார்யர்களுக்குள் கருத்து வேறுபாடுள்ளது.

ஸ்வாபாவிக பேதம் — இரண்டு தூண்களுக்குள்ள தனித் தனிப் பொருள்களாய் இயற்கையாயுள்ள பேதம்.

ஔபாதிக பேதம் — உண்மையாக பொருள்கள் இரண்டல்ல. ஒரு உபாதியைப்பற்றி, ஒரு காரணத்தைப்பற்றி, தனிப்பட்டதாக தோற்றுகை.

நையாயிக மதத்தில் ஆகாசம் (வெளி) என்கிற தத்வம், நித்யம அகண்டம் ஏகம் (ஒன்று), எக்காலத்திலுமுள்ளது, கூறுகளற்றது என்கிறார்கள். அப்படியுள்ள (அகண்ட வெளி) ஆகாசம, நானகு சுவர்களாலான ஓர் அறையில் இருக்கு மானால் அதை மட ஆகாசம் என்றும், ஒரு குடத்தில் இருக்கு

மாளுல் அதை கட ஆகாசம் என்றும் வியவகரிக்கிறோம். அந்த சுவர்களோ குடமோ உடைந்துபோனுல் எல்லாம் ஒரே வெளியாகிறது. இப்படி ஒரு உபாதியைப்பற்றி (மடம், கடம் என்கிற காரணத்தைப்பற்றி) ஒரே பொருள் வெவ்வேறு பெயர் பெறுகிறது. இதுதான் ஔபாதிக பேதம்.

அத்வைத மதம் — எல்லாம் ஒரே ஆத்மாதான் உள்ளது. அதுதான் ப்ரஹ்மம். ஒரு உபாதியைப் பற்றி ஜீவன் வேறு ப்ரஹ்மம் வேறு என்று தோன்றுகிறது. இந்த உபாதி போய் மோக்ஷ தசையில் பகவான் உள்பட எல்லாம் ஒரே ஆத்மா தான் உண்மை. நம் அஞ்ஞானத்தினுல், அறிவின்மையினுல் தமக்குத் தனிப்பட்ட பொருள்களாகத் தோன்றுகிறது. இந்த அஞ்ஞானம் நீங்கி உண்மையான அறிவு பெற்றால், எல்லாம் ஒரே ஆத்மா, ஒரே ப்ரஹ்மமாக உணரப்படும். இப்படி ஞானம் பெற்று எல்லாம் ப்ரஹ்மமாக உணர்வதுதான் மோக்ஷம், ஜீவன் முக்தி, எனப்படும்.

விசிஷ்டாத்வைத மதம் — சித், அசித், ஈச்வரன் (ஜீவன், ஜடப்பொருள், பரமாத்மா) என்கிற மூன்றும் உண்மையான தத்வங்கள் இம் மூன்றும் எக்காலத்திலும் இயற்கையாகவே தனிப்பட்ட தத்வஙகள். இந்த ஸ்வாபாவிக பேதத்தையே பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் இங்கு சொல்கிருன். இதை ஸ்ரீ பாஷ்யகாரர் (ராமாநுஜர்) தன் பாஷ்யத்தில் பல ஆதாரங்களைக் கொண்டு வெகு அழகாய் நிரூபித்திருக்கிருர்.

## ஆதாரங்கள் — கீதையில்

### கீதை 14-அத். 2-ம் ச்லோகம்.

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥

இதம் ஞானம் உபாச்ரித்ய மம ஸாதர்ம்யம் ஆகதா: ।
ஸர்க்கேபி நோப ஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ॥

எவர் என்னை அன்புடன் சிந்தித்து பூஜிக்கிருர்களோ அவர்கள் என்னுடைய ஸாம்யத்தை (என் சில தர்மங்களை) அடைகிருர்கள். ஸ்ருஷ்டி காலத்தில் அவர்கள் பிறக்கிருர்கள் என்பது இல்லை. ப்ரளயகாலத்தில் அழிகிருர்கள் என்பது இல்லை.

மறுபிறவியில்லா மோக்ஷத்தை அடைகிறார்கள் என்று சொல்லியிருக்கிறான்.

இதில் அடைபவன் ஒருவன் அடையப்படுகிறவன் மற்றொருவன் என்று, பகவானையும் ஜீவனையும் தனிப்பட்ட தத்வங்களாகப் பிரித்தே சொல்லியிருக்கிறான். இந்த சரீரத்தை விட்டு ஜீவன் வெளியேறி மோக்ஷமடைந்த தசையிலும் தனிப்பட்ட தத்வம் என்பதே தெளிவாகிறது.

மேலும், மம ஸாதர்ம்யம் ஆகதா:— அவர்கள் என் ஸாம்யம் பெறுகிறார்கள் என்று பன்மையில் சொல்லியிருப்பதினால் மோக்ஷதசையிலும் ஜீவாத்மாக்கள் பல என்பதையும் தெளிவாகச் சொல்லியிருக்கிறான். (ஸாதர்ம்யம் (ஸாம்யம்)-என்பது ஒன்றுக்குமேற்பட்ட தத்வங்களுக்கு இடையில்தான் இடம் பெறும்.)

கீதை 8-அத். 16-ம் ச்லோகம்.

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥

ஆப்ரஹ்ம புவனால் லோகா: புனராவர்த்தினோऽர்ஜுன ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர் ஜந்ம ந வித்யதே ॥

ப்ரஹ்மா முதலான மற்ற தேவதைகளை பஜனம் செய்கிறவர்கள், அந்தந்த தேவதைகளின் லோகமடைந்து சிறிது காலம் அனுபவித்து அந்தந்த லோகம் அழியும்போது அவர்கள் அநுபவமும் அழிந்துவிடுகிறது. அவர்களுக்கு மறுபிறவியும் உண்டு. என்னையே பஜனம் செய்பவர்களோ எனில், அழிவில்லா மோக்ஷமான என் லோகத்தை அடைகிறார்கள். இவர்களுக்கு மறுபிறவியில்லை, என்று தன்னையும் தன் லோகத்தையும், ஜீவாத்மாக்களையும் முக்தி தசையிலும் பிரித்தே பகவான் பேசியிருக்கிறான். ஆத்ம பேதத்தை மட்டுமின்றி தன் பரத்வத்தையும் பகவான் தெளிவாக்கியிருக்கிறான்.

ஸ்ரீ ராமாவதாரத்தில் பகவான் தன் பரத்வத்தை பிறர் எடுத்துச் சொன்னாலும் அதை மறைத்தே பேசுகிறான். க்ருஷ்ணனோவெனில் தன் பரத்வத்தை (தெய்வத் தன்மையை) தானே பல இடங்களில் எடுத்துக் கூறுகிறான்.

**கீதை 7-வது அத்யாயம்.**

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித் அஸ்தி தனஞ்ஜய

"என்னை விட மேலான தத்வம் வேறொன்றும் லோகத்தில் இல்லை. மற்றவைகளெல்லாம் என்னால் தரிக்கப்படுகின்றன" என்றும் இப்படி தன் மேன்மையை பல ஸ்லோகங்களில் சொல்லியிருக்கிறான்.

இன்னும் பத்தாவது அத்யாயம் முழுவதும், தான் வேறு தன் விபூதிகள் (உடமைகள்) வேறு என பேதத்தையே பேசியிருக்கிறான்.

பகவானே (ப்ரஹ்மமே) ஜீவனாகப் பரிணமிக்கிறான் என்றால் இன்ப துன்பச் சுழலில் தடுமாறும் ஜீவனின் தோஷங்கள் பகவானுக்கு வந்துசேரும். இது ச்ருதிக்கு விரோதம். இதுவும் கூடாது.

எல்லா ஆத்மாக்களும் ஒன்று என்போமாயின் ஒருவன் இன்பத்தையும், மற்றவன் துன்பத்தையும் அனுபவிப்பதைப் பார்க்கிறோம். இதுவும் சேராது, இன்பதுன்பங்களின் வேறுபாடுகளினால், அதை அனுபவிக்கும் ஜீவர்களும் தனிப்பட்டவர்களே என்கிற உண்மை தேறுகிறது.

அத்வைதத்தில் அஜ்ஞானத்தினால் (அறிவின்மையினால்) தனிப்பட்ட பொருள்களாகத் தோன்றுகிறது; ஞானம் பிறந்த தசையில் எல்லாம் ஒன்று எனப் பார்க்கப்படும் என்பதை ஏற்றுக்கொண்டால், க்ருஷ்ணன் அஜ்ஞானத்தினால்தான் இப்போது தனிப்பட்ட தத்வங்களாக இங்கு சொல்கிறான் என்பது தேறும். இதுவும் சேராது.

ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் — நிறைஞானத்தன், எல்லாம் அறிந்தவன் என ச்ருதி அவனை சொல்லியுள்ளது.

மேலும் பராஸ்ய சக்தி: விவிதைவ ச்ருயதே என்கிற ச்ருதிக்கும் ஸ்வாபாவிகீ ஞான பல க்ரியா ச என்கிற ச்ருதி வாக்யத்திற்கும் அத்வைத வாதம் முரண்படும்.

க்ருஷ்ணன் ஸர்வஞ்ஞன், ஞானத்துடனிருந்தே, அர்ஜுனனை ஜீவனும் தானும் ஒன்று என்று தெரிந்தே சொல்கிறான்

என்றும் தனக்குத் தானே உபதேசம் செய்துகொள்வதாகத் தேறுகிறது. வைத்தியக்காரன் தான் தானே தன்னைக் கண்ணாடியில் பார்த்துப் பேசிக்கொள்வான்.

அர்ஜுனனுக்கு தத்வம் (உண்மையை) உபதேசம் செய்யும்போது இல்லாததை வஞ்சனையாகச் சொல்கிறான் என்பதும் பொருந்தாது.

இப்படி கீதையில் உள்ள பல ஸ்லோகங்களைக் கொண்டும், மற்றும் பல காரணங்களைக்கொண்டும், ப்ரஹ்மம் வேறு, ஜீவன் வேறு, ஜீவர்கள் பல என்பதை நிருபணம் செய்து, பிறகு ஒரு முக்யமான ச்ருதியைக் கொண்டு எல்லாம் வேறானவை என்பதை அழகாய் ஸ்ரீ பாஷ்யகாரர் விவரித்திருக்கிறார்.

### ச்ருதி நிரூபகம்

नित्यो नित्यानां चेतनश्चेतनानाम्
एको बहूनां यो विदधाति कामान् ।

நித்யோ நித்யாநாம் சேதநச் சேதநானாம்
ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந் ।

என்பது எல்லா மதஸ்தர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு ச்ருதி வாக்யம்.

இதில் சொல்லப்படும் பொருள் :— நித்யரான பல சேதன ருக்கு (அறிவுள்ளவர்களுக்கு) நித்யனான பகவான் இஷ்டங்களை அளிக்கிறான். அதாவது, பலராய் நித்யராயிருக்கும் ஜீவாத்மாக்களுக்கு, ஒருவனாய் நித்யனாயிருக்கும் பகவான் அருள் புரிகிறான்.

நித்யோ நித்யானாம் – என்பதினால் ஆத்மா அநித்யம் என்கிற பௌத்த மதமும் ஒரு உபாதியைப் பற்றி ஜீவனைச் சொல்லும் சங்கர மதமும், பாஸ்கர மதமும் நிராகரிக்கப்பட்டது.

சேதனச் சேதநானாம் – என்பதினால் இயல்பாகவே ஆத்மாக்கள் அறிவுடையவர்கள் அழிவில்லாதவர்கள் என்பது சொல்லப்படுகிறது. இதனால் ஜீவாத்மாக்கள் அநித்யர்கள் என்கிற வைசேஷிக மதம் கண்டிக்கப்படுகிறது.

யः ஏகः நித்யः சேதநः என்பதினால் பரம்பொருளான பகவான். ஒருவன், ஸர்வஜ்ஞன், நித்யன், அழிவில்லாதவன் எனச் சொல்லப்படுகிறது. இதனால் மற்ற தேவதைகள் பரம்பொருள் அல்ல என்பது கூறப்படுகிறது.

யோ விததாதி காமான் — என்பதினால் அந்த பகவான் ஒருவனே அருள் செய்கிறவன் என்பதும் தேறுகிறது. அபூர்வமே பலனைக் கொடுக்கிறது என்கிற மீமாம்ஸகரின் கொள்கையும் நிராகரிக்கப்பட்டது.

நித்யர், பலர், அறிவுடையவர் என்று ஜீவனைச் சொல்லி நித்யன் ஒருவன் பலனளிப்பவன் என்று பகவானைத் தெளிவாக இந்த வேத வாக்யம் கூறியிருப்பதினால் எக்காலத்திலும் பலரான ஜீவாத்மாக்களும், ஒருவனான பகவானும் (ப்ரஹ்மமும்) உண்டு என்பதை எடுத்துக்காட்டி, இந்த நத்வேவாஹம் என்கிற ச்லோகத்திலும் (இயற்கையான) ஸ்வாபாவிக பேதமே க்ருஷ்ணனால் சொல்லப்படுகிறது என்பதை ஸ்ரீ பாஷ்யகாரர் நன்றாக நிலை நிறுத்தியுள்ளார்.



**தேஹிநோऽஸ்மின் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா |**
**ததா தேஹாந்தர ப்ராப்தி: தீரஸ் தத்ர ந முஹ்யதி || 13 ||**

ஓர் உடலில் உறையும் ஜீவனுக்கு அவ்வுடலில் குழந்தைப் பருவம், வாலிபம், மூப்பு எனப்பல தசைகள் மாறி மாறி வருகிறது போல், அந்த உடல் போய் வேறு உடல் வருகிறது ; இதற்கு ஞானி வருந்த மாட்டான்.

கர்மாநுகுணமாக ஜீவனுக்கு ஒரு சரீரம் உண்டாகிறது. அந்த சரீரத்திற்கு, குழந்தைப் பருவம், வாலிபம், மூப்பு என தசைகள் மாறுகின்றன. இதற்கு எவரும் வருந்துவதில்லை ; ஆனால் சிலர் கிழத்தனம் வரும்போது வருந்தலாம். "இடி விழுந்தாற் போல் ஜரை" என்கிறார் நம்பிள்ளை. எனினும், ஜீவனின் நித்யத்வத்தை அறிந்த ஞானி சரீரம் அழிவதைக் குறித்து வருந்த மாட்டான் என்கிறான்.

"தஸ்ய தீரா : பரிஜானந்தி யோநிம்" என்கிறது புருஷஸூக்தம்.

**மாத்ரா ஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ண ஸுகது : கதா : |**
**ஆகமாபாயினோऽநித்யா : தாந் திதிக்ஷஸ்வ பாரத || 14 ||**

குந்தியின் புத்திரனே ! இந்திரியங்கள் தம் தம் விஷயங்களுடன் கூடுவதினால், குளிர், வெப்பம், இன்பம், துன்பம் போன்றவை உண்டாகின்றன. அவை நிலைத்திரா. நீ அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

ஆகாசம், காற்று, நெருப்பு, நீர், நிலம் இவை ஐந்தும் பஞ்ச பூதங்கள். இவற்றின் குணங்கள் முறையே, சப்தம், ஸ்பர்ஸம், ரூபம், ரஸம், கந்தமாகும். இக் குணங்களையுடைய வஸ்துக்களுடன், இந்திரியங்கள் சம்பந்தப்படுவதினால், இன்ப துன்பங்கள் உண்டாகின்றன. இவை கர்மாநுகுணமாக உண்டாகின்றன. இவை நிலைத்திராதவை என்பதை அறிந்து கர்மயோகம் செய்பவன் இவைகளைப் பொருட் படுத்தாமலிருக்க வேண்டும். நமக்குச் செல்வம் வந்தாலும், வறுமை ஏற்பட்டாலும் இரண்டையும் ஒன்று போல் கருத வேண்டும். " கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாக "—செல்வத்தை நெருப்பு என்கிறார் ஆழ்வார். நம் வீட்டில் எவருடைய முயற்சியுமில்லாமல் குப்பை சேருவது போல் செல்வம் சேரலாம் ; நாம் முயன்று ஒரு காசும் வராமலும் போகலாம் ; இவை முன் செய்த வினைப்பயனாக வந்து போகின்றன. நிலைத்திராதவை என்பதை அறிந்து அவற்றின் வரவு செலவுகளைச் சமமாகக் கொள்ள வேண்டும்.

**யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப I**
**ஸமதுக்க ஸுகம் தீரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே || 15 ||**

*புருஷ ச்ரேஷ்டனே! சுக துக்கங்களை சமமாகக் கருதும் எந்த தீர புருஷனை விஷய உணர்ச்சிகள் கலங்கச் செய்வதில்லையோ, அவனே மோட்சத்திற்கு உரியவனாகிறான்.*

நாம் நமக்குரிய கர்மாவைச் செய்யும் போது, சுகமும் வரலாம் ; துக்கமும் உண்டாகலாம். இவைகளில் களிப்பும் கவர்வும் அற்று இருத்தல் வேண்டும். நம் சரீரத்திலுள்ள பற்றினால், அதற்கு நோய் வந்தால், எவ்வளவு கசப்பான மருந்தானாலும் அதைப் பொறுத்துக் கொண்டு உட்கொள்கிறோம். செல்வத்திலுள்ள ஆசையினால் எவ்வளவு கஷ்டமானாலும் கடல கடந்து சென்றும், பொருள் தேடுகிறோம். அதுபோல நம் ஆத்மாவின் நன்மைக்காக, நாம் கர்மாநுஷ்டானம் செய்யும் போது, வரும் துக்கங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். ராஜரிஷி ஜனகர் நிலை வர வேண்டும். இவர் சிறந்த கர்மயோகி; தன் ராஜ்யத்தில் பற்று அற்று அரசாண்டு வந்தார். ஒரு சமயம் அவருடைய இராஜ்யமே நெருப்பு பற்றி எரிகிறது போல ஒரு தோற்றம் அளிக்கும் போதும்; "மிதிலை போனால் எனக்கென்ன" என்று வாளாவிருந்தார். "நாம், நமது" என்னும் அகந்தை, மமதை அற வேண்டும். இல்லை எனில் எதிலும் இன்பம் துன்பம் உண்டாகிறது. நமது எல்லா இன்ப துன்பங்களுக்கும் மமதையே காரணம். ஆகையால் தான் ஆழ்வார், " நீர், நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து" என உபதேசம் செய்திருக்கிறார். இப்படி அகந்தையும், மமதையும் போய் ஆத்ம ச்ரேயஸ் பெறுவதையே "அமிருதத்வாய கல்பதே" என்பதினால் சொல்கிறான்.

*சரீரம் அழிவுள்ளது; ஜீவன் அழிவில்லாதது, நித்யமானது என்பதை மேலே சொல்கிறான்.*

**நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத: I**
**உபயோரபி த்ருஷ்டோऽந்தஸ்த்வநயோஸ்தத்வதர்சிபி: || 16 ||**

*இல்லாத பொருள்களுக்கு இருத்தல் என்பதில்லை ; இருக்கும் பொருள்களுக்கு இல்லாமை என்பதில்லை ; இவ்விரண்டுமே ஞானிகளின் முடிவான கருத்தாகும்.*

"ஸத்"—என்றால் புத்தகம் பலகை போன்ற உலகிலுள்ள பொருள்கள்.

"அஸத"—என்றால், மலடி மகன், ஆகாசத் தாமரை போன்ற உலகில் இல்லாத பொருள்கள். உலகிலுள்ள பொருள்களுக்கு இல்லாமை என்பதில்லை. உலகில்லாத மலடி மகன் போன்ற பொருள்களுக்கு இருத்தல் என்பதில்லை என்பது தான் இந்த ச்லோகத்தின் பொருளாகப் பலர் சொல்லியுள்ளனர். ஆனால் இதைச் சரியான பொருளாக ஸ்ரீ பாஷ்யகாரர் (ராமாநுஜர்) கருதவில்லை.

பதினேராம் ச்லோகத்தில் "கதாஸூ:, அகதாஸூ:" என்கிற பதங்களினால் சொல்லப்பட்ட, சரீரத்தையும், ஜீவனையுமே, "அஸத், ஸத்" என்கிற சொற்களால் இங்கு குறிக்கிறான் என்று பல ஆதாரங்களைக் கொண்டு அழகாக அவர் நிரூபித்திருக்கிறார்.

அஸத், நாஸ்தி, அஸத்யம், அவஸ்து என்கிற நான்கு பதங்களும் க்ஷணம் தோறும் மாறுதலுடைய அசேதனப் பொருளையே குறிக்கும் என்றும், ஸத், அஸ்தி, ஸத்யம் வஸ்து இந்நான்கும் ஒருவித மாறுதலுமில்லாத நித்யமான ஜீவாத்மாவையே குறிக்கும் என்றும், ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் ஸ்ரீ பராசரர் பல ஆதாரங்களைக் கொண்டு, அறுதியிட்டிருக்கிறார். இதைக் கொண்டு, ஸ்ரீ பாஷ்யகாரர் "அஸத்" என்றால் சரீரம் என்றும், "ஸத்" என்றால் ஜீவாத்மாவென்றும் பொருள் சொல்லி, அஸத்தான சரீரத்திற்கு இருத்தல் என்பதில்லை; ஸத்தான ஜீவனுக்கு இல்லாமை என்பதில்லை; அதாவது, "சரீரம் அநித்யம்; ஜீவன் நித்யன்" என்பதே இந்த ச்லோகத்தின் சரியான பொருள் என்பதை நிர்ணயித்திருக்கிறார்.

"சரீரத்திற்கு இருத்தல் என்பதில்லை"—என்றால் சரீரம் எப்போதும் ஒரு படிப்பட்டிராது; க்ஷணம் தோறும் மாறிக் கொண்டேயிருக்கும்; ஆனால் அம்மாறுதல் நம கண்ணுக்குத் தெரிகிறதில்லை. ஒரு சமயம் புரூரவஸுவினிடம், போகபுத்தி கொண்ட ஊர்வசி, அவனுடைய சரீரத்தை அஸ்வினி தேவதையைக் கொண்டு பரீட்சித்தாள்; அவன் ஸ்நானம் செய்வதற்கு முன் இருந்த அவனது சரீரம் ஸ்நானத்திற்குப் பின் இருக்கவில்லை; இம்மாறுதல் தான், ஸ்வரூபத்தினால் மாறுதல், ஸ்வபாவத்தினால் மாறுதல் என்ற இரண்டு விதமாயிருக்கும். பச்சை நிறமாயுள்ள மாங்காய், சிறிது காலமானதும், மஞ்சளாகவும், இனிப்பாகவும் மாறுவதை நாம் பார்க்கிறோம். இப்படி எல்லா அசேதனப் பொருள்களுக்கும் இவ்விரு மாறுதல்களுமுண்டு. அதுபோல அசேதனமான சரீரமும் உருவத்தினாலும் குணத்தினாலும் நிமிஷம் தோறும் ஸ்வரூபத்தினாலும், குணத்தினாலும் மாறுதல் அடையும் தன்மையுள்ளது. இதையே "ந அஸதோ பாவோ" என்பதினால் சொல்கிறான்.

"ஸத்தான ஜீவனுக்கு இல்லாமை இல்லை"—என்றால், ஜீவன் எப்போதும் ஒருபடிப் பட்டவன், ஒருவித மாறுதலும் இல்லாதவன். சரீரத்திற்குள்ள மாறுதலையிட்டே ராமன் பருத்தான், இளைத்தான் என்கிறோமே ஒழிய பருமனும் இளைப்பும் ஜீவனுக்கு இல்லை என்பதை "ந பாவோ வித்யதே ஸத்" என்பதினால் சொல்கிறான்.

**அவிநாசி து தத் வித்தி யேந ஸர்வமிதம் ததம் ।**
**விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்துமர்ஹதி ॥ 17 ॥**

உலகினிலுள்ள பெயர் வடிவமுள்ள ஒவ்வொரு பொருளிலும் ஜீவன் உளன். அவன் அழிவில்லாதவன் என்பதை நீ உறுதியாக அறிவாய். நித்யனான அந்த ஜீவனுக்கு 'எவனும் அழிவைச் செய்ய முடியாது.

"ஜீவன் அழிவில்லாதவன்" என்பது எப்படி ?

நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாஸம் என்பது பஞ்ச பூதங்கள். இவைகளின் சேர்க்கையினாலேயே எல்லா அசேதனப் பொருள்களும் உண்டாகின்றன. எல்லா அசேதனப் பொருள்களிலும் ஒரு ஜீவனிருக்கிறான் என்று இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டிருப்பதினால், ஜீவன் எல்லாப் பொருள்களைக் காட்டிலும் சிறியவன் அணு ஸ்வரூபன், ஸூக்ஷ்மப் பொருள். உலகிலுள்ள மற்ற எல்லாப் பொருள்களும் ஜீவனைக் காட்டிலும் பெரியது ; ஸ்தூலம் என்பது தேறுகிறது. ஒரு பெரிய வஸ்துவில் தான் சிறியது நுழைந்து அதை அழிக்க முடியும் ; ஸூக்ஷ்மத்தில் ஸ்தூலம் நுழையவோ அதை அழிக்கவோ முடியாது. இதை "அஸ்ய அவ்யயாஸ்ய கஸ்சித் விநாசம் ந அர்ஹதி" என்கிறான்.

ஒரு கோடரியின் நுண்ணிய பாகமே பெரிய மரத்தில் நுழைந்து, அதைப் பிளக்க முடியும். தண்ணீரைவிட நெருப்பு ஸூக்ஷ்மமாகையினால், அடுப்பின் பேரிலுள்ள குளிர்ந்த ஜலத்தில், அடுப்பிலுள்ள அக்னி பிரவேசித்து அதை வற்றச் செய்கிறது.

எது ஒன்று மற்றொன்றில் பிரவேசிக்க சக்தியுடையதோ, அப்படி பிரவேசிக்கும் வஸ்து "ஸூக்ஷ்மம்" என்றும், பிரவேசிக்கப் படும் வஸ்து ஸ்தூலம் என்றும் சொல்லப்படும். (இங்கு நீர், நிலம் இவைகளின் அளவை பற்றியதல்ல ; சக்தியைப் பற்றியது ) இப்படி பஞ்சபூதங்கள் ஒன்றைவிட, மற்றொன்று சூக்ஷ்மமாயிருப்பதினாலேயே மஹா ப்ரளயம் உண்டாகிறது.

தண்ணீர் மண்ணைவிட ஸூக்ஷ்மம், ஆகையால் ப்ரளய காலத்தில் சமுத்திர ஜலம் பொங்கி வந்து பூமியை (மண்ணை)க் கரைத்து, அழிக்கிறது. உலகமுழுமையும் தண்ணீர் மயமாகிறது ; அக்னி தண்ணீரைவிட ஸூக்ஷ்மமாகையினால், ஸூர்யன் தன் அக்னியினால் தண்ணீரில் பிரவேசித்து அதை வற்றச் செய்கிறது. அப்போது உலக முழுதும் அக்னி மயமாக இருக்கும். காற்று அக்னியில் நுழைந்து அதை அணைக்கிறது. ஆகாசம் காற்றை அழியச் செய்கிறது ; இப்படியே மஹத் தத்வம், அஹங்காரம், மூல ப்ரக்ருதி வரையில் ஒன்றுக்கொன்று ஸூக்ஷ்மமாய் மற்றொன்றை அழியச் செய்து, உலக முழுமையும் மூல ப்ரக்ருதியில் அடங்கிவிடுகிறது. இந்த மூல ப்ரக்ருதியை விட, ஜீவாத்மா அதிக ஸூக்ஷ்மமாதலால், எந்த ஒரு தத்வமும் ஆத்மாவில் பிரவேசித்து அதை அழிக்க முடிகிறதில்லை ; ப்ரளய காலத்தில் மூல ப்ரக்ருதியும் ஜீவாத்மாக்களும் பகவானிடம் ஒன்றிக் கிடக்கின்றன. இதுவே தத்வம்.

இதைத் தான் "அவிநாஸி து தத் வித்தி" இந்த ஜீவன் அழிவில்லாதவன் என்பதைத் தெரிந்து கொள் என்கிறான்.

இங்கே பகவான் ஜீவாத்மாக்களை "தத், அது" — என்று ஒருமைச் சொல்லினால் சொல்லியிருக்கிறானே ! ஜீவாத்மாக்கள் பல என்பதே உண்மையாயிருக்க, இது எப்படிப் பொருந்தும் ? ஜீவன் ஒன்றா பலவா ?

கீழே "நத்வே வாஹம் ஜாது நாஸம்" என்கிற ச்லோகத்தில் ஜீவாத்மாக்கள் பல என்பதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறான். மேலேயும் பல இடங்களில் ஜீவன் பல என்றே சொல்லப்போகிறான் ; ஆகையால் இங்கும் ஜீவன் பல என்பதே பொருள். பல நெல் குவியல்களிருக்கும் இடத்தில், ஒரு குவியலை "இது ஒரு நெல்" (ஒரு ரகமான நெல்) என்று ஜாதியைப் பற்றி ஒருமையில் சொல்வது போல, இங்கேயும் ஜீவ சமூகத்தையே 'தத்' அது என்று ஒருமையில் சொல்லியிருக்கிறான். இதை "ஜாத்யேக வசனம்" என்பர்.

சரீரத்திற்கு அழிவு இயற்கையானது.

**அந்தவந்த இமே தேஹா : நித்யஸ்யோக்தாச் சரீரிண : ।**
**அநாசிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத ॥ 18 ॥**

என்றும் உளதாய், அழிவற்றதாய் அளவிறந்ததாயுமுள்ள ஜீவாத்மாக்களின் சரீரங்கள் எல்லாம் முடிவை உடையனவென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அர்ஜுனா ! சரீரத்தின் அழிவைப் பற்றி நீ சோகிக்க வேண்டாம் ; போர் செய்வாயாக.

ஜீவாத்மாக்கள் அழிவில்லாதவை; ஆனால் அவைகளின் சரீரங்களெல்லாம் அழிவுள்ளவையே ஆதலால், நீ பீஷ்ம த்ரோணர் சரீரத்தைப் பற்றி வருந்த வேண்டுவதில்லை; போர் செய் என்கிறான்.

"சரீரம் அழிவுள்ளது" — என்பது எப்படி ?

1. சரீரம் பஞ்ச பூதங்களாலானது. பஞ்ச பூதங்கள் அழிவுள்ளவை. ஆகையால் சரீரமும் அழிந்தே தீரும்.

2. சரீரம் அவயவக் கூட்டம்; பல பொருள்களின் சேர்க்கை பல பொருள்களாலான எந்த வஸ்துவுக்கும் பிரிவும் அழிவும் நிச்சயமாக உண்டு;

3. ஒரு ஜீவன் தன் கர்ம பலனை அனுபவிக்க சரீரம் ஏற்படுகிறது. அந்த கர்ம பலனை அனுபவித்ததும், "சட்டி சுட்டதும் கை விட்டதும்" என்கிறபடி அந்த க்ஷணமே ஜீவன் அந்த சரீரத்தை விட்டு வெளியேறுகிறான்; ஜீவன் அதை விட்டுப் போனால் சரீரம் அழிய வேண்டியதே.

4. சேர்க்கை யென்றால் பிரிவு நிச்சயம்; தந்தை தசரதன் இறந்ததைக் கேட்ட ஸ்ரீராமன், "ஸம்யோகா: விப்ரயோகாந்தா" என்று அருளியிருக்கிறான். பல பொருள்களாலான சரீரத்திற்குப் பிரிவும் அழிவும் நிச்சயம்.

ஜீவனோவெனில், பஞ்சபூதங்களால் ஆனவனன்று; பல பொருள்களின் சேர்க்கையுமன்று. ஆதலால் நித்யன், அழிவில்லாதவன். இப்படி அழியாத ஜீவனைக் குறிததும் நீ துக்கப்பட வேண்டியதில்லை.

**ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யச்சைநம் மந்யதே ஹதம் ।**
**உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே ॥ 19 ॥**

அழிவில்லாத ஆத்மாவை அழிக்கும் வஸ்து ஒன்று உண்டு என்றும் இந்த ஜீவாத்மா அழிக்கப்படுகிறவன் என்றும் எவர்கள் நினைக்கிறார்களோ அவர்கள் உண்மையை அறியாதவர்கள். ஆத்மாவைக் கொல்லும் வஸ்து எதுவுமில்லை; ஆத்மா கொல்லப் படுபவனுமல்லன்.

இங்கே 'ப்ரதி' என்கிற பதத்தைச் சேர்த்து, "ய யேநம் ப்ரதி ஹந்தாரம் வேத்தி" எவன் இந்த ஜீவனைக் கொல்ல, ஒன்றை ஹேதுவாக (காரணமாக) நினைக்கிறானோ, அவன் அறிவில்லாதவன்" என்று ஸ்ரீ பாஷ்யகாரர் பொருள் கூறியுள்ளார்.

ஏனெனில் கீழ் காற்று, தீ, நீர் போன்ற பஞ்ச பூதங்கள் எவையும் ஜீவனைக் கொல்லக் காரணமாகாது என்றான். இங்கே பஞ்ச பூதங்களும் அவைகளாலான அசேதனப் பொருள்களும் தவிர மற்ற ஜீவனும், மற்றொரு ஜீவனை அழிக்க காரணமாக மாட்டான் என்பதையே சொல்கிறான் என்பதே ஸ்ரீ பாஷ்காரருடைய கருத்து.

ஒரு செயல் உண்டாக பல காரணங்கள் உண்டு. ஒரு குடம் உண்டாக மண் குயவன், தண்டம் சக்கரம் போன்றவை காரணமாகிறது போல, ஒரு ஜீவாத்மாவைக் கொல்ல எவ்வித உபாதான காரணமோ ஸஹகாரி காரணமோ நிமித்த காரணமோ எதுவுமில்லை; ராமன் இராவணனைக் கொன்றான் என்கிறதில் இராவணனுடைய ஜீவாத்மாவை அந்த சரீரத்திலிருந்து பிரித்தான் என்பது பொருளே ஒழிய, அவனுடைய ஆத்மாவைக் கொன்றான் என்பது பொருளல்ல; [" பரியனாகி வந்த அவுணனுடல் கீண்ட " — அவுணனுடைய உடலைக் கீண்டானே ஒழிய, அவன் உயிரை மாய்க்கவில்லை (திருப்பாணாழ்வார்). ஜீவன் பகவானுக்கு கௌஸ்துபம் போல மிகப் பிரியமான பொருள், ஈசுவரனை அடையவொட்டாமல் தடுக்கும் சரீரத்தை அழித்தானே ஒழிய ஜீவனை அழிக்கவில்லை; " கண்ணியும் கண்ணகில் மேலன் நடுவே ஓர் உடம்பிலிட்டு "; ஈச்வரனை நாம் அடைய விடாமல் செய்கிறது இச்சரீரம் என்கிறார் நம்மாழ்வார்.]

**ந ஜாயதே ம்ரியதே வா கதாசித் நாயம் பூத்வா பவிதா வா ந பூய:**
**அஜோ நித்ய: சாச்வதோऽயம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே**
**சரீரே ॥ 20 ॥**

ஜீவன் எப்பொழுதும் பிறப்பவனுமல்லன்; இறப்பவனுமல்லன். சில காலம் இல்லாமலிருந்து தோன்றினவன் என்பதுமில்லை; சரீரம் அழிந்தாலும் ஜீவன் அழிகிறானல்லன்.

" ந ஜாயதே வா ம்ரியதேவா கதாசித் "—ஆத்மா எப்பொழுதும் உண்டாகிறவனல்லன், அழிகிறவனுமல்லன். " கதாசித் "– எப்பொழுதும்! அதாவது கல்பம் ஆரம்பித்து முடியும் வரையில் உள்ள காலத்தையெல்லாம் சொல்கிறது. ஆயிரம் சதுர்யுகம் கொண்டது ப்ரஹ்மாவின் ஒரு பகல். இதுவே கல்பம் எனப்படும். இங்கே நைமித்திய ப்ரளயம் சொல்லப்படுகிறது.

" நாயம் பூத்வா பவிதா வா ந பூய:! " இதில் மஹா ப்ரளயம் சொல்லப்படுகிறது மஹா ப்ரளய காலத்தில் ஜீவன் அழிந்து மறுபடியும் உண்டாகிறான் என்பதில்லை.

" நைமித்ய ப்ரளயம் "—

மனிதரின் ஒரு வருடம் தேவர்களின் ஒருநாள். இப்படி தேவர்களின் 360 நாள் ஒரு தேவ வருடம். 12000 தேவ வருடங்கள் ஒரு சதுர்யுகம். 1000 சதுர்யுகம் நான்முக ப்ரஹ்மாவின் ஒரு பகல். இப்படி ப்ரஹ்மனின் பகல் முடிந்து இரவு வந்ததும் ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள பூ : புவ : ஸுவ : என்கிற லோகங்களெல்லாம் அழிந்து விடுகின்றன ; இது தான் " நைமித்ய ப்ரளயம் ".

மஹா ப்ரளயம் :—

ப்ரஹ்மாவின் பகல் வந்ததும் முன் போலவே அந்த லோகங்கள் ப்ரஹ்மாவினால் ச்ருஷ்டிக்கப்படுகின்றன.

2000 சதுர்யுகம் ப்ரஹ்மாவின் ஒரு நாள். அப்படி 360 நாட்கள் ப்ரஹ்மனின் ஒரு வருடம். அப்படி 100 வருடங்கள் ப்ரஹ்மனின் ஆயுள்.

ப்ரஹ்மனின் ஆயுள் முடிந்ததும், ப்ரஹ்ம லோகம் உள்பட எல்லா லோகங்களும் அழிந்து விடுகின்றன. இது தான் " மஹா ப்ரளயம் ". அப்போது "ஏகோஹவை நாராயண ஆஸீத், ந ப்ரஹ்ம ந ஈசான:" என்கிற ச்ருதியின்படி பகவான் நாராயணன் ஒருவனே உளன், ப்ரஹ்மாவும் சிவனும், மற்ற எந்த தேவதைகளும் அவர்களின் லோகங்களுமில்லை ; " ஒன்றும் தேவும் உலகும் மற்றும் யாதுமில்லா அன்று " என்கிறார் ஆழ்வார். இக்காலத்திலும் ஜீவன் அழிகிறதில்லை. பகவானிடம் ஜீவன் ஒன்றிக் கிடக்கிறான். " நாயம் பூத்வா பவிதா வா ந பூய : கதாசித் "—என்பதினால் இதையே கண்ணன் அருளியிருக்கிறான்.

" அஜோ நித்ய : சாஸ்வதோயம் புராண : சரீரே அன்ய மானே ".

" அஜ : " — உற்பத்தியில்லாதவன் ; " நித்ய " : — ஆதலால் நித்யன் ; "சாஸ்வத :"—ஒருவித மாறுதலுமில்லாதவன் ; "புராண :"— எப்பொழுதும் அபூர்வமானவன் ; "அங்யமானே சரீரே :" சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவன்.

பிறத்தல், இறத்தல், மாறுதல் முதலானவைகள் ஜீவனுக்கில்லை ; சரீரத்திற்கே உள்ளவை,

**வேதாவிநாசிநம் நித்யம் ய ஏநம் அஜம் அவ்யயம் |**
**கதம் ஸ புருஷ : பார்த்த கம் காதயதி ஹந்தி கம் 21**

பார்த்தா ! எவன் இந்த ஜீவனை அழிவில்லாதவன், மாறுதலில்லாதவன், பிறப்பில்லாதவன் என்று அறிகிறேனோ, அவன் எப்படி ஒருவனைக் கொல்பவனாவான் ? அல்லது ஒருவனால் கொல்லப்படுபவனாவான் ?

ஜீவனுக்கு பிறப்பு இறப்பில்லை என்று சொல்வதில் மாத்திரம் பகவானுக்கு திருப்தியில்லை ; ஜீவன் எப்பொழுதும் ஒரு படிப் பட்டிருப்பவன், "அவ்யயம்" என்கிறான். சரீரத்திற்குள்ள ஜாயதே, அஸ்தி, பரிணமதே, விவர்த்தேதே, அபக்ஷீயதே, விநச்யதி, (உண்டாதல், இருத்தல், மாறுதல், வளர்தல், குறைதல், அழிதல்) என்கிற ஆறு விகாரங்களும் ஜீவனுக்கில்லை.

"ய : ஏனம் அஜம் அவிநாஸம் அவ்யயம் வேத"—.

"அஜம்"—உற்பத்தியில்லாதவன் ; "அவிநாஸம்"—அழிவில்லாதவன், "அவ்யயம்"—எப்போதும் ஒருபடிப் பட்டிருப்பவன். இப்படி அசித்துக்குள்ள விகாரங்களற்றவன் ஜீவன் என்பதை எவன் அறிகிறானோ, அவன் ஆத்மாவைக் கொல்பவனாகவோ, கொல்லப்படுபவனாகவோ அறிய மாட்டான். "கம் காதயதி"—ஒரு ஜீவன் எப்படி ஒருவனைக் கொல்லச் செய்பவனாகிறான் ?

**வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய நவானி க்ருஹ்ணாதி நரோऽபராணி |**
**ததா சரீராணி விஹாய ஜீர்ணாநி அந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ 22**

எப்படி ஒருவன் தன் பழைய கிழிந்த ஆடைகளை எறிந்து விட்டு, புதிய உடையை அணிகிறானோ, அவ்வாறே ஒரு ஜீவன் தன் பழைய உடலை விட்டு வேறு புதிய உடலை அடைகிறான்.

போரில் இறக்கும் க்ஷத்ரியனுக்கு சுவர்க்கமே கிடைக்கிறது ; ஆதலால் அவனுக்கு, நல்ல சரீரமே உண்டாகிறது; பழைய வஸ்திரத்தை விட்டு புதிய பட்டு பீதாம்பரம தரிக்க எவனாவது வருந்துவானா ? பீஷ்மர் த்ரோணர் போரில் இறந்தால், அவர்களுக்கு மேலான சரீரமே கிடைக்கும் ஆதலால் அர்ஜுனா ! அவர்களின் சரீரம் அழிவதைப் பற்றி நீ வருந்த வேண்டாம்.

ஒருவன் நடக்கும்போது, முன் காலை எடுத்து வைத்து, ஊன்றிய பிறகே பின் காலை எடுப்பது போலவே, ஜீவன் வேறு ஒரு சரீரத்தைப் பற்றிய பிறகே, பழைய சரீரத்தை விடுகிறான்.

**நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக : |**
**ந சைநம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத : || 23 ||**

**அச்சேத்யோऽயம் அதாஹ்யோऽயம் அக்லேத்யோऽசோஷ்ய ஏவ ச |**
**நித்ய : ஸர்வகத : ஸ்த்தாணுரசலோऽயம் ஸநாதந : || 24 ||**

ஆத்மாவை கத்தியினால் வெட்ட இயலாது; நெருப்பினால் கொளுத்த முடியாது; தண்ணீரால் நனைக்க வொண்ணாது; காற்றினால் உலர்த்தவும் ஆகாது

ஆத்மா, ஆயுதங்களால் வெட்டமுடியாதவன், நீரினால் நனைக்கவோ, நெருப்பினால் எரிக்கவோ முடியாதவன். அழிவில்லாதவன், எங்குமிருப்பவன், நிலையாயிருப்பவன், அசைவில்லாதவன்.

ஜீவாத்மா அணு ஸ்வரூபன். ஒரு நெல் நுனியை ஆயிரம் பாகமாக்கினால் எவ்வளவு சிறியதோ அதைவிடச் சிறியவன். ஆதலால் எந்த வஸ்துவும் ஆத்மாவினுள் நுழைந்து அதை அழிக்க முடியாது.

இதில், ஜீவனை "நித்ய:" –எப்போதுமிருப்பவன் : "ஸர்வகத:"– எங்குமிருப்பவன் : "ஸ்தாணு—நிலையாக இருப்பவன் ; "அசல :"– சலனமில்லாதவன். "ஸநாதன :"—ஆதியற்றவன் என்கிறான்.

அணுவாய் ஒரு சரீரத்தின் ஹ்ருதயத்திலிருக்கும் ஜீவனை "ஸர்வகத :" எங்குமிருப்பவன் என்பது எப்படிக் கூடும் ?

ஓரிடத்திலிருக்கும் தீபம் எப்படி தன் ஒளியினால் பல இடங்களில் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறதோ, எப்படி ஆகாஸத்திலிருக்கும் சூரியன் தன் காந்தியினால் எங்கும் ப்ரகாசித்திருக்கிறானோ, அதே போல ஒரு சரீரத்தின் ஹ்ருதயத்திலிருக்கும் ஜீவன் தன் தர்மபூத ஞான ஒளியினால் எங்கும் ப்ரகாசிக்கக் கூடியவன்; ஆதலால் எங்குமிருப்பவன் என்கிறான்.

சௌபரி என்னும் ரிஷி தன் ஞானத்தினால் ஐம்பது சரீரத்தில் பரவியிருந்து, ஐம்பது அரசகுமாரிகளை விவாகம் செய்து வாழ்ந்து வந்தார் என்கிற சரிதம் பார்க்கப்படுகிறது.

ஜீவன் ஸ்வரூபத்தினால் அணுவாயிருந்தாலும், அவனுடைய ஞானம் (அறிவு) "விபு", மிகப் பெரியது. தன் ஞான ஒளியினால் எங்கும் பிரகாசித்திருக்கக் கூடியவன் ; முக்தி தசையில் தான் இது

நன்ருக ப்ரகாசிக்கும். சம்சார தசையில் அது கர்மாநுகுணமாக குறைந்திருக்கிறது. நம் சரீரம் முழுவதும் இந்த ஞான ஒளி ப்ரகாசித்திருக்கிறது.

ஞானம் ஒவ்வொரு தசையை அடையும்போது, அதை "அன்பு" என்றும், "அவா" என்றும் "பக்தி" என்றும் சொல்கிறோம். "ஸ்நேஹோமே பரமோ ராஜந்" என்று அநுமான் ராமனைப் பார்த்துச் சொல்லும் வார்த்தை. "என் ஆத்மா அணுவாகயிருந்தாலும் எனக்கு உன்னிடமுள்ள அன்பு "பரம", மிகப் பெரியது" என்கிருர்.

"என் தன் அளவல்லால் யானுடைய அன்பு" என்பது பூதத்தாழ்வாரின் பாசுரம். ஆத்மா "அணு ஸ்வரூபன்". அவனுடைய ஞானம் பரிசுத்த தசையில் "விபு" என்பது விசிஷ்டாத்வைத மதக் கொள்கை.

**அவ்யக்தோ S யமசிந்த்யோ S யமவிகார்யோ S ய முச்யதே !**
**தஸ்மாதேவம் விதித்வைநம் நாநு சோசிது மர்ஹஸி 25**

ஜீவன் ஐம்புலன்களுக்கு எட்டாதவன். மனத்தினால் சிந்திக்க முடியாதவன். மாறுதல் இல்லாதவன் எனச் சொல்லப்பட்டிருக்கிறது. அர்ஜுந! இவ்வாறு நீ அவனைத் தெரிந்து கொண்டு, ஜீவாத்மாவைப் பற்றி சோகிக்க வேண்டியதில்லை.

கண் மூக்கு நாக்கு தோல் காதுகளாகிய பஞ்சேந்த்ரியங்களால் அறியப்படும் பொருள் "வ்யக்தம்". ஜீவன் இவைகளால் அறியப் படுபவனல்லன், "அவ்யக்தம்". உலகில் ஜீவனைப் போன்ற பொருள் எதுவும் இல்லாததினால் ஜீவனை இப்படிப் பட்டவன் என மனத்தினால் சிந்திக்கவும் முடியாது, "அசிந்த்யன்". ஒருவித ஸ்வரூப மாறுதலும் இல்லாதவன், "அவிகாரன்". ஆதலால் இத்தகைய ஆத்மாவைக் குறித்து நீ சோகிக்க வேண்டாம்.

**அத சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம் !**
**ததாபி த்வம் மஹாபாஹோ நைவம் சோசிதுமர்ஹஸி 26**

அன்றிக்கே, ஜீவனை எப்போதும் பிறப்பவனாயும் இறப்பவனாயும் நீ நினைத்தாயேயாகிலும், தோள்வலிமையுள்ள அர்ஜுந! நீ ஜீவனைக் குறித்துத் துக்கப்படுவதற்கு உரியவனில்லை.

ஆத்மாவும் சரீரமும் ஒரு தத்வமில்லை; ஆத்மா நித்யன், சரீரம் அநித்யம் தான். ஆனாலும் சிலர் நினைக்கிறபடி சரீரமும் ஆத்மாவும்

ன்று என்ருலும், உற்பத்தியும் விநாசமுமுள்ளதைப் பற்றி நீ கவலைப்பட்டுப் பிரயோசனமில்லை

"நித்ய ஜாதம் நித்ய அம்ருதம் வா"—நித்யமாயிருக்கும் ஆத்மாவை எப்போதும் பிறப்பவனுகவும் இறப்பவனுகவும், "மன்யஸே' ததாபி" நீ நினைத்திருந்தாயேயாகிலும் "ஏனம் சோசிதும் ந அர்ஹஸி"-அவ்வாத்மாவைக் குறித்து நீ வருத்தப்பட உரியவனில்லை "நித்ய ஜாதம்" என்ருல் க்ஷணம் தோறும் மாறுதலுடைய சரீரம்.

சார்வாக மதத்தில் இப்படி கண்ணுல் காணமுடியாத ஆத்மாவை உண்டு என ஒப்புவதில்லை. "ருணம் க்ருத்வா க்ருதம் புங்த்வா"— கடனை வாங்கு, நெய் சாப்பிடு. அதாவது போக போக்யங்களை அநுபவி என்பது அவர்களின் கொள்கை.

**ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு : த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச |**
**தஸ்மாத் அபரிஹார்யேऽர்த்தே ந த்வம் சோசிதும் அர்ஹஸி || 27 ||**
**அவ்யக்தாதீநி பூதாநி வ்யக்த மத்யாநி பாரத |**
**அவ்யக்தநிதநாந்யேவ தத்ர கா பரிதேவநா || 2○ ||**

உண்டாகும் பொருள்களுக்கு அழிவும், அழியும் பொருளுக்கு உண்டாதலும் நிச்சயம் உண்டு. ஆதலால் கட்டாயம் அழியக் கூடிய சரீரமே ஆத்மா என்று நீ எண்ணிணுலும், நீ அதற்கு சோகிக்க வேண்டியதில்லை.

சரீரம் இல்லாமலிருந்து உண்டாகி சில காலமிருந்து பிறகு அழிகிறது. இப்படித் தோன்றி மறையும் சரீரத்தைக் குறித்து நீ வருந்த வேண்டியதில்லை.

மண்ணிலிருந்து குடம் உண்டாகிறது. அது உடைந்து மண்ணுகிறது; மறுபடியும் அம்மண்ணிலிருந்து குடம் உண்டாகிறது. இப்படி அழியும் பொருட்களுக்கு உற்பத்தியும், உற்பத்தியுள்ள பொருட்களுக்கு அழிவும் நிச்சயம் உண்டு. ஆதலால் ஆத்மாவை நீ சரீரமென்றே எண்ணிணுலும் கவலைப்பட வேண்டாம்.

ஒரு தாய் வயிற்றில் கர்பவாஸம் செய்வதும் கஷ்டம். ஜனனமும் கஷ்டம்; மரணம் அதற்கு மேல் கஷ்டம். மரணுவஸ்தை என்றே கூறுவர். ஆனுல் யாராவது இனி இந்த கர்ப்பவாஸம் கூடாது என அதற்காகக் கவலைப்படுகிருர்களா? இல்லை ஆனுல் நடுவில் உள்ள நான்கு நாட்களுக்கு, அதாவது சில காலம் இந்த பூமியிலிருப்பதற்கே கவலை நமக்கு அதிகமாக இருக்கிறது. பகவான் என்ன சொல்

கிறான் என்றல் சரீரத்திலிருக்கும் காட்களுக்கு உணகரு கவலை வேண்டாம்; சிறையில் போட்டவன் அன்னம் போடுவான்; ஆனால் நமக்கு இனி இச்சிறைவாசம் கூடாது என்பதற்குத் தான் கவலை வேண்டும். அதற்குச் சேர நல்ல சரித்திரமுள்ளவனாக இருத்தல் வேண்டும்.

**ஆச்சர்யவத் பச்யதி கச்சித் ஏநம்**
**ஆச்சர்யவத் வததி ததைவ சாந்ய: ।**
**ஆச்சர்யவச்சைநம் அந்யச் ச்ருணோதி**
**ச்ருத்வாப்யேநம் வேத ந சைவ கச்சித் 29**

யாரோ ஒருவன் ஞான யோகம் செய்து ஜீவாத்மாவை ஒரு ஆச்சரியப் பொருளாகப் பார்க்கிறான். அவர்களில் யாரோ ஒருவன் அதை ஓர் ஆச்சர்ய வஸ்துவாகப் பேசுகிறான். யாரோ ஒருவன் அதைக் கேட்கிறான். ஆனால், ஜீவாத்மாவைக் கண்டவனோடு, கேட்டவனோடு வாசியற எவனும் ஜீவனை உள்ளபடி அறிகிறானில்லை.

நாம் உலகில் காணும் வஸ்துக்களைப் போல் ஜீவனில்லை; விஜாதீயமானது; வேறுபட்டது. இந்த உடல் ஆத்மாயில்லை. ஜீவனை ஈச்வரன் போல் ஸ்வாமி என்பதற்கில்லை. அசித்தைப் போல் சொத்து என்பதற்குமில்லை. ஜீவனை உள்ளபடி அறிந்தால், "பகவத் தாஸ்யமே" பிரகாஸிக்கும். இப்படி ஜீவனை அறிபவனே உண்மையான ஜீவாத்ம ஞானம் பெற்றவன். ஆனால் இதை அறிபவன் துர்லபன் (அரிது) என்கிறான்.

**தேஹீ நித்யமவத்யோऽயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।**
**தஸ்மாத்ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிதுமர்ஹஸி 30 ॥**

பாரதா! எல்லாப் பொருள்களிலும் உள்ள ஆத்மா எவனும் நிச்சயமாகக் கொல்லப்படுபவனல்லன்; ஆதலால், நீ எந்த ஒரு ஜீவனைப் பற்றியும் சோகிக்க வேண்டாம்.

"ஸர்வஸ்ய தேஹே அயம் ஆத்மா அவத்ய:" தேவன், மனிதன், திர்யக், தாவரம் என பலவிதமான சரீரங்கள் உள்ளன. இவைகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஜீவனிருக்கிறான். இவர்களின் ஜாதி, குலம், குணம், இடம், ஆஹாரம், ஆயுட்காலம் மாறுபட்டிருக்கின்றன. அதே போல, சிலர் அநித்யர்களாகவும், சிலர் நித்யர்களாகவும் இருத்தல் கூடுமோ என்கிற சங்கையைப் போக்குகிறான் அர்ஜுந! எந்தச் சரீரமானாலும் அதிலுள்ள ஆத்மா அழிவில்லாதவனே: கொல்லப்படுபவனில்லை என்கிறான்.

**ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதும் அர்ஹஸி !**
**தர்ம்யாத்தி யுத்தாத் ச்ரேயோऽன்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ॥ 31 ॥**

அர்ஜுந! உனக்குரிய தர்மத்தைப் பார்த்தாலும், நீ தொடங்கிய போரிலிருந்து, விலக உனக்கு உரிமையில்லை ; ஒரு க்ஷத்ரியனுக்குப் போரைவிட மேலான தர்மம் எதுவுமில்லை.

"அத்வேஷ்டா ஸர்வ பூதானாம்" என்றும், "ஸர்வபூத ஹிதே ரத:" என்றும் கீதையில் கண்ணனே எந்த ஒரு ஜந்துவுக்கும் தீங்கைச் செய்யக்கூடாது என்று சொல்லியிருக்கிறான். "நஹிம்ஸ்யாத் ஸர்வாபூதாநி' —"பிராணி வதை கூடாது" என்று ச்ருதியும் சொல்லியிருக்க, இங்கே பலரைக் கொல்லும் போரை தர்மம் என்பது எப்படி ?

இதற்குப் பலர் கூறும் சமாதானம் என்னவென்றால், பொய் சொல்லக்கூடாது என்பது பொதுவான விதி ; ஆனால் "விவாஹ காலே ரதிஸம்ப்ரயோகே" என்கிறபடி சில சமயங்களில் பொய் சொல்லலாம் என்கிற விலக்கு இருப்பது போல இங்கேயும் பிராணி ஹிம்ஸை கூடாது என மேலே சொன்னவை பொது வான விதி.' போரில் க்ஷத்ரியன் கொல்வது அதில் விலக்கு; அது தர்மமாகும் என்கிறார்கள்.

ஆனால், நம் பாஷ்யகாரர், "ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி," என்கிற ச்ருதியே "அக்நி ஷோமீயம் பசுமாலபேத" என்று யாகத்தில் பிராணி வதையை விதித்திருக்கிறது. அந்தப் பிராணிக்கு மோக்ஷமே சித்திக்கிறபடியால், அது பிராணிவதையாகாது. அதற்கு நன்மையே செய்கிறோம் ; அது தர்மமே யாகும். ஆதலால் இரண்டு ச்ருதி வாக்யங்களுக்கும் விரோதமில்லை என்று பார்க்கிறோம். அதே போல, "ஸர்வபூத ஹிதே ரத:" என்கிற கீதா வாக்யத்திற்கும், இங்கே பலரைக் கொல்லும் போர் தர்மம் என்பதற்கும் விரோதமில்லை. ஏனெனில் போரில் கொல்லப்படும் க்ஷத்ரியனுக்கு மோக்ஷமே கிடைக்கிறது. அது அவனுக்கு செய்யும் நன்மையே யாகும். இது அதர்மமன்று. ஆதலால் க்ஷத்ரியனுக்குப் போர் தர்மமே என்பது ஸ்ரீ பாஷ்யகாரரின் நிர்வாஹம்.

**யத்ருச்சயா சோபபந்நம் ஸ்வர்கத்வாரம் அபாவ்ருதம் !**
**ஸுகிந : க்ஷத்ரியா : பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம் ॥ 32 ॥**

நீ ஒரு முயற்சியும் செய்யாமல் தானாகவே கிடைத்ததும், மேலான சுகத்தைத் தரும் சுவர்க்கம் பெற சுலபமான உபாயமுமான இப்போர், புண்ய முள்ள க்ஷத்ரியனுக்கே கிடைக்கும். ஆதலால், அர்ஜுந ! நீ போர் செய்வாய்.

"யத்ருச்சயா உபபந்நம்"—பூர்வ ஜன்ம புண்ய பலனடியாகக் கிடைத்திருக்கும் போரை நீ வேண்டாமென்னலாமா? "அயத்னேன"—ஒரு முயற்சியுமில்லாமல் தானாகக்கிடைத்திருக்கும் போரை நீ கைவிடலாமா? "ஸ்வர்க்கத்வாரம்"—மோக்ஷத்திற்கு சுலபமான வழியான இந்த தர்மப் போரிலிருந்து நீ விலகலாமா? "ஸுகினா"—புண்ய பலனை மோக்ஷம் கொடுக்கும் போரை நீ செய்ய வேண்டாவோ?

அர்ஜுந! நீ பூர்வ ஜன்மத்தில் நிறைய புண்ணியம் செய்தவன். அதன் பயனாக, நீ முயற்சியாமலே, மோக்ஷ ஸாதனமான தர்மப் போர் உனக்குக் கிடைத்திருக்கிறது. நீ இதைச் செய்தேயாக வேண்டும். "ஸ்வர்க்கம்" என்றால் நிரந்தர சுகத்தைக் கொடுக்கும் மோக்ஷம். "ஸுகின:"—என்றால் புண்யமுடையவர்கள்.

**அத சேத் த்வம் இமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।**
**தத: ஸ்வதர்மம் கீர்த்திஞ் ச ஹித்வா பாபம் அவாப்ஸ்யஸி ॥ 33 ॥**

**அகீர்த்திஞ்சாபி பூதாநி கதயிஷ்யந்தி தே'வ்யயாம் ।**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்மரணாத் அதிரிச்யதே ॥ 34 ॥**

**பயாத் ரணாத் உபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா: ।**
**யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥ 35 ॥**

அப்படியல்லாமல், க்ஷத்ரியன் அவசியம் செய்ய வேண்டிய தர்மப் போரை அதன் உண்மையறியாமல் நீ விட்டுவிடுவாயாகில், பரலோக சுகத்தை இழந்து விடுவதுமன்றி, இந்த லோகத்தில் கிடைக்கக்கூடிய புகழும் போய், பாபத்தையே அடைவாய்.

மேலும் உலகிலுள்ள சாதாரண மனிதரும், அர்ஜுனன் பயந்து போர் செய்யாமல் ஓடி விட்டான் என்று ஏசுவர். அதனால் உனக்கு அபகீர்த்தியே உண்டாகும். அதை விட மரணமே மேலானதன்றோ!

மஹாசூரர்களான கர்ணன் முதலானோர், "நம் வீர்ய பராக்ரமத்தைக் கண்டு அர்ஜுனன் அஞ்சி ஓடிவிட்டான்" என்று உன்னை ஏசுவர். அவர்களால் மதிக்கப்பட்ட நீ இகழ்ச்சியே அடைவாய்.

அர்ஜுன! சுகம் கீர்த்தி இவை போய்விடும் என்பது மாத்திரமில்லை; "பார்த்தனேவ தநுர்த்தர!" என புகழ் பெற்ற அர்ஜுனன் பயந்து ஓடிவிட்டான் என்று "பூதாநி"—பூமியிலுள்ள சமர்த்தர், அசமர்த்தர் உள்பட எல்லோரும் உன்னைப் பரிஹஸிப்பர். எல்லாம்

வல்லவனுக்கு அபகீர்த்தியைவிட மரணமே மேலானது. அபகீர்த்தியைப் பொறுக்காமல், நீ மறுபடியும் போர் செய்ய வருவாய். என் சொல்லைக் கேட்டு இப்போதே நீ போர் செய்யலாகாதா!

அர்ஜுன! "கருணையினால் தானே நான் போர் செய்யவில்லை என்று நீ நினைத்தாலும், சூரர்களான கர்ணன் முதலானோர் அப்படி நினையார். நம் பராக்ரமத்தைக் கண்டு பயந்து அர்ஜுனன் ஓடி விட்டான் என்றே உன்னை ஏசுவர். அதைக் கேட்டு நீ மறுபடியும் போர் செய்ய வருவாய்; அப்போதைக்கு இப்போதே என் சொல்லைக் கேட்டு நீ போர் செய்யலாகாதா!

**அவாச்யவாதாம்ச பஹூந் வதிஷ்யந்தி தவாஹிதா: |**
**நிந்தந்தஸ் தவ ஸாமர்த்யம் ததோ துக்கதரம் நு கிம் || 36 ||**

**ஹதோ வா ப்ராப்ஸ்யஸே ஸ்வர்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம் |**
**தஸ்மாத் உத்திஷ்ட்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிச்சய: || 37 ||**

"அர்ஜுன!" இன்னும் உன் சத்ருக்கள் உன் திறமையை பலபடியாக இகழ்ந்து, சொல்லத் தகாத வார்த்தைகள் பல கூறி உன்னை ஏசுவர். அதைவிட மேலான துக்கம் உலகில் வேறு உண்டோ?

அர்ஜுன! நீ போரில் ஜெயித்தால் இராஜ்யம் பெற்று ஆண்டு அனுபவிக்கலாம்; பிறகு மோக்ஷமும் கிடைக்கும். ஆதலால் துணிவுடன் நீ போர் செய்வாயாக.

"சுவர்கம்" என்றால் இங்கு மோக்ஷம் என்றே பொருள். எந்த கர்மாவுக்கும் ப்ரதான பலன் என்றும் அவாந்தர பலன் என்றும் இரண்டு உண்டு. நீ விரும்பிப் பெறும் பலன் "ப்ரதான பலன்". போரில் ஜெயிக்கும் க்ஷத்ரியனுக்கு இராஜ்யம் ப்ரதான பலன். மோக்ஷம் "அவாந்தர பலன்".

அர்ஜுன! உன் சத்ருக்கள் உன்னைச் சொல்லத்தகாத வார்த்தைகளால் நிந்திப்பர். அதைப் பொறுக்கமாட்டாமல், நீ மறுபடியும் யுத்தம் செய்ய வருவாய். இப்போதே என் வார்த்தையைக் கேட்டு நீ போர் செய்யலாகாதா?

இங்கே, தேசிகன் ஒரு சரித்திரம் சொல்லியிருக்கிறார்.

முன்னொரு சமயம் அர்ஜுனன், "நான் ஒருவனே போரில் எல்லா சைன்யங்களையும் ஒரே நாளில் கொன்று ஒழித்து விடு

வேன்" என்று சொன்னதைக் கேட்ட தர்மபுத்திரர் கோபம் கொண்டு, "அர்ஜுனா ! உன் வில்லைக் கீழே போடு" என்றார். இப்படித் தன்னை தூஷிப்பவரின் தலையைச் சீவி விடுவதாக ஏற்கனவே அர்ஜுனன் சபதம் ஒன்று இருந்தது அதற்குச் சேர, தருமனின் தலையைச் சீவ அர்ஜுனன் முற்படுகிறான். அங்கிருந்த கண்ணன், "ஜ்யேஷ்ட ப்ராதா பித்ரு ஸம:", என்பதைச் சொல்லி, அர்ஜுனனைத் தடுத்தார். "நீ தருமனைத் "த்வம், த்வம்" (நீ, நீ, நீ) என மூன்று தடவைச் சொல்லு ; அதுவே அவரைக் கொல்லுவதற்குச் சமம்" என்று சொல்ல, அர்ஜுனனும் அப்படியே சொல்லி, தன் சபதத்தை ஒருவாறு நிறைவேற்றிக் கொண்டிருக்கிறான்.

இதனால், "பெரியோரை ஏக வசனத்தில்" (ஒருமையில்) "அவமரியாதையாகச் சொல்வது பாபம்" என்பது தேறுகிறது. இந்த பாபம் போக பூ : ப்ரதக்ஷணம் பிராயச்சித்தம். எங்கும் நிறைந்த விஷ்ணு ரூபியான கண்ணனை மூன்று தடவை வலம் வந்து (ப்ரதக்ஷணம் செய்து) தன் பாபத்தை அர்ஜுனன் போக்கிக் கொண்டான் என்பது சரிதம்.

இதை இங்கு கண்ணன் எடுத்துச் சொல்லி, "நீ உன் தமயன் வார்த்தையையே பொறுக்கவில்லையே ! எதிரிகள் உன்னை ஏசினால் பொறுக்க முடியாது ; கட்டாயம் யுத்தம் செய்ய வருவாய், இப்போது என் வார்த்தையைக் கேட்டு, போர் செய்யலாகாதா ?" என்கிறான் கண்ணன்.

கண்ணன் இவ்வளவு கூறியும், "கரிஷ்யே வசனம் தவ" என்று அர்ஜுனன் சொல்ல வில்லை. 18-வது அத்யாயம் கடைசியிலேயே சொல்கிறான். இது என்ன ஆச்சர்யம் !

" ஸம்ஸார பந்தத்தை வளர்க்கும் பாபம் போக எவ்வாறு கர்மாவைச் செய்ய வேண்டும்".

**ஸுகதுக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ !**
**ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபம் அவாப்ஸ்யஸி ॥ 38**

இன்ப துன்பம், லாபம் நஷ்டம், வெற்றி தோல்விகளை சமமாக எண்ணி நீ போர் செய்வாயாக. இப்படிச் செய்தால், நீ பாபம் அடைய மாட்டாய் ; உனக்கு மோக்ஷமே கிட்டும்.

கண்ணன் அர்ஜுனனை வ்யாஜமாக வைத்து, உலகத்தவரின் ஆத்ம நன்மைக்காகவே கீதை உபதேசம் செய்திருக்கிறான். இந்த ச்லோகத்

தில் அவரவரின் வர்ணாசிரமத்திற்குச் சேர சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மாவை எந்த புத்தியுடனிருந்து செய்தால், நமக்கு மோக்ஷம் சித்திக்கும் என்பதைச் சொல்கிறான்.

கர்மாவே மோக்ஷ ஸாதனமன்று; ஞானாத் மோக்ஷ:—ஞானமே மோக்ஷ சாதனம். ஞானம் என்பது பகவத் பக்தியையே குறிக்கிறது. பகவானையும், அவன் குண சேஷ்டிதங்களையும் தைல தாரை போல இடைவிடாது சிந்திக்கிற சிந்தனமே பகவத் பக்தி. இதைச் செய்ய கர்மாநுஷ்டானம் உபகரணமாகிறது. ஒருவன் தனக்குரிய கர்மாவை விடாமல் செய்து வந்தால், பக்திக்குத் தடையான ரஜோ குண, தமோ குணங்கள் அடங்கி ஸத்வ குணம் மேலோங்கி பக்தி செய்ய அநு குணமாகிறது.

இந்த கர்மாநுஷ்டானம் செய்யும்போது, சுகமும் உண்டாகலாம்; துக்கமும் உண்டாகலாம்; அப்படி உண்டாகும் இன்ப துன்பம், லாப அலாபங்களைப் பொருட்படுத்தக் கூடாது; இரண்டையும் சமமாகக் கருதி விகாரமற்று இருத்தல் வேண்டும். ஸ்ரீ ராமனுக்கு முதல் நாள் இராஜ்யம் உண்டு என்ற போதும், மறுநாள் இல்லை என்ற போதும் ஒரு வித சந்தோஷமோ துக்கமோ அவன் அடையவில்லை. விகாரமற்றே யிருந்தான். கர்ம யோகம் செய்பவன் அதே போல் இருத்தல் வேண்டும்.

அர்ஜுன! நீ யுத்தம் செய்யும்போது நீ உன் சத்ருக்களை அடிக்கலாம்; அவர்களும் உன்னை அடிக்க நேரிடலாம். உனக்குப் போரில் வெற்றியோ, தோல்வியோ ஏற்படலாம். இரண்டிலும் சம புத்தியோடு இருக்க வேண்டும். "ததோ யுத்தாய யுஜ்யஸ்வ"—போர் செய்வது க்ஷத்ரிய தர்மம் என்றே போர் செய்வாயாக.

இப்படி இருந்து செய்தாயாகில் 'நைவம் பாபம் அவாப்ஸ்யஸி"—நீ பாபம் அடைய மாட்டாய் என்கிறான். "இங்கு பாபம் என்றால் என்ன? பீஷ்ம த்ரோணரைக் கொல்வது பாபமாகாது; அவர்களுக்கு ஆத்ம ச்ரேயஸ் உண்டாவதினாலே. இனி வரப்போகும் பாபத்திற்கு முன் கூட்டியே செய்யும் பிராயசித்தமும் கூடாதாகையினால், பின் வரப் போகும் பாபத்தையும் இங்குச் சொல்லவில்லை. "துக்கத்திற்கு எது காரணமோ அதுவே பாபம் எனப்படும். சம்சார பந்தமே துக்கத்திற்கெல்லாம் காரணம்". இந்த சம்சார பந்தமான பாபம் போகும்; சம்சார பந்தம் நீங்கினால் மோக்ஷம் சித்திக்கும்.

அவரவரின் ஜாதிக்குரிய கர்மாவை இந்த புத்தியுடனிருந்து செய்து வந்தால் சம்சார பந்தம் தொலைந்து, மோக்ஷம் சித்திக்கும்.

**இனி வேறு ப்ரகரணம்.** முதல் அத்யாயம், இரண்டாம் அத்யாயம் பன்னிரெண்டு ச்லோகம் வரையில் அவதாரிகை. பன்னிரண்டாம ச்லோகம் முதல் முப்பதாம ச்லோகம் வரையில், தகாத இடத்தில் அர்ஜுனனுக்குள்ள கருணையைப் போக்கி சரீர ஆத்ம விவேகத்தையும், கர்ம அநாம [illegible] தெளிய உபதேசித்தான். இனி கர்ம யோகத்தை உபதேசிக்கப் போகிறான்.

இதை நீ கவனத்துடன் கேட்டு அதன்படி நடந்தால் ஸம்ஸார பந்தம் நீங்கி மோக்ஷம் பெறுவாய் என்கிறான்.

**ஏஷா தே'பிஹிதா ஸாங்க்யே புத்திர்யோகே த்விமாம் ச்ருணு |**
**புத்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி || 39 ||**

**நேஹாபிக்ரமநாசோ'ஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே |**
**ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் || 40 ||**

ஆத்மாவைப் பற்றிய புத்தி யோகத்தை நான் உனக்கு இது வரையில் சொன்னேன். இனி கர்ம யோகத்தை எந்த புத்தியுடனிருந்து செய்ய வேண்டுமோ அதை உனக்குச் சொல்லப் போகிறேன். நீ அதைக் கவனமாகக் கேட்டு அதன்படி செய்தால், பூர்வ ஜன்ம கர்ம பலன் தொலைந்து ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவாய்.

இந்த கர்மயோகத்தைச் சிறிது செய்தாலும் வீணாகிறதில்லை இது பாதியில் விடப்பட்டாலும் பாபமில்லை; இந்த கர்ம யோகத்தில் அநுஷ்டானம் சிறியதாயிருந்தாலும், அது பெரிய ஸம்ஸார பயத்தினின்றும் காக்கும்.

**கர்மா :** அவரவர் வர்ணம, ஆச்ரமத்திற்குச் சேர சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட செயலை ஒரு பலனை விரும்பிச் செய்வது "கர்ம". இதைப் பூர்த்தியாகச் செய்தால் தான் பலன் உண்டு. இது நடுவில் விடப்பட்டால், பலனுமில்லை; பாபமும் சித்திக்கும். இதைச் செய்ய ஆத்ம ஞானம் வேண்டும்.

**கர்மயோகம் :** அவரவர் வர்ணாச்ரமத்திற்குச் சேர ஒரு பலனையும் விரும்பாமல், பகவத் ஆராதன ரூபமாய (பகவத் ப்ரீத்யர்த்தம்) செய்யப்படும் செயல் "கர்மயோகம்". இதை நடுவில் விட்டாலும் பலனுண்டு; பாபமுமில்லை. இதைச் சிறிது செய்தாலும், அது நம்மை ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிக்கும். ஆதலால், இதை "இட்ட படை கற்படை" என்கிறார் நம்பிள்ளை என்னும் மஹான்.

**வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தந ।**
**பஹுசாகா ஹ்யநந்தாச்ச புத்தயோऽவ்யவஸாயிநாம் ॥ 41 ॥**

இந்த கர்மயோகம் செய்பவனுக்கு புத்தி, மோக்ஷம் ஒன்றிலேயே நிலைத்திருக்கும். கர்மாவைச் செய்பவனுக்கோ வெனில், புத்தி ஒன்றில் நிலைத்திராது, பல வகையாக இருக்கும்.

முமுக்ஷு :

விசிஷ்டாத்வைத மதத்தில் பரமபத மென்கிற திவ்ய தேசத்தில் பகவானைக் கிட்டி அவனுக்குத் தொண்டு (பகவத் கைங்கர்யம்) செய்வதே மோக்ஷம். இதுவே ஒரு சேதனன் பெறக்கூடிய மேலான புருஷார்த்தம். இதில் இச்சையுடையவன் 'முமுக்ஷு':- இவன் நித்ய நைமித்ய காம்ய கர்மாக்களைச் செய்வான். ஆனால் இவன் புத்தி வேறு எந்தப் பலனையும் இச்சியாது, மோக்ஷம் ஒன்றிலேயே நிலைத்திருக்கும். இதையே "வ்யாவஸாய ஆத்மிகா புத்தி" என்கிறான். இவனுக்கு "ஆத்ம யாதாத்ம்ய ஞானம்" வேண்டும்.

**புபுக்ஷு :** இவ்வுலகில் பசு புத்திராதிகளையோ, பரலோகத்தில் சுவர்கம முதலான பலன்களையோ விரும்பி, அதற்குச் சேர கர்மாக்களைச் செய்பவன் "புபுக்ஷு". இவன் கர்மாவைச் செய்யும் போது, இவனுடைய புத்தி ஒன்றில் நிலைத்திராது ; ஏனெனில், இவன் விரும்பும் பலன் பலவாயிருக்கும்; அவைகளைப் பெற, செய்ய வேண்டிய கர்மாக்களும் பலவாயிருக்கும். இவனுக்கு ஆத்ம ஞானம் மாத்திரம் போதும்.

**ஆத்ம ஞானம் :** சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவன் ஜீவன்; இவன் நித்யன், அழிவில்லாதவன், சரீரம் அழிவுடையது, ஜீவாத்மாக்கள் பல ; ஒன்றல்ல என்கிற ஞானம்.

**ஆத்ம யாதாத்ம்ய ஞானம் :** சரீரத்தைக் காட்டிலும் வேறு பட்டவன் ஜீவன்; அவன் நித்யன்; அழிவில்லாதவன். சரீரம் அழிவுடையது. அணுத்வம், நித்யத்வம், ஞானத்வம், ஆனந்தத்வம், அமலத்வம் பகவத ப்ரகாரத்வமுமான ஆறு குணங்களுடன் ஜீவனை அறிவதே ஆதம யாதாதம்ய ஞானம்.

"அணுத்வம்" ஒரு நெல்லின் வால் நுனியை ஆயிரம் பாகமாக்கினால் எவ்வளவு சிறியதோ அதினிலும் சிறிய பரிமாணம் உள்ளவன் ஜீவன்.

"நித்யத்வம்" முக்காலத்திலுமுள்ளவன். அழிவேயில்லதவன்

"ஞான தவம்" : ஞான ஸ்வரூபியாயும், ஞானத்தை குணமாகவும் உடையவன். தன்னைத் தானே பிரகாசிப்பித்து, மற்ற பொருள்களை யும் தன் ஞான ஒளியினால் பிரகாசிக்கச் செய்பவன். (அறியும்படி செய்கிறவன்). மற்றொன்றால் அறியப்படும் வஸ்து அசித்-ஜடம். தன்னைத் தானே அறியும்படிச் செய்வதால், ஜீவன் சித், அஜடம்.

"ஆனந்தத்வம்" : ஜீவன் ஆனந்த ஸ்வரூபன், ஸம்ஸார தசையில் தன் சரீரத்திலும் சரீரத்தைச் சேர்ந்த மனைவி மக்களினாலும் ஆனந்தம், கைவல்யனுக்கு தன் ஆத்மானுபவத்தில் ஆனந்தம். முக்தனுக்கு பகவதனுபவ ப்ரீதிகாரியமான கைங்கர்யத்தில் ஆனந்தம்.

"அமலத்வம்" : ஒருவித தோஷமும் தட்டாதவன் ஜீவன். இது மோக்ஷ தசையில்தான் நன்றாகப் பிரகாசிக்கும்.

"பகவத் ப்ரகாரத்வம்" : வஸ்திரத்திற்குள்ள வெண்மை நிறம் போலவும், புஷ்பத்திற்குள்ள வாசனை போலவும், ரத்னத்திற்குள்ள ஒளி போலவும், எப்போதும் பகவானுக்கு விசேஷணமாய் பகவானை விட்டுப் பிரிக்க முடியாமல், பகவானுடன் கூடியேயிருக்கும் தத்வம் ஜீவன்.

இப்படி முமுக்ஷு ஜீவனை அறிய வேண்டும்.

இனிமேல் மூன்று ச்லோகங்களில் காம்ய கர்மாக்கள் செய்பவர் களை நிந்திக்கிறான்.

**யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபச்சித : |**
**வேதவாதரதா : பார்த்த நாந்யத் அஸ்தீதி வாதிந : || 42 ||**
**காமாத்மாந : ஸ்வர்க்கபரா: ஜந்மகர்மபலப்ரதாம் |**
**க்ரியா விசேஷ பஹுளாம் போகைச்வர்யகதிம் ப்ரதி || 43 ||**
**போகைச்வர்யப்ரஸக்தாநாம் தயாऽபஹ்ருதசேதஸாம் |**
**வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே || 44 ||**

அர்ஜுன! அறிவில்லாதவர்கள் வேதத்தில் கர்ம காண்டத்தில் சொல்லப்படும் காம்ய கர்மாக்களில் மயங்கி, அக்கர்மாக்களைச் செய் வதிலேயே ஊக்கமுள்ளவர்களாயிருப்பர். இவர்கள் உலக இன்பத் தைப்பற்றியும், சுவர்கானுபவத்தைப்பற்றியுமே வெகு அழகாய் பேசுவர். மோக்ஷானுபவமும் இந்த இன்பங்களுக்கு ஈடாகாது என் றும் சொல்வர். இவர்களுடைய பேச்சு காயோ பழமோயில்லாத பாதிரி மரத்தின் பூக்கள் போல மணம் வீசும். ஆனால் அவை களில் பலாம்ஸம் (கனியின் பயன்) ஒன்றுமிராது.

இவர்கள் விரும்பும் ஐசுவர்யமோ சுவர்க்கமோ பெற, பல பிறவி கள் எடுத்து, பல கர்மாக்களைச் செய்ய வேண்டும். அப்படிச்செய்து

அவைகளைப் பெற்றாலும், அவைகள் அல்பமாயும் அஸ்திரமாயு மிருக்கும்.

"க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடி புண்ய பலன் தீர்ந்ததும சுவர்க்கத்திலிருந்து பூமியில் தள்ளப்படுவர்.

இந்த காம்ய கர்மாக்களைச் செய்வது விஷத்தை நாமே சாப்பிடுவதுபோல டாக்டர் விஷத்தை மருந்தில கலந்து கொடுப்பது வேறு; நாமே சாப்பீடுவது வேறு. விஷம் நம் சரீரத்தை அழிக்கும் ; ஆனல் (விஷமோ) இந்த காம்ய கர்மாக்களோ நம் ஆத்ம நாசத்தையே விளைவிக்கும்.

"ஜன்ம கர்ம பலப்ரதாம்"—(ஜந்மச கர்மச) பல ஜந்மாவையும் கர்மாவையும் மேலே மேலே விளைவிக்கும் என்று பிரித்து ஸ்ரீ பாஷ்யகாரர் பொருள் கூறியுள்ளார்.

வேதம் சிறந்த சாஸ்திரம். ஆயிரம் மாதாபிதாக்களுக்கு மேலான அன்பு நம்மிடம் வைத்துள்ளது. அப்படியிருக்க, ஆத்ம நாசத்தை விளைவிக்கக்கூடிய காம்ய கர்மாக்களை அதில் விதித்திருப்பது எப்படிககூடும்? அதைக் கண்ணன் நிந்திப்பது நியாயமாகுமா?

**த்ரைகுண்யவிஷயா: வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந |**
**நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்த்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந் ‖ 45**

**யாவாந் அர்த்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே |**
**தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத : ‖ 46**

அர்ஜுந! வேதம் ஸத்வ, ரஜஸ் தமோ குணமுள்ள மூன்றுவித சேதனருக்கும் பொதுவானது, அவரவர் குணங்களுக்குச் சேர கர்மாவை விதித்திருக்கிறது. உனக்கு இப்போது ஸத்வகுணம் மேலிட்டிருக்கிறது. உனக்குத் தகுதியானதை நீ எடுத்துக்கொள்ள வேண்டும். சுக துக்கங்களைப் பயக்கக்கூடிய ரஜஸ் தமோகுணங்களுக்குத் தக்கவைகளை விட்டு, ஸத்வ குணத்தை வளரச்செய்து, நீ உன் மனத்தை ஆத்மாவினிடமே வைத்திருப்பாயாக.

ஒரு தாமரைக்குளம் நிறைய தண்ணீர் இருந்தால், தாகமுள்ள ஒருவன் தனக்கு வேண்டிய தண்ணீரை எடுத்துக்கொள்வானே ஒழிய, அதில் ஏன் இவ்வளவு தண்ணீர் உள்ளது என்றோ, ஏன் இத்தனை தாமரை மலர்ந்திருக்கிறதென்றோ விசாரம் செய்யமாட்டான்.

ஒரு மளிகைக் கடையில் வெங்காயம் வைத்திருந்தால், அதைச் சாப்பிடாதவன், ஏன் இங்கு வெங்காயம் வைத்திருக்கிறது என்று

கேட்க மாட்டானன்றோ! அதே போல நீ ஏன் வேதம் காம்ய கர்மாக்களை விதிக்கிறது என்று கேட்கக்கூடாது.

ஏனெனில்,

வேதம் எல்லோருக்கும் பொதுவான சாஸ்திரம். வேதமான தாய்க்கு மூன்றுவிதமான பிள்ளைகள். சிலர் ஸத்வ குணம் மேலிட்டவர். சிலர் ரஜோ குணம் மேலிட்டவர், மற்றும் சிலர் தமோ குணம் மேலிட்டவர்கள். குணத்திற்குச் சேர அவரவர் விருப்பமும் வேறுபட்டிருக்கும். "தாய் அன்பு என்பது அலாதி", அந்த அன்புக்குச் சேர, அவரவர்கள் விரும்பியதை கொடுக்கக்கூடிய கர்மாக்களை தாய்போன்ற வேதம் நமக்கு விதித்துள்ளது.

இதையே மற்றொரு விதமாக விசிஷ்டாத்வைதத்தில் நிர்வஹித்திருக்கிறார்கள். நாம் ஒரு விதையை பூமியில் நடுகிறோம்; அது முளைத்து கொடி வளர்கிறது. அந்தக் கொடியை முதலில் சுள்ளிக் கொம்புகளிலும், பின்பு நடுக்கொம்பிலும் ஏற்றி, அதைப் பெரிய பந்தலில் படரவிடுகிறோம். அது நன்றாகப் படர்ந்து, பூத்துக் காய்க்கிறது. அப்படி ஏற்றாவிட்டால், அது கீழேயே வாடி வதங்கி அழியும்.

அதே போல கடவுளில்லை; சாஸ்திரமில்லை என்று சொல்லும் நாஸ்திகரும், கெட்டு நாஸத்தை அடையாமலிருக்க, வேதம் முதலில் காம்ய கர்மாக்களைச் சொல்லுகிறது. செல்வம் பெறவோ, தன் சத்ரு அழியவோ, வேதம் சொல்லியுள்ள அபிசார கர்மாக்களை நாஸ்திகன் செய்து பார்க்கிறான்; பலனையும் பெறுகிறான். வேதத்தில் கொஞ்சம் நம்பிக்கை உண்டாகிறது; தான் பெற்ற செல்வம் அழிகிறது; வேறொரு சத்ரு உண்டாகிறான். ஆதலால் மேலே வேதத்தை ஆராய்ச்சி செய்து மேலானப் பலனைப் பெற விரும்பி, சுவர்கத்தைப் பெற இச்சித்து யஜ்ஞ யாகங்களைச் செய்து அதைப் பெறுகிறான். அதுவும் அஸ்திரமாயும் அல்பமாயுமிருப்பதைக் கண்டு மேலும் மேலும் வேதத்தில் ருசி உண்டாகி, படிப்படியாக சாஸ்வதமான மோக்ஷபலத்தில் இச்சை உண்டாகிறது. அதற்குச்சேர பகவத் பக்தி பிறந்து ஆத்ம நன்மையைப் பெறுகிறான். இப்படி ரஜோ குணம் தமோ குணமுள்ளவர்கள் ஆத்ம நாஸத்தை அடையாமல் நன்மையைப் பெறுவதற்காகவே வேதம் காம்ய கர்மாக்களை விதித்துள்ளது.

அர்ஜுனனுக்கு தற்சமயம் ஸத்வ குணம் தலையெடுத்திருப்பதினால்தான், தன் ஆத்மச்ரேயஸ்ஸைப் பிரார்த்தித்திருக்கிறான். ஆதலால், "அர்ஜுந! நீ தாமஸ ராஜஸம் கலசாமலிருந்து உனக்கிருக்கும் ஸத்வ குணத்தையே அதிகப்படுத்திக் கொள்" என்கிறான்.

**ஸத்வ குணம் வளரச் செய்யும் வழி :—**

அதிகமான தூக்கமும், அதிகமான சுகமும் இருத்தல் கூடாது அதிக வெப்பமோ குளிர்ச்சியோ கூடாது. பணம் சம்பாதித்து தன் சரீரத்தை வளர்ப்பதிலேயே நோக்கம்கூடாது. "ஆத்மாவை வெய் யலில் வைத்து சரீரத்தை நிழலில் வைத்தல் கூடாது." நம் ஆத்ம க்ஷேமத்திலேயே நோக்காக யிருக்க வேண்டும். சரீரம் தரிப்பதற்கு கிடைத்ததைக் கொண்டு திருப்தியாயிருக்க வேண்டும். சந்துஷ்டி (த்ருப்தி) அவசியம் வேண்டும். "அசந்துஷ்டோ த்விஜோ நஷ்ட:" த்ருப்தியில்லாதவனுக்கு ப்ராஹ்மண்யமே போய்விடு கிறது என்கிறது சாஸ்திரம்.

சுத்தமான ஆஹாரத்தையே மிதமாக புசிக்க வேண்டும் (ஆஹார சுத்தௌ:—ஸத்வ சுத்தி:) ஸத்வ குணத்தை அதிகப்படுத் தும் பதார்த்தங்களையே புசிக்க வேண்டும். பகவத் ஆராதனத்தில் (பூஜையில்) உபயோகப்படாத அன்னத்தை சாப்பிடுதல் கூடாது. ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்யாத ஆஹாரத்தை ஒருவன் புசித் தால், பாபத்தையே புசிக்கிறான். புளி, உப்பு, காரம், அதிகம் கூடாது; நெய், சக்கரை போன்றவைகளே ஸத்வ குணத்தை அதி கப்படுத்தும்.

ஸத்வ குணமுடையவன், தான் தனது என்கிற மமகாரம் அற்று இருக்கவேண்டும். "ஸர்வபூத ஆத்மனோ ரத:' எல்லாம் பக வத் விபூதியாகயிருக்க, "மித்ர: அமித்ர கதாகுத:—சத்ரு என்பதும் மித்ரன் என்பதும் எப்படிக்கூடும்? என்கிறான் பரம பாகவோத்த மனை ப்ரஹ்லாதன். அப்படி ஸத்வ குணமுள்ளவனுக்கு ஸ்நே கிதன் என்றும் விரோதி என்றும் இருக்க மாட்டான். ரஜோ தமோ குணமுள்ளவன் தான், நாஸ்திகனாய், தைவமில்லை, பரலோகமு மில்லை, தர்மம் அதர்மம் என்றும், ஒருவனை மித்ரன் என்றும் ஒருவனை சத்ரு என்றும் கருதுவான். அவனுக்காகவே வேதம் உன் சத்ரு ஒழிய இந்த யாகத்தைச் செய் என்று விதிக்கிறது.

"நிஸ்த்ரைகுண்யோ பவ"—நீ முக்குணங்களும் உள்ளவனாக யிருத்தல் கூடாது, ரஜோ தமோ குணம் கலசாமல் சுத்த ஸத்வ குணமுள்ளவனாக இருக்கவேண்டும்.

"நிர்த்வந்த்வ"—சுகம் துக்கம் இரண்டும் ஸம்ஸாரிக்கு உண்டா கலாம். அதில் ஸகஜத்வம் வேண்டும், திதிக்ஷை வேண்டும்.

"நித்ய ஸத்வ"—இப்போதிருக்கும் உன் ஸத்வ குணத்தை மேலும் மேலும் அதிகப்படுத்திக்கொள்:

சாதாரணமாக நமக்குப் பொருள் கிடைப்பது யோகம். கிடைத்த பொருளைக் காத்துப் பரிபாலனம் செய்வது க்ஷேமம். இதுவே சாதாரணமாக யோக க்ஷேமம் எனப்படுவது. ஆனால் இங்கு இதைச் சொல்லவில்லை.

“நிர்யோக க்ஷேமம்—ஆத்ம க்ஷேமம் தவிர மற்றவைகளில் யோகமும் க்ஷேமமும் கூடாது. அஜ்ஞானம், புண்ய பாபம், கர்ம சம்பந்தம், அழுக்குடம்பு இவைகளினால் அபரிசுத்தனான ஜீவன் சுத்தனாகிறது தான் யோகம் இந்த ஆத்ம சுத்தி நிலைத்திருப்பது தான் க்ஷேமம்.

“ஆத்மவான்”—தன் ஆத்மாவை பார்ப்பதிலேயே நோக்காக யிருக்கவேண்டும்.

“ப்ராஹ்மணஸ்ய”—வேதத்தில் பல சொல்லியிருந்தாலும் தனக்கு வேண்டிய உபநிஷத் பாகத்தையே எடுத்துக்கொண்டு முமுக்ஷுவாக—மோக்ஷத்தில் இச்சையுள்ளவனாக யிருக்கவேண்டும்.

**அவதாரிகை**

பகவானுடைய ஸந்நிதியில் அர்ஜுனன் யச்ச்ரேய: ஸ்யாந் நிஸ்சிதம் ப்ரூஹி, தன்மே சிஷ்யஸ்தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம் “எனக்கு ஆத்ம நன்மையைத் தரக்கூடியது எதுவோ, அதை நீ எனக்கு உபதேசிக்கவேண்டும். நான் உனது சிஷ்யன், நீ எனக்கு ஆசார்யன்” என்று முதன் முதலில் பிரார்த்தித்தான்.

கண்ணன் முதலில் ‘சரீர ஆத்ம விவேகத்தை’ சரீரம் அழியக் கூடியது, ஜீவன் நித்யன், என்றும் அறிவேயில்லாதவன், ஆதலால் நீ அநித்யமான சரீரத்தைப் பற்றியும், நித்தியமான ஆத்மாவைப் பற்றியும் சோகிக்க வேண்டியதில்லை, என்றும் உபதேசித்தான்.

அதன் பிறகு, “க்ஷத்திரியனுக்கு போர் ஸ்வதர்மம், அதை நீ அதர்மம் என்று எண்ணுவது பிசகு”, என்று சொல்லி கர்மயோகத்தில் சில புத்தி விசேஷங்களைச் சொன்னான்.

கர்ம என்றும், கர்மயோகம் என்றும் இரண்டு. கர்மாவைச் செய்பவனுக்கு ஆத்ம ஞானம் மட்டும் போதும். கர்மயோகம் செய்பவனுக்கு ஆத்ம யாதாத்ம்ய ஞானம் வேண்டும், கர்மாவை பூர்த்தியாகச் செய்தால்தான் பலன். அது நடுவில்விடப் பட்டால் பாபமே உண்டாகும். கர்மயோகமோவெனில் சிறிது செய்தாலும் ஸம்ஸார பந்தத்தைப் போக்கும், பாபமுமில்லை; கர்மயோகம்

செய்பவனுடைய புத்தி மோக்ஷமொன்றிலேயேயிருக்கும் என்பதைச் சொன்னான்.

அதற்குமேல் காம்ய கர்மாக்களைச் செய்பவனை நிந்தித்தான். வேதமே காம்ய கர்மாவைச் சொல்லியிருக்க அதைக் கண்ணன் நிந்திப்பது எப்படிக் கூடும், என அர்ஜுனன் நினைக்க, வேதம் ஸத்வ, ரஜஸ் தமோ குணமுள்ள எல்லோருக்கும் பொதுவானது; அவரவர் குணத்திற்குத் தக்க கர்மாவை வேதம் சொல்லியுள்ளது. நீ ஸத்வ குணம் மேலிட்டிருப்பவனாகையினால், உனக்கேற்ப காம்ய கர்மாக்களைவிட்டு, கர்மயோகத்தையே செய்வாயாக" என்று சொல்லி முடித்தான்.

இதைக் கேட்ட அர்ஜுனன், நாம் காம்ய கர்மாக்களை எல்லாம் விட்டு, மோக்ஷ ஸாதனமான கர்மயோகத்தையே செய்வோம் என்று நினைக்க, "அர்ஜுன! நீ நித்ய நைமித்ய காம்ய கர்மாக்களையும் செய்தேயாக வேண்டும் ; ஆனால் அவைகளின் பலன்களில் உனக்கு சம்பந்தம் கூடாது" என்கிறான் இந்த ச்லோகத்தில்.

**கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந ।**
**மா கர்மபலஹேதுர்பூ: மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி ॥ 47 ॥**

அர்ஜுன! மோக்ஷார்த்தியான உனக்கு கர்மாவைச் செய்வதில் மாத்திரமே அதிகாரம், தகுதியுண்டு. அதன் பலன்களில் ஒருக்காலும் சம்பந்தம் வேண்டாம். கர்மம் செய்வதற்கும், பலத்திற்கும் நீ காரணமாகாதே (காரணமில்லை). கர்மாவை செய்யாமலிருப்பதிலும் உனக்கு சம்பந்தம் வேண்டாம்.

ஒருவனுக்கு ஞானம் உண்டாகும் வரையில்தான் கர்மாநுஷ்டானம் வேண்டும். ஞானம் பிறந்த பின் கர்மா வேண்டியதில்லை என்பது ஸ்ரீ சங்கராசாரியரின் கொள்கை. ஆனால் எவனும் கடைசி மூச்சு உள்ள வரையில் கர்மாநுஷ்டானம் செய்தேயாக வேண்டும்; விடவே கூடாது, என்பது ஸ்ரீராமாநுஜரின் சித்தாந்தம். இதுவே கண்ணனும் இங்கு சொல்லியிருப்பதாகும்.

"கர்மண்யேவ அதிகாரஸ்தே" - கர்மா என்றால் நித்ய, நைமித்ய காம்ய கர்மாக்களையே இங்கு சொல்கிறது. சந்தியாவந்தனம், பகவதாராதனம் முதலிய நித்ய கர்மாக்களென்ன, அமாவாசை, க்ரகண தர்ப்பணம் போன்ற நைமித்ய கர்மாக்களென்ன, இவற்றை எவனும் விடக்கூடாது. இந்த உலகிலோ, பரலோகத்திலோ பலனை உத்தேசித்துச் செய்யும் சித்ரயாகம், வருண ஜபம், புத்ர காமேஷ்டி

யாகம் போன்ற காம்ய கர்மாக்களை அவனவன் விருப்பப்படி விட்டா லும் விடலாம்; செய்தாலும் செய்யலாம்.

"ஏவ" என்பதினால் இந்த மூன்று கர்மாக்களையும் செய்வதில் மாத்திரம் உனக்கு அதிகாரம், தகுதி. பலன்களில் சம்பந்தமில்லை என்பதைக் காட்டுகிறது.

"மா பலேஷு கதாசந"—ஒரு பொழுதும் அவைகளுள் பலன் இல்லை என்று சொல்லவில்லை. நீ விரும்பினாலும் விரும்பாவிடினும் அவைகளுக்கு இயற்கையான பலன்கள் உண்டு. அவைகளை எதிர் பார்க்க யோக்யதையில்லை.

சந்தியாவந்தனம் போன்ற நித்ய கர்மாககளுக்குப் பலன் கிடை யாது; ஆனால் விட்டால் தோஷம் ஏற்படும் என்பர். ஆனால் ஸ்ரீ பாஷ்யகாரர் இவைகளுக்கும் சில பலனுண்டு, இவைகளைச் செய்தால்தான் ஒருவன் வைதிகனாகிறான். வைதிக காரியங்களுக்கு தகுதியாகிறான், சுத்தனாகிறான், என்கிறார்

"மா கர்ம பல ஹேதுர் பூ:"—இதை இரண்டாகப் பிரித்து, கர்ம ஹேது: மா பூ: என்றும் பல ஹேது: மா பூ: என்றும் நீ கர்மம் செய் வதற்கும் காரணமாகாதே: அதின் பலனுக்கும் காரணமாகாதே, என்று எம்பெருமானார் பொருள் கூறியிருக்கிறார்.

ஒருவன் ஒரு செயலைச் செய்கிறான். பலன் உண்டாகிறது அதையும் அனுபவிக்கிறான். அப்படியிருக்க, அவன் அந்தச் செய லுக்கும் காரணமில்லை; பலனுக்கும் காரணமில்லை என்பது எப்படிப் பொருந்தும்?

இதைக் கண்ணன் மூன்றும் அத்தியாயத்தில் விரிவாகச் சொல்லியிருக்கிறான். ஒரு செயல் இந்த்ரியங்களால் செய்யப்படு கின்றன. மனது, புத்தி அதற்கு ஸகாயம் செய்கின்றன. இவைக ளுக்கெல்லாம் மூல காரணம் நமக்குள்ள ஸத்வ, ரஜஸ் தமோ குணங் களேயாகும். எக்குணம் தலையெடுத்திருக்கிறதோ அக்குணம் தூண்ட, மனது புத்தி இவைகள் இந்த்ரியங்களை தூண்ட, செயல் நடைபெறுகிறதே ஒழிய, ஜீவன் தானாகச் செய்கிறான் என்பதில்லை

சரீரத்தை விலக்கிப் பார்த்தால் எல்லா ஜீவாத்மாக்களும், ஒரே மாதிரியுள்ளவை, ஆதலால், ஜீவனே ஒரு செயலைச் செய்வதாகயிருந் தால், எல்லோருக்கும் ஒரே மாதிரிச் செயலைச் செய்யவேண்டு மல்லவா? மேலும் ஒருவனே ஒரு சமயம் செய்வதுபோல மற்றோர் சமயம் செய்வதில்லை என்பதையும் பார்க்கிறோம். ஆகலால் ஜீவன் காரணமில்லை; குணங்களே காரணம் என்பது தெளிவாகிறது.

ஓர் இடத்தில் கிணற்றின் தண்ணீர் வெளுப்பாகவும் ருசியுமாக இருக்கிறது. மற்றோரிடத்தில் தண்ணீர் சிவப்பாகவும் துவர்ப்பாகவும் இருக்கக் காண்கிறோம். இது ஏன்? அந்தந்த இடத்திலுள்ள மண் சம்பந்தத்திற்குச் சேர அவ்வாறு உள்ளது. அதே போல ப்ரக்ருதியினாலான சரீர சம்பந்தத்தினால் உண்டான ரஜோ, தமோ, ஸத்வ குணத்திற்குச் சேர ஒவ்வோர் செயலும் நடைபெறுகின்றனவே ஒழிய ஜீவன் செய்தான் என்பதில்லை.

ஒரு தேசத்தின் மந்திரிகள் சில செயல்களைச் செய்ய, அதை அரசனே செய்தான் என்பதுபோல், குணங்களடியாக மனம் புத்தி தூண்ட இந்த்ரியங்கள் செய்யும் செயலையே ஜீவன் செய்தான் என்கிறோம். ஒருவனுடைய பூர்வ ஜன்ம கர்மாவுக்குச் சேர, ஸத்வ, ரஜஸ் தமோ குணங்களில எது மேலோங்கியிருக்கிறதோ அதின்படி பகவானுடைய ஸங்கல்பத்தினாலேயே எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன.

பகவான் ஒரு சூத்ரதாரி. எப்படி ஒரு பொம்மலாட்டக்காரன் நுண்ணிய நூலினால் தன் கைகால்களை ஒரு பொம்மையுடன் கட்டி, தன் அவயங்களை அசைக்க அந்த பொம்மை ஆடுகிறதோ, அதே போல பகவான் ஒரு சூத்ரதாரியாகயிருந்து எல்லாச் செயல்களையும் ஜீவனின் கர்மானுகுணமாகச் செய்விக்கிறான். ஆதலால் ஜீவனே செயலுக்குக் காரணமில்லை என்பது தெளிவாகிறது.

"மா பல ஹேதுர் பூ:" பல ஹேது: மா பூ பலத்திலும் உனக்கு சம்பந்தம் வேண்டாம், மாபலேஷு கதாசந என்பதில் நித்ய நைமித்ய கர்மபலத்தைச் சொல்லிற்று. இங்கே, லௌகிக கர்மாவைச் சொல்கிறது. நீ செய்யும் லௌகிக கர்மாவிலும் அதின் பலத்திலும் பற்றுதல் வேண்டாம். உன் கடமையென்று செய். குணங்களடியாக பகவானால் செய்விக்கப்படுகின்றன என்று நினைத்துச் செய்; பலன் கிடைத்தால் அதில் பற்றுதலும், கிடைக்காவிடில் வருத்தமுமின்றி இருக்க வேண்டும். இப்படியிருந்து நாம் லௌகிக கர்மாக்களைச் செய்து வந்தால், ஸம்ஸார பந்தம் போய் மோக்ஷம் சித்திக்கும்

"மா தே ஸங்கோஸ்த்வ அகர்மணி"–

தே அகர்மணி ஸங்க: மா: நீ கர்மாவை செய்யாமலிருப்பதிலும் உனக்குப் பற்றுதல் வேண்டாம். அர்ஜுனனுக்குப் போர் செய்வதில் விருப்பமில்லை; அதிலும் உனக்குப் பற்றுதல் வேண்டாம் என்கிறான்,

சிலர் இதற்கு "நீ கர்மாவைச் செய்யாதே" என்று கண்ணன் கூறியிருப்பதாகப் பொருள் சொல்லியிருக்கிறார்கள். அது சரியான பொருளாகாது.

**யோகஸ்த்த : குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தநஞ்ஜய |**
**ஸித்யஸித்யோ : ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே || 48 ||**

பற்றுதலைவிட்டு வெற்றி தோல்விகளில் சம புத்தியுடனிருந்து, யோகத்தில் நிலையாக நீ கர்மயோகத்தைச் செய்வாயாக. (யோகம் என்றால் சம புத்தியுடன் விகாரமற்று இருத்தல்)

"கர்மணி குரு"—நித்ய நைமித்ய கர்மாக்களைச்செய். "யோகஸ்த குரு"—சமபுத்தியுடனிருந்து செய். ஸித்ய ஸித்தோ: பூத்வா குரு—வெற்றி தோல்விகளில் விகாரமற்று இருந்து செய்.

கர்த்ருத்வ த்யாகம், பல த்யாகம், மமதா த்யாகத்துடனிருந்து கர்மயோகம் செய்யவேண்டும்.

"கர்த்ருத்வ த்யாகம்"—தன்னைச் செய்பவனாக நினைப்பதை விடுவது; ஸத்வ ரஜஸ்தமோ குணங்களுக்குத் தக்கபடி பகவானுடைய ஸங்கல்பத்தினால் எல்லாச் செயல்களும் நடப்பதாக நினைக்க வேண்டும்.

"பல த்யாகம்" செயலின் பலனில் இச்சைக் கூடாது. பலன் கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் சந்தோஷமோ வருத்தமோ யின்றி சமநிலையில் இருக்கவேண்டும்.

"மமதா தியாகம்"—செயல் என்னுடையது என்பதை விடவேண்டும். எந்தச் செயலையும் அதின் பலனையும் தன்னைச் சேர்ந்ததாக நினைத்தல் கூடாது.

ஜனகர் பற்றுதல் அற்று ராஜ்ய பரிபாலனம் செய்தது போலவும் "அஹம்ச ராஜ்யஞ்ச ராமஸ்ய—நானும் ராமனுக்கு உரியவர் ராஜ்யமும் பகவானுடையது என்று அஹங்கார மமகாரத்தை விட்டிருந்த பரதனைப்போல இருக்க வேண்டும் கர்மயோகி.

**தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தநஞ்ஜய |**
**புத்தௌ சரணம் அந்விச்ச க்ருபணா: பலஹேதவ : || 49 ||**

தனஞ்சய ! பயனை விரும்பாமல் சம புத்தியுடனிருந்து செய்யப்படும் கர்மயோகம் மிகச் சிறந்தது. பலனை இச்சித்துச் செய்யும் கர்மாவுக்கும், பலனை விரும்பாமல் செய்யும் கர்ம யோகத்திற்கும் ஒரு மடுவுக்கும் மலைக்குமுள்ள வாசியுண்டு. கர்மயோகம் நம்மை மேன்மேலும் உயர்த்தி உன்னத நிலையான மோக்ஷத்தில் கொண்டுபோய் சேர்ப்

பிக்கும். காமாவோவெனில், நம்மை ஸம்ஸாரமான படுகுழியிலே அழுந்தச் செய்யும். ஆதலால், நீ கர்ம யோகத்தையே செய்வாயாக.

"நாம் செய்யும் எந்தச்செயலுக்கும் நம்மை மோக்ஷத்தில் கொண்டு சேர்ப்பதே ஸ்வாபாவிகமான தன்மை. ஆனால் நாம் வேறு பலனை இச்சித்து அதைச் செய்வதினால், அதன் ஸ்வபாவமான தன்மை தடைப்பட்டு, நாம் இச்சிக்கும் பலனையே கொடுக்கிறது."

அங்யத் ஆலிங்கதே காந்தா, அங்யத் ஆலிங்கதே ஸுதா"— ஒருவன் தான் காமத்துக்காக மனைவியைத் தழுவிக்கொள்கிறான்; தான் பெற்று வளர்த்த தன் கன்னிகையையும் தழுவிக்கொள்கிறான்; தழுவுதல் என்கிற செயல் ஒன்றாகயிருந்தாலும் ஒன்று "துஷ்டம்" மற்றொன்று "உத்க்ருஷ்டம்". ஏனெனில் நினைவு வேறுபட்டிருக்கும், பலனை விரும்பி கர்மாவைச் செய்வது பத்நியை தழுவுதல் போல "துஷ்டம்". பலனை விரும்பாமல் செய்யும் கர்மயோகம் தன் புத்ரியைத் தழுவுதல்போல "உத் க்ருஷ்டம்"

**புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுருக்ருதே |**
**தஸ்மாத் யோகாய யுஜ்யஸ்வ யோக : கர்மஸு கௌசலம் || 50 ||**
**கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம் த்யக்த்வா மநீஷிண |**
**ஜந்மபந்த விநிர்முக்தா : பதம் கச்சந்த்யநாமயம் || 51 ||**

இந்த புத்தியோகத்துடனிருந்து கர்மயோகம் செய்கிறவன் இப் பிறவியிலேயே புண்ய பாபங்களிரண்டிலிருந்தும் விடுபடுகிறான், ஆதலால் நீ இந்த புத்தியுடனிருந்து கர்மயோகத்தையே செய் வாயாக.

(புண்ய பாபம் இரண்டும் மோக்ஷத்திற்குத் தடையாகும். புண்யம் பொன் விலங்கு; பாபம் இரும்பு விலங்கு)

"இப்படி புண்ய பாபம் இரண்டும் விலகப்பெற்றவன். மறு பிறவியற்று, சம்சார பந்தத்திலிருந்து விடுபட்டு பரமபதம் அடை கிறான். "அநாமயம் பதம் கச்சந்தி"—பரமபதம் பெறுகிறான்.

**யதாதே மோஹகலிலம் புத்திர் வ்யதிதரிஷ்யதி |**
**ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச || 52 ||**

அர்ஜுன! நான் சொன்னதைக் கேட்டு, எப்போது மோஹத் தினால் உனக்கு இருக்கும் கலக்கத்தை உன் புத்தி விடுகிறதோ, அப் போதுதான் நான் சொன்னதை அறிந்து, தெளிவு பெற்று, நீ விஷய வைராக்யத்தைப் பெறுவாய்.

ஒருவன் மோக்ஷம் பெற உலக விஷய வைராக்யம் (உலகப் பற்றை விடுதல்) அவஸ்யம் வேண்டும், பகவானைப் பற்ற வேண்டும். இதை ஆழ்வார், "விடுமின் முற்றவும், வீடு செய்து, உம்முயிர் வீடுடையானிடம் விடு செய்மினே" உலக விஷயப் பற்றை முற்றிலும் விட்டு, ஆத்மாவை தனக்கு ருப்பிடமாய் உடைய பகவானிடம், உங்கள் ஆத்மாவை ஸமர்ப்பியுங்கள்" என்று அருளிச் செய்திருக்கிறார்.

ஆனால், நமக்கு எது ஆபாஸமானதோ, எது மிகவும் தாழ்ந்ததோ எதில் ஆசை கூடாதோ, அந்த உலக விஷயங்களில் பூர்ணமாகப் பற்றுதல் இருக்கிறது—பற்ற வேண்டியது எதுவோ, மேலான தத்வம் எதுவோ, எது நம் ஆத்ம ச்ரேயஸ்ஸைக் கொடுக்கக் கூடியதோ, அந்த பகவத் விஷயத்தில், நமக்கு வைராக்யம் (பற்றின்மை) அதிகமாக இருக்கிறது.

இப்படி நம் வாழ்நாளெல்லாம் வீணாயிற்றே என்கிற அநுதாபமும் நம்மிடமில்லை. (வருத்தமுமில்லை). சுகமாக உண்டு உடுத்து நம் வாழ்நாளை நாம் கழிக்கிறோம். அநுதாபம் நமக்கு அவஸ்யம் இருக்கவேண்டும். இதுவே (நிர்வேதம்) எனப்படும். நிர்வேதம் உண்டானாலே நமக்கு ஆத்ம க்ஷேமம் சித்திக்கும். பொதுவாக சந்தோஷமாக, போக, போக்யங்களை அனுபவித்து சுகித்திருக்கும் செல்வந்தர் பலருக்கு பகவத் விஷயம் சுலபமாக நெஞ்சில் படாது; ஆதலால், பகவான் நம் வாழ்க்கையின் நடுவில துன்பத்தைக் கலசி வைத்திருக்கிறான். இதையே குந்தி தேவி, "கிருஷ்ணா! எங்களுக்கு ஆபத்து அடிக்கடி வரவேண்டும்; அப்போதுதான் நாங்கள் உன்னை நினைக்க முடியும்" என்று ப்ரார்த்தித்திருக்கிறாள். பகவானை ப்ரார்த்தித்தே நாம் விஷய வைராக்யத்தையும் அவனிடம் அன்பையும் பெற முடியும்.

இந்நிலை ஒருவனுக்கு எப்போது வரும்?

**ச்ருதிவிப்ரதிபந்நா தே யதா ஸ்த்தாஸ்யதி நிச்சலா ।**
**ஸமாதாவசலா புத்திஸ் ததா யோகம் அவாப்ஸ்யஸி ॥ 53 ॥**

அர்ஜுந! ஆத்ம யாதாத்ம்ய ஞானத்துடன், என்னிடமிருந்து கேட்ட கர்மயோகத்தை நீ செய்து வந்தால், ஆத்ம சிந்தனம் என்கிற ஜீவாத்ம ஞான யோகம் கைகூடும். இந்த ஞான யோகத்தைச் செய்தால், நீ ஆத்ம தரிசனம் பெறுவாய்.

"ச்ருதி விப்ரதிபந்நா தே புத்தி:"

ஸர்வஜ்ஞனும், ஸர்வசக்தனும், பரம காருணிகனுமுள்ள என்னிடமிருந்து கேட்ட உன் புத்தி; அர்ஜுனா! நான் எல்லாம் அறிந்

தவன், எதையும் செய்து தலைக்கட்டக் கூடியவன், ஒருவித தோஷமுமில்லாதவன், உன்னிடம் மிகவும் கருணையுள்ளவன், இப்படிப்பட்ட என்னிடமிருந்து கேட்டதினால், உனக்கு ஆத்மாவைப் பற்றிய விசேஷ ஞானம் உண்டாயிருக்கிறது.

"அசலாம்"—சரீரம் ஆத்மா இவை பற்றிய சலனமில்லாத ஒரே புத்தி; "நிஸ்சலாம்"—மற்றோர் விஷயம் கலசாமல் ஏகரூபமான ஆத்ம ஞானம்.

அர்ஜுன! என்னிடமிருந்து கேட்டதினால் உனக்கு உண்டாயிருக்கும் ஆத்மாவைப் பற்றிய அறிவு. எப்போது சமாதியில் விஷய சம்பந்த மற்று இருக்கிறதோ, அப்போது நீ ஆத்ம யோகத்தை அடைவாய். இப்படி ஆத்ம யோகம் கைபுகுந்தவனே "ஸ்தித ப்ரஜ்ஞன்" எனப்படுபவன். (இங்கு சொல்வது ஜீவாத்ம ஞான யோகம்; பகவத் ஞான யோகமன்று).

**அவதாரிகை**

"நத்வேவாஹம் ஜாது நாஸம்" முதல், "தஸ்மாத் ஸர்வாணி பூதாநி" என்கிற ச்லோகம் முடிய, ஆத்மாவின் நித்யதவத்தை பகவான் உத்தேசித்தான். அதன் பிறகு போர் அதர்மம் என்கிற அர்ஜுனன் கலக்கத்தைத் தெளிய வைத்தான். பிறகு கர்ம யோகத்தைப்பற்றிச் சொல்லி வந்து மேல் ச்லோகத்தில் ஞான யோகத்தைச் சொல்ல ஆரம்பித்திருக்கிறான்.

ஆத்ம யாதாத்ம்ய ஞானத்துடன் பலனில் இச்சையில்லாமல் கர்ம யோகம் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால், ராகத் வேஷம் போய் சித்த சுத்தி உண்டாகும்; பின்பு ஆத்ம சிந்தனமான ஞான யோகம் கைபுகும். சலனமற்ற புத்தி உண்டாகும்; அதற்குபலன் ஆத்ம ஸாக்ஷாத்காரம். (ஆத்ம தரிசனம்) என்று சொல்லி ஞான யோகத்தில் கண்ணன் தன் உபதேசத்தைக் கொண்டு வந்துவிட்டான்.

இதற்கு மேல் அர்ஜுனன் கேள்வி. "அர்ஜுன உவாச"—அர்ஜுனன் கேட்டது

**ஸ்த்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்த்தஸ்ய கேசவ |**
**ஸ்த்திததீ: ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் || 54 ||**

க்ருஷ்ணா! ஸ்தித ப்ரஜ்ஞனுடைய ஸ்வரூபம் எப்படியிருக்கும்? அவன் என்ன பேசுவான்? அவன் எப்படி இருப்பான்? மற்றும் அவன் நடை உடை பாவனையெல்லாம் எவ்வாறு இருக்கும்? அவன் வாக்கு, மனது, மற்ற இந்த்ரியங்கள் என்ன செய்யும்? இதையெல்லாம் எனக்கு விவரமாகச் சொல்ல வேண்டும்.

ஞானயோகம் செய்கிறவன் ஸ்தித பரஜ்ஞன் எனப்படுவன். ஆத்ம ஸாக்ஷாத்கார நிலை பெற்றவன். தேவர்களுக்கும் இந்த நிலை சுலபமாக வராது.

விசிஷ்டாத்வைத மதத்தில் ஜீவாத்ம யோகம் பரமாத்ம யோகம் என இரண்டு உண்டு. இங்கே சொல்வது ஜீவாத்ம ஞானயோகம். ஆறும் அத்யாயம் கடைசியில் கண்ணனே, "யோகினாமபி ஸர்வே ஷாம்" என்கிற ச்லோகத்தில், ஜீவாத்ம யோகம் வேறு; பரமாத்ம யோகம் வேறு என்று தெளிவாகச் சொல்லியிருக்கிறான். அத்வைத மதத்தில் ஜீவாத்ம யோகம் ஒன்றுதான் உண்டு. பரமாத்ம யோக மான பக்தியோகம் அவர்களால் சொல்ல முடியாது. ஏனெனில், பக்தி செய்கிறவன் ஒருவன், செய்யப்படுபவன் மற்றொருவன் என இரண்டு தத்வம் அவர்கள் கொள்கைக்குச் சேராது. ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள்; மற்ற எதுவுமில்லை என்பதே அத்வைத மதம்

பக்தியோகத்தை பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி என மூன்று தசையாக பிரித்துச் சொல்வதுபோல, ஜீவாத்ம யோகத்தையும் நான்கு தசையாகப் பிரித்துச் சொல்கிறான். "ஸ்ரீ பகவான் உவாச" கண்ணன் அருளியது :

**ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந் |**
**ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்த்திதப்ரஜ்ஞஸ் ததோச்யதே ||55||**

**து:க்கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: |**
**வீதராகபயக்ரோத: ஸ்த்திததீர் முநிருச்யதே ||56||**

**ய: ஸர்வத்ராநபிஸ்நேஹ: தத்தத் ப்ராப்ய சுபாசுபம் |**
**நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா ||57||**

**யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்காநீவ ஸர்வச: |**
**இந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞாப்ரதிஷ்ட்டிதா ||58||**

"ஆத்ம யோகத்தின் கடைசி நிலையில்" இருப்பவன், கர்ம பலன் களின் ஆசையை வாசனையோடு அறவிட்டு, சரீரம், சரீரத்தைப் பற்றிய விஷயங்கள் ஒன்றையும் அறியாதவனாய், மனத்தை தன் ஆத்மாவினிடமே எப்போதும் வைத்து, ஆத்மாவினிடத்திலேயே எல்லா ஆனந்தத்தையும் அநுபவித்திருப்பான்.

"மூன்றும் தசையிலிருப்பவன், ராகத்வேஷம் அற்று, ஆத்மா வினிடமே மனத்தை வைத்திருப்பான்; ஆனால் விஷய வாசனை சிறிது இருந்துகொண்டேயிருக்கும். சுக துக்கம், அவைகளின் காரணங்கள் அருகிலிருந்தாலும் மனது சிறிதும் சலியாமலிருப்பான்.

"ஸ்ப்ருஹா"—ஆசை; ராகம்-ஸ்திரீ புமான்களுக்குள்ள காமம்; 'பயம்' ப்ரியம் விலகுவதைப் பற்றியும் அப்ரியம் வருவதைப் பற்றியும் வருத்தம்: "கோபம்" பிறர்க்கு துக்கம் உண்டாக நம் மனதில் தோன்றும் விகாரம், இவைகள் அற்று இருப்பான்.

"இரண்டாம் தசை"யில் உள்ளவன், ப்ரியம் அப்ரியம், சுகம் துக்கம் இவைகளில் பற்று அற்று இருப்பான். "ஸர்வத்ர அனபிஸ் நேஹ": தன் பார்யா, புத்திரன் வீடு மனை எல்லாவற்றிலும் உதாசீனனாக (பொருட் படுத்தாதவனாக)யிருப்பான். இவனுக்கு ஆத்ம ஞானம் உறுதியாக உண்டு. பாதி ஞானயோகம் கை புகுந்தவன் இவன்.

"முதல் தசையிலிருப்பவன்-எப்படி ஓர் ஆமை அவயவங்களை தன் உடலில் அடக்கிக் கொள்ளுமோ, அதுபோல இந்த்ரியங்களை விஷயங்களில் செல்லவிடாமல் அடக்கிக்கொள்வான். இந்த்ரிய ஜெயம் (புலனடக்கம்) பெற்றவன்தான் ஆத்ம சிந்தனம் செய்ய முடியும்.

இங்கு "யதா-எப்போது என்பதற்கு ஸ்ரீ பாஷ்யகாரர் சில பரிஷ்காரம் (சீரான) விளக்கம் செய்திருக்கிறார். பால்யத்திலோ, முதுமையிலோ, வியாதியிலோ சக்தியற்ற ஒருவன் "நான் இந்த்ரிய ஜயம் பெற்று விட்டேன்' என்பது இந்த்ரிய ஜயமாகாது. விஷயங்களைப் பூர்ணமாக அநுபவித்த பிறகு, அதில் உண்டாகும் வெறுப்பும் இந்த்ரிய ஜயமாகாது. நல்ல யௌவனத்தில் விஷயம் அருகிலிருக்கும்போது இந்த்ரியங்கள் அவ்விஷயத்தில் செல்லாமலிருப்பதே இந்த்ரிய ஜயமாகும்.

இனி இந்த ஞான நிஷ்டை பெறுதல் அரிது என்பதையும், அதைப் பெறும் வழியையும் கூறுகிறான்.

**விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।**
**ரஸவர்ஜம் ரஸோ'ப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ||59||**
**யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சித: ।**
**இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: ||60||**

இந்த்ரியங்களுக்கு ஆஹாரம் விஷயங்கள். இந்த்ரியங்களை அடக்கினவனுக்கு அவ்விஷயங்கள் தோன்றாது. ஆனால் மனத்தில் அவைகளில் ஆசை மாத்திரம் போகாது; ஆத்ம தரிசனம் பெற்ற பிறகே அந்த வாசனை ஒழியும்.

விஷய ஆசை போகாமல் ஒருவன் ஆத்ம சிந்தனத்தில் இழிந்தால், வலிமையுள்ள இந்த்ரியங்கள் அவன் மனத்தை விஷயங்களி

லேயே இழுத்துச் செல்லும். எல்லா தத்வங்களைக் காட்டிலும், ஜீவாத்மா வெகு போக்யமான தத்வம். ஈச்வரனும் விரும்பும்படியானது. ஆதலால், அதைப் பார்த்து, அதன் போக்யதை நெஞ்சில் பட்டால், மற்ற விஷய ஆசை தானாகவே விலகும். இந்த்ரிய ஜெயம் பெறலாம். ஆனால் இந்த்ரிய ஜெயம் பெற்றால்தான் ஆத்ம தரிசனம் ஏற்படும். "இப்படி ஆத்ம தரிசனம் பெற்றால்தான் இந்த்ரிய ஜெயம் பெறமுடியும்; இந்த்ரிய ஜெயம் பெற்றால்தான் ஆத்ம தரிசனம் ஏற்படும். ஆதலால் ஞான யோகம் செய்வது அரிது.

இந்த்ரிய ஜெயம் பெறும்வழி:

**தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: |**
**வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ||61||**

கீழ் சொன்னபடி ஒன்றையொன்று பற்றியிருப்பதினால், விஷயங்களிலே பற்றுள்ள இந்த்ரியங்களை, மற்ற ஹேயமான விஷயங்களிலிருந்து திருப்பி, மிகவும் இன்பகரமாய், எல்லா பாபங்களையும் போக்கும் என் திருமேனியில் மனத்தை நிறுத்தி த்ருடமாக என்னையே நினைத்திரு.

விஷயப் பற்றைப் போல நம் ஆத்மாவைக் கெடுப்பது வேறொன்றுமில்லை; இந்த்ரியங்கள் மிகவும் வலிமையுள்ளவை. அவைகளை அடக்குவது கஷ்டம். இந்த்ரிய ஜெயம் ஒரு பெரிய சம்பத்து தன் முயற்சியினால் எவனும் இச்சம்பத்தைப் பெற முடியாது. பகவானுடைய அருளினாலேயேதான் இதைப் பெறமுடியும். இந்த்ரியங்களை ஜெயிக்க விடாமல் செய்யும் சில பாபங்கள் நமக்குள்ளன. கீதாசாரியனான ஸ்ரீ பார்த்தசாரதியின் திவ்ய மங்கள விக்ரஹத்தில், நம் மனத்தை உறுதியாக வைத்து, அவனை சிந்தித்தால், அந்தப் பாபங்கள் போய் இந்த்ரிய ஜெயம் பெறலாம்.

**த்யாயதோ விஷயாந் பும்ஸ: ஸங்கஸ் தேஷூபஜாயதே |**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே ||62||**

**க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம: |**
**ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாச: புத்திநாசாத் ப்ரணச்யதி ||63||**

இந்த்ரியங்களை நம் ஆத்ம நாசத்திற்கு முதல் சத்ரு. பகவானுடைய திருமேனியில் மனத்தை வைக்காமல் இந்த்ரிய ஜெயம் பெற முயல்வது நம் ஆத்ம விநாசத்திலேயே முடியும். இந்த்ரியங்களை விஷயங்களில் போகவிடாமல் அடக்கி, கண்களை மூடிக்கொண்டு

ஆத்ம சிந்தனம் செய்ய உட்கார்ந்தாலும் நம் பாப வாசனைக்குச் சேர விஷயங்களே நினைவுக்கு வரும். அவைகளைப் பெற ஆசை உண்டாகும். அந்த ஆசை முற்றி காமமாகும். விஷயம் கிடைக்காவிடில் கோபம் வரும். கோபமுண்டானால் நல்லது கெட்டது என்கிற அறிவு போகும். தான் ஆத்ம சிந்தனம் செய்ய ஆரம்பித்தோம் என்பதை மறந்து, ஆத்ம விநாஸத்தையே அடைவான்.

**ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாந் இந்த்ரியைச்சரந்|**
**ஆத்மவச்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ||64||**

**ப்ரஸாதே ஸர்வதுக்கானாம் ஹாநிரஸ்யோபஜாயதே |**
**ப்ரஸந்நசேதஸோ ஹ்யாசு புத்தி : பர்யவதிஷ்ட்டதே ||65||**

**நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவநா |**
**ந சாபாவயத: சாந்தி : அசாந்தஸ்ய குதஸ் ஸுகம் ||66||**

**இந்த்ரியாணாம் ஹி சரதாம் யந்மநோSநுவிதீயதே |**
**தத் அஸ்ய ஹரதி பிரஜ்ஞாம் வாயுர் நாவம் இவாம்பஸி ||67||**

ஆனால் சுபகரமான என்னிடம் மனத்தை வைத்திருப்பவன், பாபங்கள் அற்று, ராகத்வேஷம் நீங்கி இந்த்ரிய ஜெயம் பெறுவான். அவன் விஷயங்களில் செல்லாத தெளிந்த மனதுடையவனாய் ஆனந்தித்திருப்பான்.

என்னிடம் மனத்தை வைத்திருப்பவனுக்கு தோஷம் எல்லாம போய் தெளிந்த மனத்துடன், ஞான யோகத்தில் நிலைத்திருப்பான். அவனுக்கு ப்ரக்ருதியினால் உண்டாகும் துயரமெல்லாம் தன்னடையே நசிக்கும்.

அப்படி மனத்தை என்னிடம் வைக்காமல் இந்த்ரிய ஜெயம் பெறமுடியாது. இந்த்ரிய ஜயம் பெறாமல் ஆத்ம ஞானமில்லை. ஆத்ம ஞானமில்லாமல், ஆத்ம சிந்தனமில்லை. ஆத்ம சிந்தனமில்லாமல் விஷய ஆசை போகாது. விஷயப்பற்று அறாமல் மனச்சாந்தியில்லை. ''மனச் சாந்தியில்லாதவனுக்கு சுகம் எப்படி கிடைக்கும்?''

விஷயங்களில் போகும் இந்த்ரியங்கள் வழியே நம் மனத்தை செலுத்தினால், அம்மனது ஆத்ம சிந்தனத்திலிருக்கும் நம் புத்தியை, ஆற்றில செல்லும் படகை எதிர்க்காற்று பலாத்காரமாக அடித்துச் செலவதுபோல, சப்தாதி விஷயங்களில் கொண்டு போய்ச் சேர்த்து, சம்சாரமான பெருங்கடலிலே நம்மை முழுகச் செய்யும்.

**தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வச : |**
**இந்த்ரியாணி இந்த்ரியார்த்தேப்ய : தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா ||68||**

ஆகையினால் கீழ் சொன்னபடி, நம் பாபங்களைப் போக்கக்கூடிய தாகவும் மங்களாகரமான என் திருமேனியில் மனத்தை வைத்து, இந்த்ரியங்களை விஷயங்களில் போகவிடாமல் எவன் அடக்குகி ருனோ, அவனுக்குத்தான் ஆத்ம சிந்தனம் நிலைத்திருக்கும்.

இந்த்ரியங்களே நம் நித்ய சத்ரு. (No: 1 ENEMY.) இச்சத்ரு வின் பலம் அலாதி. எதை அடக்கினாலும் மனத்தை அடக்குவது சுகஷ்டம். அர்ஜுன! உன் பாகுபலம் இவைகளை ஜெயிப்பதில் விலைச் செல்லாது. என்னைப்பற்றினால்தான் அதை உன்னால் ஜெயிக்கமுடியும் என்று தோற்ற "மஹாபாஹோ" என்று சம்போ தனம் செய்திருக்கிருன்.

யா நிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ।
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே: ॥69॥

ஆபூர்யமாணம் அசலப்ரதிஷ்ட்டம்
ஸமுத்ரம் ஆப: ப்ரவிசந்தி யத்வத்।
தத்வத் காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்திம் ஆப்நோதி ந காமகாமீ ॥70॥

விஹாய காமாந் யஸ் ஸர்வாந் புமாம்ச்சரதி நிஸ்ஸ்ப்ருஹ:।
நிர்மமோ நிரஹங்கார: ஸ சாந்திம் அதிகச்சதி ॥71॥

ஏஷா ப்ராஹ்மீ ஸ்த்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி।
ஸ்த்திஸ்த்வாऽஸ்யாம் அந்தகாலேऽபி ப்ரஹ்ம நிர்வாணம் ருச்சதி ॥72॥

இந்த நான்கு ச்லோகங்களில் ஞானயோகத்தைப் பற்றியும், ஞானியின் லக்ஷணத்தைப் பற்றியும் நன்ருக மனத்தில் படும்படிச் சொல்லி, இந்த இரண்டாம் அதயாயத்தைப் பூர்த்தி செய்து கொள் கிறுன் பகவான்.

ஆத்ம ஞானம் உலகத்தவர்க்கு இரவுபோல ப்ரகாசமற்று இருக் கும். இந்த்ரிய ஜெயம் பெற்ற ஞானிக்கு பகல் போல் ப்ரகாசமாக இருக்கும்.

சம்சாரிகள் விஷயங்களிலே மனத்தை வைத்துப் பொழுதுபோக் குவதுபோல, ஆத்ம தரிசனம் பெற்ற ஞானி எப்போதும் தன் ஆத்மா வினிடமே மனத்தை வைத்து ஆனந்தித்திருப்பான். இப்படியிருக் கும் ஞானிக்கு ஸம்ஸார விஷயமே மனத்தில் படாது. அவனுக்கு ஏகாந்த அந்தப்புரமும் பகவத் சந்நிதியாகவேயிருக்கும். சம்சாரி களில் சிலருக்கு பகவத் சந்நிதியும் அந்தப்புரமாகவேயிருக்கும்.

ஆத்மாவின் போக்யதை நெஞ்சில் பட்ட ஞானிக்கு உலக விஷ யங்கள் மனத்தில் படாது. விஷயங்கள் அருகிலிருந்தாலும் ஒருவித

விகாரமும் அற்று இருப்பர். பல நதிகள் வந்து விழுந்தாலும் கடல் எப்படி கலங்குவதில்லையோ, அதுபோல ஞானியின் மனம் விஷயங்களினால் சிறிதும் கலக்கம் அடைகிறதில்லை.

ஆத்ம ஞானம் பெற்றவனுக்கு தேகாத்ம அபிமானம், அஹங்காரம், மமகாரம் சிறிதும் இராது. காமங்கள் எல்லாம் துறந்து ஏகாந்தமான இடத்தில் இருந்து தன் ஆத்மாவையே அநுபவித்திருப்பான்.

"ப்ரஹ்ம நிர்வாணம் ருச்சதி-இப்படி ஞானயோகத்தைச் செய்து தலைகட்டினவன் ஆத்மஸாக்ஷாத்காரம் (ஆத்ம தரிசனம்) பெறுவான். ஆத்ம தரிசனம் பெற்றவனுக்கு சம்சார பந்தம் போய்விடுகிறது.

ப்ரஹ்மம் என்பதற்கு, ஸர்வேச்வரன், நான்முக ப்ரஹ்மா, ப்ரக்ருதி என பல பொருள்கள் உண்டு. இங்கே ஜீவாத்மா என்பதே பொருள்.

மற்ற நாட்களில் எப்படியிருந்தாலும், "மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே" என்கிற ஆழ்வார் பாசுரப்படி, கடைசி காலத்திலாவது கர்மயோகம் செய்து ஆத்ம தரிசனம் பெற்றால் ஸம்ஸார பந்தம் நீங்கி, ஆத்மக்ஷேமம் அடைவாய்.

ஓம் தத் ஸத்

இரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீர்த்த ஸங்க்ரஹம்

நித்யாத்மாஸங்க கர்மேஹா
கோசரா ஸாங்கிய யோகதீ
த்விதீயே ஸ்திததீலக்ஷா
ப்ரோக்தா தந்மோஹ சாந்தயே ||

இரண்டாம் அத்யாயத்தில் அர்ஜுனனைப் பார்த்து 'சரீரம் அழிவுள்ளது. ஜீவன் நித்யன், பரமாத்மாவான தன்னைப்போல அழிவில்லாதவன் ஜீவன். அவரவர் வர்ணாசிரமத்திற்குச் சேர சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மாநுஷ்டானத்தைச் செய்தே தீரவேண்டும். இப்படி வெகு காலம் செய்து வந்தால் சித்த சுத்தி உண்டாகி ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறக்கூடிய ஞானயோகம் கைபுகும். நீ மோஹத்தை விட்டுவிடு என்று அர்ஜுனனை க்ருஷ்ணன் தேற்றினான்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மூன்றும் அத்தியாயம்

## அவதாரிகை

பரமபுருஷனுன கண்ணனைப் பார்த்து அர்ஜுனன், "நீ எனக்கு ஆசார்யன், நான் உனது சிஷ்யன், எது எனக்கு ஆத்ம நன்மையைப் பயக்குமோ, அதை நீ எனக்கு உபதேசம் செய்ய வேண்டும்" என பிரார்த்தித்தான். இதைப் பற்றாசாகக் கொண்டு க்ருஷ்ணன் உலகத்தவர் நன்மைக்காக கீதையை உபதேசம் செய்கிறுன். முதல் முன்னம் ஆத்ம சரீர விவேகத்தை பல சுலோகங்களினுல் சொன்னுன். பின்பு, அவரவர் வர்ணுச்ரமத்திற்குச் சேர கர்மாவை பலனில் இச்சையில்லாமல் செய்யவேண்டும் என்ருன். இப்படி வெகுகாலம் கர்மாவைச் செய்து வந்தால் ராக த்வேஷம் (விருப்பும் வெறுப்பும்) போய் இந்திரிய ஜெயம் (புலனடக்கம்) பெறலாம். பிறகு ஞான யோகம் செய்ய முடியும். இந்த ஞான யோகத்தை வெகு காலம் செய்து ஆத்ம தரிசனம் பெறலாம் என்று சொல்லி முடித்தான் கீழ்.

விசிஷ்டாத்வைத மதத்தில் பகவத் பக்தியோகமே மோக்ஷ ஸாதனம் அப்படியிருக்க, அதைச் சொல்லாமல், முதலில் கர்ம ஞான யோகத்தை உபதேசிப்பானேன் என்னில் கர்ம ஞானங்கள் பக்திக்கு அங்கங்கள். ஆதலால் அங்கத்தை முதலில் சொல்லி, பின்பு அங்கியான பக்தியை உபதேசிக்கிறுன். கர்ம ஞானங்கள் ஒருவனை பக்தி யோகம் செய்ய அதிகாரியாக்குகிறது அதாவது தகுதியுள்ளவனுகச் செய்கிறது, ஆதலால் அவைகளை முதலில் சொன்னுன்.

அப்படிக்கில்லாமல் ஒரு நிதியைப்பெற, அது வைக்கப்பட்டிருக்கும் பையை (கிழிச் சீரையை) முதலில் கண்டு, அதை அவிழ்த்தே நிதியைப் பெறவேண்டும். அதேபோல 'வைத்த மாநிதி'யான எம்பெருமானைக் காண, அவனிருக்கும் ஜீவாத்ம தரிசனம் முதலில் பெறவேண்டும். அதற்கு வேண்டிய கர்ம ஞானத்தை முதலில் உபதேசித்தான் என்றும் கொள்ளலாம்.

பகவானைப் பெற, ஆத்ம தரிசனம் வேண்டும்-இதைப்பெற ஞான யோகம் செய்யவேண்டும். ஞானயோகத்திற்கு இந்திரிய ஜெயம் வேண்டும், இந்திரிய ஜெயம் பெற கர்மாநுஷ்டானம் வேண்டும்- இந்த கர்மயோகம் செய்ய முதன் முதலில் சரீர ஆத்ம விவேகம் வேண்டும். இப்படி அடைவுபடுத்தி கண்ணன் உபதேசம் செய்து வருகிறுன்.

''கர்மா'' என்றால் என்ன?

நாம் கண்ணால் காணும் சரீரம் ஆத்மா அன்று. ஆத்மா சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டது. சரீரம் அழியக்கூடியது. ஆத்மா அழிவில்லாதது; நித்யன் என்கிற அறிவு பெற்று அவரவர்களுக்குரிய வர்ணாச்ரம தர்மத்தைப் பலனில் இச்சையில்லாமல் செய்யும் செயலே 'கர்மா' எனப்படும்.

''கர்ம யோகம்'' என்றால் என்ன?

மேலே சொன்னபடி சரீர ஆத்ம விவேகம் பெறுவதுடன், ஆத்மா அறிவுடையவன், ஆனந்தமயன், தோஷமே தட்டாதவன். பகவானுக்குப் ப்ரகாரப்பொருள் என்கிற ஆத்ம யாதாத்மிய ஜ்ஞானத்துடன் பலனை இச்சியாமல், பகவானுடைய முகமலர்ச்சிக்காகவே துணி வர்ணாச்ரமத்துக்குச் சேர செய்யும் செயல் ''கர்ம யோகம்'' எனப்படும். இது தான் கீழே சொன்ன கர்மயோக மாகும். ஆனால், இந்த மூன்றும் அத்யாயத்தில் சொல்லப்படும் கர்ம யோகமோவெனில் மேலே சொன்ன ஆத்ம யாதாத்ம்ய ஞானம் பெற்று, ''பகவத் சரீர பூத ஜீவ:'' பகவானுக்கு ஆத்மா சரீரம் என்பதை எப்போதும் மனதில் நினைத்திருந்து, கர்ம யோகம் செய்பவனுக்கு, வேறு தனித்து ஞானயோகம் வேண்டியதில்லை. இந்த கர்ம யோகத்திலேயே ஞானமும் அடங்கிவிடுகிறது'' என்கிறான்.

''அர்ஜுன உவாச'' அர்ஜுனன் சொன்னது.

**ஜ்யாயஸீ சேத் கர்மணஸ் தே மதா புத்திர் ஜநார்தந।**
**தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ ॥1॥**

**வ்யாமிச்ரேணேவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே।**
**ததேகம் வத நிச்சித்ய யேந ச்ரேயோ$S$ஹம் ஆப்நுயாம் ॥2॥**

கேசவ! கர்மயோகத்தைக் காட்டிலும் ஞானயோகம் சிறந்தது எனில், இந்த கோரமான கர்மமாகிற இந்த போரைச் செய்ய என்னை நீ ஏன் தூண்டுகிறாய்

ஓரிடத்தில் கர்மயோகம் சிறந்தது என்றாலும் மற்றோரிடத்தில் ஞானயோகமே மேம்பட்டது என்றும் சொல்லி என் கலக்கத்தை அதிகப்படுத்துகிறாயே? ஆத்ம ச்ரேயஸ் பெற எனக்கு ஏதாவது ஒன்றை உறுதியாகச் சொல்லுவாயாக. இந்திரியங்களால் செய்யக் கூடிய கர்மா இந்திரியங்களை அடக்கி செய்யவேண்டிய ஞான யோகத்திற்கு எப்படி ஸாதனமாகும். ஒன்று ப்ரவர்த்தி தர்மம், மற்றொன்று நிவர்த்தி தர்மம். ஒன்று செயல்; மற்றொன்று செயல் அற்று இருக்கை

காரண காரியத்திற்கு ஒற்றுமை யில்லையே? என்பது அர்ஜுனனுடைய கேள்வி.

ஸ்ரீ பகவான் உவாச—கண்ணன் கூறியது.

**லோகே ऽஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாऽநக |**
**ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம் ||3||**

பாபமற்றவனே! ஆதியில் என்னால் இவ்வுலகத்திற்கு இருவகை யோகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆத்ம ஞானம் நன்றாக உடையவனுக்கு ஞானயோகமும் ஆத்ம ஞானமில்லாமல் ஞான யோகம் செய்யத் தகுதியற்றவனுக்கு கர்மயோகமும் சொல்லப்பட்டுள்ளன.

அவரவர் ஞான சக்திக்குச் சேர ஒவ்வொன்று ஒருவனுக்கு ஏற்றதாயிருக்கும். ஆத்ம யாதாத்ம்ய ஞானமும் இந்த்ரிய ஜயமும் வேண்டும் ஞானயோகம் செய்பவனுக்கு. ஆதலால் முதலில் கர்மயோகத்தைச் செய்து, இவைகளைப் பெற்றவனே ஞானயோகம் செய்யத் தகுதியானவன்.

**ந கர்மணாம் அநாரம்பாந் நைஷ்கர்ம்யம் புருஷோऽச்நுதே |**
**ந ச ஸம்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ||4||**

பரம புருஷனுடைய ஆராதன ரூபமான கர்மாவை செய்யாவிடினும், அல்லது அதை ஆரம்பித்து நடுவில் விடினும் ஞானயோகம் செய்ய முடியாது. கர்ம யோகத்தை வெகுகாலம் விடாமல் செய்தால்தான், பாபங்கள் போகும். ராகத்வேஷம் விலகும். இந்த்ரிய ஜெயம் பெற்று ஞான யோகம் செய்ய முடியும்.

இங்கு, ''நைஷ்கர்ம்யம்'' என்றால் ஞான யோகம் என்பது பொருள். கர்மம் செய்யாமை என்பது பொருந்தாது. கர்மயோகம் செய்யாவிடில் ஞானயோகம் செய்ய முடியாது என்பதே பொருள்.

**ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |**
**கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர் குணை: ||5||**

**கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸா ஸ்மரந் |**
**இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ||6||**

**யஸ்த்விந்த்ரியாணி மநஸா நியம்ய ஆரபதேऽர்ஜுந |**
**கர்மேந்த்ரியை: கர்மயோகம் அஸக்த: ஸ விசிஷ்யதே ||7||**

சரீரம் பெற்ற ஜீவன் ஒரு க்ஷணமும் ஒரு செயலையும் செய்யாம லிருக்க முடியாது. இவனுடைய ஸத்வ, ரஜஸ், தமோ குணத்திற்குச் சேர, மனத்தினலாவது எதையாவது சிந்தித்தேயிருப்பான். அப்படிச் செய்வதை தன் ஆத்ம நன்மைக்குச் சேர ஏதாவது ஒரு கர்மாவை செய்து ச்ரேயஸ் பெறலாமன்றோ?

அவன் தன் கை கால் முதலிய கர்மேந்திரியங்களை மாத்திரம் விஷயங்களில் போகாமல் தடுத்து, மனத்தினல் விஷயங்களை நினைத் திருக்கிருனே அவன் அறிவில்லாதவன்; பொய் ஒழுக்கமுள்ளவன்.

அர்ஜுன! எவன் தன் ஐம்புலன்களையும் அடக்கி, மனத்தையும் விஷயங்களில் செல்லாமல் அடக்கி, தனக்குரிய கர்மாவை பலனில் இச்சையில்லாமல் செய்கிருனே, அவனே சிறந்தவன்.

**நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: |**
**சரீரயாத்ராऽபி ச தே ந ப்ரஸித்யேத் அகர்மண: ||8||**

அர்ஜுன? உனக்கு விதிக்கப்பட்ட கர்மாவை செய்வாயாக! ஞானயோகத்தைவிட கர்மயோகமே சிறந்தது ; கர்மாவைச் செய்யா விடில் உயிர் தரிப்பதே இயலாது.

''அகர்மா''—கர்மா செய்யாமை என்று பலர் பொருள் கூறியுள் ளனர். இது தவருனது. அகர்மா என்ருல் 'ஞானயோகம்' என்பதே பொருள். அப்ராஹ்மணன் என்ருல் ப்ராஹ்மணனல்லாத ஒரு மனிதனைச் சொல்லுமே ஒழிய, மிருகத்தைச் சொல்லாது. அது போல இங்கு அகர்மா என்ருல் கர்மா அன்று; ஆனல் மற்றொரு யோகம், ஞானயோகம் என்பதே பொருள்.

''த்வம் நியதம் குரு''—''யத்ர தூம: தத்ர வஹ்நி'' புகையுள்ள இடத்தில் நெருப்பு இருந்தே தீருமென்பதுபோல, சரீரம் பெற்ற ஜீவனுக்குச் செயல் இருந்தே தீரும். கை கால் முதலிய அவயவங்கள் தம்தம் செயலைச் செய்யாமலிராது. இப்படி ஒருவன் பழக்கப்பட்ட கர்மா ஞானததைவிடச் சிறந்தது. ப்ரக்ருதி சம்பந்தம் பெற்ற நீ உனக்கு இயற்கையான கர்மாவைச் செய்.

''ஞான யோகத்தைவிட கர்மயோகம் சிறந்தது—ஏன்?''

1. விஷயப் பற்றுள்ள நமக்கு பற்று அற்று செய்யவேண்டிய ஞான யோகத்தைவிட, கர்மயோகம் செய்வது சுலபம்.

2. சரீரம் பெற்ற ஜீவன் கணமும் செயலை செய்யாமலிருக்க முடியாது, மற்றச் செயலைச் செய்வதைத் தவிர்த்து தன் ஸ்வரூபத்திற்கு ஏற்ற கர்மாவைச் செய்து ச்ரேயஸை பெறலாம்.

3. ப்ரக்ருதி சம்பந்தம் பெற்ற ஜீவனுக்கு இந்திரியங்களை அடக்கிச் செய்யும் ஞானயோகத்தைவிட, இந்திரியங்களைக்கொண்டு செய்யப்படும் கர்மயோகமே ஏற்றதாகும்.

ஒருவன் கம்பியின் மேல் நடப்பதுபோல ஞானயோகம்—தவறி கீழே விழுந்தால் மரணமே சித்திக்கும், அவ்வளவு ஆபத்தானது ஞானயோகம். தரையின் மேல் நடப்பது சுலபம். பழக்கமானது; அதுபோலதான் பழக்கப்பட்ட செயல் கர்மயோகம்; இது சுலபமானது.

4. "த்யாத்வா தேவம் ஜபேந் மநு"

ஒரு மந்திரத்தை ஜபிக்கும்போது, அதனால் சொல்லப்பட்ட தேவதையை மனத்தினால் த்யானம் செய்ய வேண்டும். இதில் தேவதா தியானமே முக்கியமானது. இதையே "வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்க" என்று அருளியிருக்கிறான் ஆண்டாள். மந்திரங்களுக்குள் காயத்ரி மந்திரம் மிக மேலானது. இதை ஜபிக்கும்போது, அம்மந்திரத்தின் தேவதையான சூர்யமண்டல மத்ய வர்த்தியான நாராயணனை த்யானம் செய்தே ஜபிக்க வேண்டும்.

அதேபோல கர்மயோகம் செய்யும்போதும், ஆத்மாவின் யாதாத்ம்ய ஞானத்துடனிருந்து, "இந்த ஜீவன் பகவானுக்குச் சரீரம்" என்கிற நினைவுடனேயே செய்ய வேண்டும். இப்படி ஞான யோகமும் இந்த கர்ம யோகத்திலேயே அடங்கி விடுகிறது. தனித்து ஞானயோகம் தேவையில்லை; இவனுக்கு ஆத்ம தரிசனம் ஏற்படுகிறது

5. ஞான யோகம் செய்பவனுக்கும் சரீர தாரணத்திற்கு அன்னம் வேண்டும். பகவதாராதனத்தில் உபயோகப்பட்ட அன்னமே சுத்தமான ஆகாரம். அதுவே ஸத்வ குணத்தை நிலைத்திருக்கச் செய்யும். ஆதலால் இந்த ஞான யோகியும் பகவதாராதனமான கர்மாவைச் செய்ய வேண்டும். பகவதாராதனம், யாகம், யக்ஞம் இவைகளில் உபயோகப்படாத அன்னத்தைத்தவிர, மற்றவைகளைக் கண்ட கண்ட இடங்களில் புசித்தால், அவன் பாபத்தையே புசிக்கிறான் என்கிறது சாஸ்திரம்,

**யஜ்ஞார்த்தாத் கர்மணோऽன்யத்ர லோகோऽயம் கர்மபந்தந: ।**
**ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர ॥9॥**

சாஸ்திரத்தில் கூறியுள்ள பகவதாராதன ரூபமான யஜ்ஞம் முதலான கர்மாக்களைச் செய்வதற்காகவே நாம் பொருளைத்தேட வேண்டும்; நம் உபயோகத்திற்கென்று தேடும் பொருள் நம்மை சம்சார பந்தத்திலேயே சேர்ப்பிக்கும்

ஆகையால், நாம் எந்தச் செயலைச் செய்தாலும் (வைதிகமோ, லௌகிகமோ) நம் கடமையென்றும் ''பகவத் ப்ரீத்யர்த்தம்'' என்றுமே செய்யவேண்டும். இப்படிச் செய்தால், பகவான் ஆராதிக்கப் பட்டவனாகிறான். அதாவது பகவானுக்கு உகப்பாகிறது. அதனால் ஆத்ம தரிசனத்திற்குத் தடையான பாபம் போய், ஆத்ம தரிசனம் பெறலாம்.

**ஸஹ யஜ்ஞை: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।**
**அநேந ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோऽஸ்து இஷ்டகாமதுக் ॥10॥**

ஆதியில் மனிதர்களைக் காப்பாற்ற வேண்டி, பகவான் அவர்களை யஜ்ஞங்களுடன் சேர்த்தே படைத்து, இந்த யஜ்ஞங்களைச் செய்து நீங்கள் வளர்ச்சியடையுங்கள். இவை உங்களுக்கு காம தேனுவைப்போல் வேண்டியவற்றையெல்லாம் தரும் என்று சொன்னான்.

அநாதி மாயையான அசித் சம்பந்தத்தினால், ப்ரளய காலத்தில், பெயர் வடிவங்களை இழந்து, ஒரு நன்மையும் அடையத் தகுதியற்று சிறகொடிந்த பறவை போலிருக்கும், ஜீவாத்மாக்களை தயமானமனாகக் கருணையினால் படைத்து, அவைகளுக்கு கை கால் முதலான கர்மேந்த்ரியங்களையும், கண் செவி போன்ற ஞானேந்த்ரியங்களையும், மனவுணர்வையும் தந்து, ''நான் கொடுத்த ஞான சக்திகளை கொண்டு எனக்கு ஆராதன ரூபமான யஜ்ஞ யாகாதிகளைச் செய்யுங்கள்; நீங்கள் மறுபிறவியில்லா மோக்ஷமடைவீர்கள்'' என்று பகவான் விதித்துள்ளான்.

இங்கே ''ப்ரஜாபதி'' என்பது நிருபாதிக ப்ரஜாபதியான ஸ்ரீமந் நாராயணனையே குறிக்கிறது. ''பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்'' என்கிறது ச்ருதியும்.

**தேவாந் பாவயதாநேந தே தேவா: பாவயந்து வ: ।**
**பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரம் அவாப்ஸ்யத ॥11॥**

**இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா: தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா:**
**தைர் தத்தாந் அப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: ||12||**

**யஜ்ஞசிஷ்டாசிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: |**
**தே த்வகம் புஞ்ஜதே பாபா : யே பசந்தி ஆத்மகாரணாத் ||13||**

இந்த யஜ்ஞ, யாக, ஆராதனத்தினால் தேவதைகள், உங்களிடம் பிரீதி அடைகிறார்கள். உங்களையும் தங்களிடம் ப்ரீதியைச் செய்யும்படி செய்வர். இப்படி ஒருவருக்கொருவர் பிரீதராய் மிக்க நன்மையை அடைவீர்கள்.

தேவதைகள் உங்களால் ஆராதிக்கப்பட்டு உங்களுக்கு இஷ்டமான பலன்களை அளிப்பர். ஆதலால், அவர்களின் ஆராதனத்தின் பொருட்டு, அளிக்கப்பட்ட பொருள்களை அவர்களுக்கு இல்லை செய்து, தானே புஜிப்பவன் திருடனாகிறான்.

யஜ்ஞம் செய்து, மிஞ்சியதை உட்கொள்ளும் சாதுக்கள், பாவங்கள் எல்லாவற்றிலுமிருந்து விடுபடுகின்றனர். இதற்கு மாறாக எவர் தங்களுக்கென்று சமைத்து உண்கிறார்களோ அவர்கள் பாவத்தையே புஜிக்கிறார்கள்.

தேவதா ஆராதன ரூபமான அந்த யஜ்ஞங்களினால், என் சரீர பூதர்களான தேவதைகளையே நீங்கள் ஆராதிப்பவர் ஆகிறீர்கள், உங்களால் ஆராதிக்கப்பட்ட அவர்கள் உங்களுக்கு அன்னபானாதிகளைக் கொடுத்து ரக்ஷிப்பர். இப்படி ஒருவருக்கொருவர் பரிபாலித்துக்கொண்டு மேலான மோக்ஷ பலத்தை அடைவீர்கள்.

"அஹம்ஹி ஸர்வ யஜ்ஞானாம் போக்தா ப்ரபுரேவச" என்று மேலே கண்ணன் அருளிச் செய்திருக்கிறான்.

இப்படி அவர்களால் கொடுக்கப்பட்ட அன்னபானாதிகளால் அவர்களை ஆராதிக்காமல் தானே புஜிக்கிறவன் திருடன்; அவனுக்கு ஒரு நன்மையும் உண்டாகாது; நரகமே கிட்டும்.

ஆனால் நாமோ இப்படி யஜ்ஞம் ஆராதனாதிகளைச் செய்வதில்லை; அவைகளின் பலனில மாத்திரம் நமக்கு அதிக இச்சை இருக்கிறது. செய்யக்கூடாத பாபச் செயல்களை விரைந்து செய்கிறோம்; அவைகளின் பலன்கள் மட்டும் நமக்குக் கூடாது என்று விரும்புகிறோம்!

நாம் சம்சாரத்திலிருக்கலாம்; பணம் தேடி பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றலாம்; தான தர்மமும் செய்யலாம். ஆனால், இவையெல்

லாம் பகவத் ப்ரீத்யர்த்தம் அவன் கட்டளையை நாம் நடத்துகிறோம் என்று உண்மையாக மனத்தில் எண்ணிச் செய்தால் கர்ம பந்தம் நம்மைக் கட்டாது; ஆத்ம நன்மையே கிட்டும்.

**அன்னாத் பவந்தி பூதானி பர்ஜந்யாத் அன்னஸம்பவ: |**
**யஜ்ஞாத் பவதி பர்ஜந்ய: யஜ்ஞ: கர்மஸமுத்பவ: ||14||**

**கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம் |**
**தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் ||15||**

**ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்த்தயதீஹ ய: |**
**அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி ||16||**

ஸகல பிராணிகளும் அன்னத்தினால் உண்டாகின்றன. அன்னம் மழையினால் ஏற்படுகிறது. மழை பகவதாராதன ரூபமான யஜ்ஞத்தினால் உண்டாகிறது. யஜ்ஞம் மனிதனால் செய்யப் படுகிறது

சரீரம் தரிக்க அன்னம் வேண்டும்; அன்னமுண்டாக மழை வேண்டும். மழைக்கு யஜ்ஞம் செய்யப்பட வேண்டும். யஜ்ஞம் செய்ய சரீரம் தரித்திருக்க வேண்டும்.

இப்படி ஒன்றுக்கொன்று காரிய காரணமாய் பகவானால், ஒரு சக்கரம் போல் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆதலால், கர்மயோகி ஞானயோகி இருவரும் இந்த உலக சக்கரம் நிற்காமல் நடக்க கர்மாவைச் செய்தேயாக வேண்டும். பகவத் ஆராதனமான யஜ்ஞம் யாகம் பூஜை இவைகளில் உபயோகப்பட்ட மிச்சமான அன்னத்தையே புஜிக்க வேண்டும். இப்படிச் செய்யாதவன் தன் வாழ்நாளை வீணே கழிப்பவன். இவன் "தன் சரீரத்தை நிழலில் வைத்து ஆத்மாவை" வெய்யலில் வைப்பவன்." அதாவது தன் ஆத்மாவுக்கு நன்மையைச் செய்யாமல் சரீரத்திற்கே பாடுபடுகிறவன். இவன் உயிருடனிருந்தும் இல்லாதவன்; அதாவது இறந்தவனுக்குச் சமானம்.

இங்கு 'ப்ரஹ்மம்', என்கிற பதம் ப்ரக்ருதியினாலான சரீரத்தையே சொல்கிறது. இதற்கு ச்ருதியில் ஆதாரமுள்ளது; க்ருஷ்ணனும் "மம யோநிர் மஹத் ப்ரஹ்ம" என்று மேலே சொல்லியிருக்கிறான்.

**யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத் ஆத்மத்ருப்தச்ச மானவ: |**
**ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட: தஸ்ய கார்யம் ந வித்யதே ||17||**

**நைவ தஸ்ய க்ருதேனார்த்த: நாக்ருதேனேஹ கச்சன |**
**ந சாஸ்ய ஸர்வபூதேஷு கச்சித் அர்த்தவ்யபாச்ரய: ||18||**

**தஸ்மாத் அஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர |**
**அஸக்தோ ஹ்யாசரந் கர்ம பரம் ஆப்னோதி பூருஷ: ||19||**

ஆனால் எவன் ஆத்மாவிலேயே இன்புற்று ஆத்ம தரிசனத்தி லேயே திருப்தி அடைந்து, ஆத்மாவிலேயே எலலா ஆனந்தத்தையும் அநுபவிக்கிறானோ அவனுக்குச் செய்ய வேண்டிய கர்மா ஒன்று மில்லை.

ஆத்ம யோகத்தின் பயன் கைபுகுந்தவனுக்கு, தாரகம், போஷ கம், போக்யம் இவைகளால் உண்டாகும் எல்லா ஆனந்தமும், ஆத்ம தரிசனத்தினாலேயே கிடைக்கும். ஆதலால் அவன் கர்மாவைச் செய்வதினால் அவனுக்கு ஒரு பலனுமில்லை.

*தாரகம்—உடல் தரிக்க அன்னம் முதலானவை*

*போஷகம்—உடல் பருக்க பால் நெய் போன்றவை*

*போக்யம்—சுகத்தைத் தரும் தாம்பூலம் போன்றவை*

ஆத்ம தரிசனம் பெற்றவனுக்கு ஒரு கர்மாவைச் செய்வதினாலும் பலனில்லை; செய்யாததினாலும் தோஷமில்லை; பஞ்சபூதங்களாலான ப்ரக்ருதியின் பொருள்களால் அவனுக்கு ஆகவேண்டியது ஒன்று மில்லை.

ஆத்ம தரிசனம் பெறாதவன் பலன் ஒன்றையும் விரும்பாமல், ஆத்மயாதாத்ம்ய ஞானத்துடன் கர்மயோகத்தைச் செய்யவேண்டும். இப்படிச் செய்பவன் ஞான யோகிக்கும் மேற்பட்டவன். இக்கர்ம யோகத்தினுள்ளேயே ஞான யோகமும் அடங்கியிருக்கிறது. ஆத லால் அர்ஜுந! நீ ஆரம்பித்த கர்மயோகமான, இந்தப்போரைச் செய் வாயாக.

**கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்த்திதா ஜநகாதய: |**
**லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யக் கர்த்துமர்ஹஸி ||20||**

**யத்யத் ஆசரதி ச்ரேஷ்ட்ட: தத் ததேவேதரோ ஜந: |**
**ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத்அநுவர்த்ததே ||21||**

ஜனகர் முதலானோர் கருமத்தினாலேயே உயர்ந்த சித்தியை அடைந்திருக்கின்றனர். ஆகவே உலகை நல்வழிப்படுத்தும் பொருட்டும் நீ கருமத்தைச் செய்யவே உரியவன்.

ஞானிகளில் மேம்பட்டவர் ஜனகர். இவர் ஒரு ராஜரிஷி. ஜ்ஞானயோகம் செய்ய சக்தி பெற்றவராயிருந்தும் அவர் கர்மயோகத்

தையே செய்திருக்கிறார். அதே போல் மற்றும் பல ஞானிகளும் கர்ம யோகத்தையே செய்திருக்கிறார்கள். ஆதலால் நீயும் கர்மயோகத்தையே செய்வாயாக; உலகத்தவர் நன்மையைக்கருதியும் நீகர்ம யோகத்தையே செய்ய உரியவன்.

சாஸ்திரம் அறிந்த பெரியோர்கள் செய்வதையே, சாதாரண ஜனங்கள் பின்பற்றுவர். ஆதலால் எவனும் அவனுக்குரிய கர்மானுஷ்டத்தைவிடக்கூடாது. அப்படி விட்டால், அவனைப் பார்த்து, மற்றவர்களும் தங்கள் கர்மாவைவிட்டு, பாபத்தை அடைவார்கள். இதற்குக்காரணமான பெரியோர்களுக்கும் அந்த பாபம் வந்து சேரும்.

**ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந |**
**நா நவாப்தம் அவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ||22||**

பார்த்தா! எனக்குச் செய்யவேண்டிய கருமம் மூவுலகிலும் ஒன்றுமில்லை; என்றால் அடையப்படாததும் இனி அடைய வேண்டியதும் எனக்கு ஒன்றுமில்லை; எனினும் நானும் கர்மாவைச் செய்து கொண்டிருக்கிறேன்.

அர்ஜுனா! ஸர்வஜ்ஞனும் ஸர்வஸக்தனுமுள்ள எனக்கு கர்மாவைச் செய்து அதனால் பெறவேண்டியது ஒன்றுமில்லை. இருந்தும், உலகத்தவர் கெடாமலிருப்பதற்காக நானும் கர்மாவைச் செய்கிறேன்.

**யதி ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித: |**
**மம வர்த்மாநுவர்தந்தே மனுஷ்யா: பார்த்தா ஸர்வச: ||23||**

**உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத் அஹம் |**
**ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹந்யாம் இமா: ப்ரஜா: ||24||**

பார்த்தா! நான் எப்போதும், சோம்பலை விடுத்து கருமத்தைச் செய்யாமல் போனால், நிச்சயமாக மற்ற மனிதர்கள் என்னை பின் பற்றி, செயலை விட்டுவிடுவர்.

நான் கர்மாவைச் செய்யாமல் போனால் உலகத்தவர் கெட்டுப் போவார்கள்; உலக கலக்கமும் ஜாதிக் கலப்பும் ஏற்பட நான் காரணமாவேன். மற்ற மனிதர்களைக் கெடுத்தவனும் ஆவேன்.

அஹம்–ஸர்வேச்வரனாய், ஸத்யஸங்கல்பனாய் இச்சையினாலேயே ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயத்தைச் செய்ய சக்தி வாய்த்த நான் உலகம் உய்யும் பொருட்டு, என் இச்சையினால் அவதரித்திருக்

கிறேன். சிஷ்டாசாரமுள்ள வசுதேவருக்குப் புத்திரனாகத் தோன்றி யிருக்கிறேன். அக்குல தர்மங்களை நான் செய்யாவிடில், என் பரத்வத்தை (தெய்வத் தன்மையை) அறியாத ஸாதாரண மனிதர்கள் என்னைப் பார்த்து, தாங்களும கர்மாவைச் செய்யாமல் விட்டு நாசமடைபவர். ஆதலால் நானும் இவ்வுலகில் கர்மாவை விடாமல் செய்கிறேன். இல்லாவிடில் மற்றவர் எல்லோரும் அவரவர் வர்ணாசிரம தர்மங்களைவிட்டு, லோகம் நாசமடையும். ஜாதிக் கலப்பு போன்றவை உண்டாகும்.

இவைகளுக்கு நானே காரணமாவேனன்றோ'

**ஸக்தா : கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத !**
**குர்யாத் வித்வாந் ததா அஸக்த : சிகீர்ஷுர் லோகஸங்க்ரஹம்** ||25||

**ந புத்திபேதம் ஜநயேத் அஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம் !**
**ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வாந் யுக்தஸ் ஸமாசரந்** ||26||

ஞான யோகத்தைச் செய்ய சக்தியுள்ள ஞானியும்; ஞான யோகம் செய்ய சக்தியில்லாத கர்ம யோகியைப்போல, உலகம் கெடாமலிருப்பதற்காக கர்மயோகத்தைச் செய்யக்கடவன்.

கர்மயோகம் செய்பவன் ஞானயோகம் மேம்பட்டது என நினைக்கக் கூடாது. ஆதலால் ஞானியும் சம புத்தியுடனிருந்தே, தானும் கர்மாவைச் செய்து, மற்றவர்களையும் செய்விக்கவேண்டும்

**ப்ரக்ருதே : க்ரியமாணாநி குணை : கர்மாணி ஸர்வச :**
**அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹம் இதி மந்யதே** ||27||

**தத்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ : !**
**குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே** ||28||

அஹங்காரத்தினால் (சரீரமே ஆத்ம என்கிற அபிமானத்தினால்) ஞானம் பெறாத மூடன், ராஜஸம், தாமஸம், ஸாத்விகம் ஆகிய குணங்களால் செய்யப்படும் செயல்களை, தான் செய்ததாகவே நினைத்திருப்பான்.

ஆனால், முமுக்ஷுவானவன், ப்ரக்ருதியின் காரியமான ஸத்வ ரஜஸ் தமோ குணங்களினாலேயே ஒவ்வொரு செயலும் செய்யப்படுகின்றன; தான் ஒன்றும் செய்ய வில்லை என்று நினைத்து, அச் செயல்களில் பற்று அற்று இருப்பான். இயற்கையாக செயல் என்பது ஜீவனுக்கிருந்தாலும், ஒரு நற்செயலோ, கெட்ட செயலோ

செய்வதற்கு ஜீவன் காரணமில்லை; முக்குணங்களே காரணமாகிறது.

ஒரு செயல் உண்டாக, "ஜ்ஞாநாதி" ஒன்றை அறிகிறான்; "இச்சதி" அது தனக்கு வேண்டுமென இச்சிக்கிறான்; யததே—முயல்கிறான். "கரோதி" அதை அடைய செயல்படுகிறான் "புங்க்தே" அதை அடைந்து அனுபவிக்கிறான். நம் செயல் எல்லாவற்றிலும் இப்படி ஐந்துவிதமாகப் பார்க்கவேண்டும். நம் இதயத்தில் ஜீவன், மனம் என இரண்டு இருக்கின்றன. இதில் கர்த்ருத்வம் மனதுக்குத்தான் உண்டு ஜீவனுக்கில்லை என்பது சாங்க்ய மதம்.

"கர்த்தா சாஸ்திரவத்வாத்" என்கிற ப்ரஹ்ம சூத்திரத்தில் வியாஸர் இதை விசாரம் செய்து, மனம் என்பது ஓர் அசித் தத்வம்; அறிவில்லாதது. அதற்குச் செயல் கிடையாது. எந்த அசித் தத்வத்திற்கும் அறிவுமில்லை; செயலுமில்லை, ஜீவன் சித் அறிவுள்ளவன் அவனுக்குத்தான் அறிவும் செயலும் உண்டு. ஆதலால் எல்லாச் செயலுக்கும் ஜீவன்தான் கர்த்தா என அறுதியிட்டிருக்கிறார்.

இங்கு பகவான் என்ன சொல்கிறான் என்றால் ஜீவன் கர்த்தாவாகயிருந்த போதிலும், ஒரு நற்செயலோ கெட்ட செயலோ உண்டாக ஜீவன் கர்த்தாயில்லை. ப்ரக்ருதியின் காரியமான ஸத்வ, ரஜஸ்தமோ குணமடியாக, எந்த குணம் மேலோங்கியிருக்கிறதோ, அதன்படி செயல்கள் நடக்கிறபடியால், அக்குணங்களே காரணம் என்று முமுக்ஷு நினைக்க வேண்டும் என்கிறான்.

**ப்ரக்ருதேர் குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு |**
**தாந் அக்ருத்ஸ்நவிதோ மந்தாந் க்ருத்ஸ்நவித் விசாலயேத்**
**|| 29 ||**

ப்ரக்ருதியினாலான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களால், ஆத்மாவின் உண்மை நிலையை அறியாதார், அக்குணங்களின் செயல்களிலே பற்றுடையவர்களாய் இருப்பர். இவர்கள் அறிவில்லாதவர்கள்; இவர்களை, ஞானிகள் தங்கள் ஞான நிலையைக் காட்டி கருமத்திலிருந்து நழுவும்படி செய்யக்கூடாது; அவர்கள் நன்மைக்காக ஞானியும் கர்மாவைச் செய்யவேண்டும்.

"குணா குணேஷு வர்தந்தே"-நல்ல குணம் நற்செயலையும் தீய குணம் தீய செயலையும் செய்யும்படி தூண்டுகின்றன. ஆதலால், தன்னைச் செய்பவனாக நினைக்கக் கூடாது; குணங்களுக்கு அநுகுணமாக எல்லாச் செயல்களும் பகவானால் செய்விக்கப்படுகின்றன

என்று நினைக்கவேண்டும். இதை "அகர்த்ருத்வ அநுஸந்தானம்" என்பர். இப்படி நினைத்து கர்மாவைச் செய்பவனுக்கு, அக்கர்மாவினால் உண்டாகும் புண்ய பாப பலன் எதுவும் ஒட்டாது.

**மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்மசேதஸா ।**
**நிராசீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥ 30 ॥**

*கீதையிலுள்ள முக்யமான ச்லோகங்களில் இது ஒன்று.*

**அவதாரிகை :**

காலம் அநாதி; நம் ஜீவனும் அநாதி. அநாதியான காலத்தில் அநாதியான ஜீவன் எடுத்துள்ள பிறவிகளோ கணக்கற்றவை. இப்பிறவிகளில் நாம் செய்திருக்கும் பாபங்கள் எண்ணிறந்தவை. அவைகளை நினைத்து நாம் தபிக்கவேண்டும்; ஆனால் நம்மிடம் அவ்வித தாபமில்லை; சுகமாக உண்டு உடுத்தித் திரிகிறோம்; ஏனெனில் நம்மிடம் ப்ராமாணிகமுமில்லை; ஞானமுமில்லை.

ச்ருதி சொல்லியுள்ளபடி "பகவத் சரீர பூத: ஜீவ:" நம் ஜீவன் பகவானுடைய சரீரம் என்கிற ஞானம் உண்மையில் நமக்கு இருக்குமாயின், நாம் எந்தச் செயலைச் செய்தாலும், அதை நாமாகவே செய்யவில்லை; பகவானே செய்விக்கிறான் என்று நினைக்கவேண்டும்.

ஒரு செயல் உண்டாக, முதல் முன்னம் தனக்குச் சரீரமாயுள்ள ஜீவனை பகவான் தூண்டுகிறான். ஜீவன் மனத்தைத் தூண்ட, மனம் இந்த்ரியங்களைத் தூண்ட, இந்த்ரியங்கள் விஷயங்களில் சம்பந்தப்பட்டு, அச்செயல் உண்டாகிறது. இப்படி நாம் செய்யும் எல்லாச் செயலுக்கும் ஆரம்ப கர்த்தா பகவான்தான்.

அப்படியாகில், ஒருவனை ஒரு நற்செயலையும், மற்றொருவனை தீயச் செயலையும் செய்யும்படி, அவன் தூண்டுவானேன்?

அவரவர் பூர்வ ஜன்ம கர்ம பலனுக்குத் தக்கவாறு நற் கர்மாவையும் தீய கர்மாவையும் செய்விக்கிறான் பகவான். இதில் பாப புண்ய சம்பந்தம் அவனுக்கு இல்லை. இதில் அவன் அகர்த்தா—கர்த்தாயில்லை என்று மேலே கீதையில் கண்ணன் விவரிக்கப் போகிறான்; பகவான் ஒரு சூத்ரதாரி. ஒரு பொம்மலாட்டக்காரன் எப்படி ஒரு பொம்மையை ஆட்டுகிறானோ, அதே போல, ஜீவனை அவனுடைய கர்மாநுகுணமாக அவனது ஒவ்வொரு செயலையும் செய்விக்கிறான்.

**"சரீர ஆத்ம பாவம்"**

"பதிம் விச்வஸ்ய; பதிம் பதீநாம்;" என்றும்; "ஈச்வர: ஸர்வ பூதாநாம்!" என்றும்; "அந்த: ப்ரவிஷ்டா சாஸ்தா ஜநாநாம்" என்

றும், "யஸ்ய ப்ருதிவீ சரீரம், யஸ்ய ஆத்ம சரீரம்" என்றும் பல வேத வாக்யங்களில், ஸர்வேச்வரனை சித் அசித் வஸ்துக்களுக்கெல்லாம் பதி: எஜமானன் என்றும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமுமிருந்து அவைகளை நியமனம் செய்கிறவனென்றும், சித் அசித் வஸ்துக்களுக்கெல்லாம் அவன் ஆத்மா, அவைகள் அவனுக்குச் சரீரமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதையே "சரீர ஆத்ம பாவம்" என்பர் விசிஷ்டாத்வைத மதத்தில்.

இந்த சரீர ஆத்ம பாவத்தைக் கொண்டே விசிஷ்டாதவைதத்தில், பேத, அபேத, கடக ச்ருதிகளுக்குப் பொருளை ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல் நிர்வகிப்பர். பூட்டுக்குச் சாவி போடுகிறவன் எல்லா பூட்டுக்களையும் திறக்கக்கூடிய ஒரு சாவி (MasterKey) என்று ஒன்று வைத்திருப்பன். அதே போல விசிஷ்டாத்வைதத்திற்கு இந்த "சரீர ஆத்ம பாவம்" ஆகும்.

1. சரீரத்துக்கு நோய் வந்தால, நம் ஆத்மா வருந்துகிறது; அதைப் போக்க முயல்வதும் நம் ஜீவாத்மாதான். அதுபோல நம் ஜீவனுக்கு ஒரு துன்பம் வந்தால், அதற்கு ஆத்மாவான பகவான் வருத்தமடைகிறான்; அதைப் போக்க யத்தனிப்பவனும் அவனே "வ்யஸநேஷு மனுஷ்யாணாம் ப்ரசம் பவதி துக்கித:" என்கிற ஸ்ரீ ராமாயண ச்லோகத்தில் இதை நன்கு காணலாம்.

"மநுஷ்யாணாம்" என்பதினால், தன் பார்யா புத்திர பந்துக்களுக்கு மாத்திரம் என்பதில்லை; லோகத்தில் எந்த ஜந்துவுக்குத் துன்பம் ஏற்பட்டாலும், முதலில் வருந்துவது பகவான்தான். சில காலம் கழித்து இவர்கள் துன்பம் தீர்ந்தவாறே, இவர்கள் அதை மறந்து விடுவர்; உண்டு, உடுத்து வெற்றிலையும் தின்று சுகித்திருப்பர். பகவானோவெனில் நம் காவல் சோர்வினாலன்றோ அவர்களுக்கு அன்று அக்கஷ்டம் நேர்ந்தது என எப்போதும் வருந்தியிருப்பான்; இப்படி அவன் வருத்தம் இரட்டித்திருக்கும்.

பகவானுடைய சரீரமான ஜீவனுக்கு ஒரு துன்பம் ஏற்பட்டால் அதைப்போக்கி ரக்ஷிக்கிறவனும் பகவான். "என் உடம்பின் அழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ!" என்கிறான் கண்ணன்

2. நம் சரீரம் ஒரு ஜடப்பொருள். தானே ஒரு செயலையும் செய்ய முடியாது. ஆத்மா வெளியேறின சரீரம், ஒரு சலனமும் இன்றிக் கிடப்பதைக காண்கிறோம். ஆதலால் ஜீவாத்மாவினாலேயே சரீரம் ஒவ்வொரு செயலையும் செய்கிறது என்பதைக் காண்கிறோம். ஆதலால் ஜீவனே இச்சரீரத்திற்கு தாரகன், நியாமகன் (நியமிக்கிறவன்) என்பது தேறுகிறது. அதே போல் ஜீவன் பகவானுக்குச் சரீரம்'

பகவான் ஜீவனுள் ஆத்மாவாயிருந்து தரித்து, ஒவ்வோர் செயலிலும் அதை நியமிக்கிறான்.

3. ஜீவன் இந்த சரீரத்தைத் தரிக்கிறான். ஜீவனில்லை என்றால் சரீரத்தை ஒரு பிணம் என்கிறோம். அது அழிந்து விடுகிறது; அதே போல் பகவானே நம் ஜீவனுக்கு ஆத்மாவாகயிருந்து, ஜீவனை தரிக்கிறான்; பகவானில்லை என்றால் ஜீவனில்லை. ஆனால் எக்காலத்திலும் ஜீவனைவிட்டு பகவான் பிரிகிறதேயில்லை. பகவான் சேஷி (எஜமானன்), ஜீவன் அவனுக்கு சேஷன் (அடிமை) என்பர்

இப்படி நிருபாதிக (இயற்கையான) தாரகத்வம், நியமனத்வம், சேஷித்வம் என மூன்றுவித சம்பந்தமும் பகவானுக்கு ஜீவன்மீது உண்டு. ஜீவனின் கர்மாநுகுணமாக, பகவானால் நியமிக்கப்பட்டே (தூண்டப்பட்டே) எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன; ஜீவன் தானாகச் செய்கிறவன் என்பதில்லை

நம் சரீரமும் இந்த்ரியங்களும் நம் ஆத்மாவின் ப்ரீதியையே செய்து போருகிறது. அதேபோல பகவானுக்குச் சரீரமான, நம் ஜீவன் பகவானுடைய முகமலர்ச்சிக்காவே ஒவ்வொரு செயலையும் செய்து போகவேண்டும். அசித்தான சரீரமே அதின் எஜமானனான ஜீவனின் உகப்புக்காகவே ஒவ்வொரு செயலையும் செய்கிறபோது, சித்தான அறிவுள்ள ஜீவன் அவனுடைய ஸ்வாமியான பகவான் திருவுள்ளம் உகக்க கர்மாவைச் செய்யவேண்டாவோ!

பகவான் ஓர் அரசனைப் போலவும், ஆகாசத்தைப் போலவுமிருப்பவன் என்று ஒரு சுருதி சொல்லியிருக்கிறது; ஆகாசத்தைப் போல் ஈச்வரன் எங்குமிருப்பவன்; அரசனைப் போல ஆக்ஞை (உத்தரவு) செய்பவன். அரசன் எங்கேயோ ஓரிடத்திலிருந்தாலும் அவன் ஆக்ஞை (உத்தரவு) எங்குள்ளவர்களாலும் அடங்கி நடத்தப்படுகிறது.

அதுபோல பகவானுடைய ஆக்ஞையான சாஸ்திரத்திற்கு எல்லோரும் அடங்கியே நடக்கவேண்டும். ஆனால் தற்காலம் நம் நடத்தை எப்படி இருக்கிறதென்றால், அரசன் எங்கேயிருந்தாலும் அவன் உத்தரவை நாம் மீறி நடப்பதில்லை. ஆனால் ராஜாதி ராஜனான ஈச்வரன் எங்குமிருப்பவனாயிருந்தும், அவன் ஆக்ஞையான சாஸ்திரத்தை அவன் எதிரிலேயே மீறி நடக்கிறோம். உதாரணமாக பத்து மணிக்கு ஆபீஸ் வரவேண்டுமென்றால் அதை மீறுவதில்லை; ஆனால் எந்தக் காலத்தில் சந்தியாவந்தனம் செய்யவேண்டுமென சாஸ்திரம் விதிக்கிறதோ அதன்படி செய்வதில்லை; அதை மீறியே நடக்

கிறோம். இதுதான நம தறகால சரித்திரம். அரசன் ஆணையை மீறுகிறதில்லை; பகவத் சாஸ்திரத்தை மீறி நடக்கிறோம்.

**இனி ச்லோகார்த்தம்:**

குணமே கர்த்தா என்று நினைக்க வேண்டுமென்றான் கீழே; இதில் எல்லாச் செயல்களுக்கும் ஈச்வரனே கர்த்தா என்று நினை என்கிறான்.

ஆத்மாவின் தெளிந்த ஞானத்தினால், எந்தக் குணத்தினாலான செயலையும், என்னிடத்தில் வைத்து என்னை கர்த்தாவாக நினை; பலனில் இச்சையில்லாதவனாய், கர்மாவைத் தன்னது என்கிற மமகாரமற்றவனாய், பழமையான பாபத்தினால் என்ன நேரிடுமோ என்கிற பயத்தைவிட்டு நீ போர் புரிவாயாக.

''அத்யாத்ம சேதஸ:—ஈச்வரன் ஆத்மாவாயிருப்பவன். மற்ற சித் அசித்தெல்லாம் அவனுக்குச் சரீரம்; ''நிராசீ'': பயனில் இச்சையில்லாமல்; பல த்யாகத்தைச் சொல்கிறது.

கர்த்ருத்வ த்யாகம், பலத்யாகம், மமதா த்யாகம் இவைகளை உடையவனே த்யாகி. உரிமைகளை விடுவதே த்யாகம் எனப்படும். (அதாவது ஒரு செயலை செய்கிறவனாகவோ, செயலுக்கு உரியவனாகவோ அச்செயலின் பயனுக்கு உரியவனாகவோ தன்னைக் கருதாமையே தியாகமாகும்.)

''அசந்துஷ்டோ குதஸ் ஸுகம்?—சந்துஷ்டி (திருப்தி) இல்லாதவனுக்கு ஸுகம் இல்லை. ''மயி:—ஸர்வாத்ம அந்தர்பூத மயி. எல்லாவிடத்திலும் அந்தராத்மாவாயுள்ள என்னிடத்தில், 'மயி': ஜீவனுக்கும் அவன் குணங்களுக்கும் நியந்தாவாயிருக்கும் என்னிடத்தில்;

''ஸந்யஸ்ய''- கர்த்ருத்வ த்யாகம் இதனால் சொல்லப்படுகிறது;

''நிராஸீர் நிர்மமோ பூத்வா'' பல த்யாகம் மமதா த்யாகம் சொல்லப்படுகிறது

''ஜ்வர:''—தாபம்: நாம் செய்திருக்கும் பாபத்தைக் கண்டு தாபம் உண்டாகவேண்டும்.

''ஆக, பகவதாராதன'' ரூபமான கர்மாவைச் செய்யும்போது, தன்னைச் செய்பவனாக நினையாமல், ஸத்வ ரஜஸ் தமோ குணமடியாக நடக்கிறது என்றும், பகவானாலேயே அக்குணங்களுக்குச் சேர செய்விக்கப்படுகிறதென்றும் அநுஸந்தானம் (நினைக்க) வேண்டும் பலத்தில் ஆசையில்லாமல் கர்மயோகம் செய்யவேண்டும்.

**யே மே மதமிதம நித்யம் அநுதிஷ்டந்தி மாநவா: |**
**ச்ரத்தாவந்தோ$S$நஸூயந்தோ முச்யந்தே தே$S$பி கர்மபி: ||31||**

எவர் நான் மேலே சொன்னபடி கர்மயோகம் செய்கிறார்களோ, செய்யாவிடினும் அதைச் செய்யவேணுமென்று ச்ரத்தை (ஆசை) இருக்கிறதோ அது இலலாவிடினும் நான் சொன்ன வார்த்தைகளில் அஸூயை இல்லாமலிருக்கிறார்களோ, அவர்கள் எல்லோரும் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமான புண்ய பாபங்களினின்று விடுபடுகிறார்கள். அதாவது மறுபிறவியற்று மோக்ஷமே பெறுகிறார்கள்.

''யே மானவா'':-எந்த மனிதர்களாயினும், சாஸ்த்ர அதிகாரிகள்; சாஸ்திரத்தில் சொல்லியபடி நடக்க யோக்யதையுள்ளவர்கள் என்பது ஸ்ரீ பாஷ்யகாரரின் கருத்து. ஏனெனில் தேவர்கள் உள்பட கீதைக்கு எல்லோரும் அதிகாரிகள்.

சாதாரணமாக நாம் சந்தியாவந்தனம், பகவதாராதனம், கோயிலுக்குப் போய் பகவானை வணங்குதல், பகவத் பஜனம் போன்ற ஸத்காரியங்களைச் செய்யும்போது; சிலருக்கு கஷ்டமாகத் தோன்றும். ஏனெனில் அதில் ச்ரத்தையில்லாததினாலே, இவைகளைச் செய்பவரிடம் அஸூயை இல்லாமலிருந்தாலே, நாளடைவில் நமக்கு மேலே சொன்ன ஸத்காரியங்களில் ச்ரத்தை யுண்டாகி, நாமும் செய்து ஆத்ம ச்ரேயஸ் பெறலாம்.

மேலே சொன்னதையே நிவர்த்தி ரூபமாகச் சொல்கிறான்.

**யே த்வேதத் அப்யஸூயந்தோ நாநுதிஷ்டந்தி மே மதம் |**
**ஸர்வஜ்ஞான விமூடாம்ஸ் தாந்வித்தி நஷ்டாந் அசேதஸ: ||32||**

யாவனொருவன் என் வார்த்தையில் அஸூயை செய்கிறானோ, எவனுக்கு அதில் ச்ரத்தையில்லையோ, எவன் அதை அநுஷ்டிப்பதில்லையோ, அவன் நாசமடைகிறான். பகவானுக்கு உகப்பாக கர்மாவைச் செய்யாதவன், உயிருடனிருந்தும் இல்லாதவனாகிறான்; இறந்தவனுக்குச் சமம்.

நமக்கு ஸ்வாமியாயும், ஆத்மாவாயுமுள்ள கண்ணனின் வார்த்தைகளை விச்வஸிக்காதவர்கள் ''அசேதஸ'' என்றால் தரிக்கப்படுபவனாய், நியமிக்கப்படுபவனாயும் எனக்கு சேஷனாயிருந்தும், அதற்குச் சேர அவன் குணங்கள் பிரகாசிக்கவில்லை எனில் அவன் இருந்தும் இல்லாதவனே.

**ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி |**
**ப்ரக்ருதிம் யாந்தி பூதாநி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ||33||**

ஜ்ஞானமுள்ளவர்கள் கூட பகவானுடைய வார்த்தையைக் கேட்டு அதின்படி நடப்பதில்லையே.

தர்மபுத்திரரும் பொய் சொன்னார் என்பது போல, 'ஞானவான் அபி' என்கிறான், நாம் படித்துக்கேட்டு அறிகிற ஞானமெல்லாம் ப்ரத்யக்ஷ ஞானமன்று; (நேரில் கண்களால் பார்த்து அறியும் அறிவன்று) ஜீவன் பகவானுக்கு சேஷன், தாஸன், அடிமை என்ற அறிவு, செயலளவாக வருவதில்லை. இதற்கு முன், பல பிறவிகளில் நம் தேக யாத்திரைக்காகவே (சரீர போஷணத்திற்காகவே) பல செயல்களைச் செய்த வாசனைக்குச் சேர, நம் சரீரம், சரீர பந்துக்களான பார்யா புத்திரர்களுக்காகவே, உழைக்கிறோமே தவிர ஆத்ம ஸம்பந்தத்திற்குச் சேர, பகவானுடைய முகமலர்ச்சிக்காக கர்மாவைச் செய்வதில்லை; பூர்வ ஜன்ம இந்த்ரிய வாசனைகளுடனேயே நாம் பிறக்கிறோம். ஆதலால் பகவானுடைய வார்த்தை காரிய கரமாவதில்லை. (பலிக்கிறதில்லை). ஒரு குழந்தை பிறந்த உடனே நாக்கில் தேனைத் தடவினால் அதை ருசியோடு நக்குகிறது. விளக்கெண்ணெயைத் தடவினால் அழுகிறது; இதுதான் பூர்வ ஜன்ம வாசனை.

**இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவ**
**ஸ்திதௌ ।**
**தயோர் ந வசம்ஆகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥34॥**

ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களினால், (புலன் பொறிகளினால்) ராகத்வேஷம் (விருப்பம், வெறுப்பு) உண்டாகின்றன. ராகம் என்றால் ஆசை நாம் ஆசைப்பட்டது கிடைககாவிடில், த்வேஷம் உண்டாகிறது. இவைகளைப் போக்க வேண்டும். இவைகள் நமக்குப் பெரிய சத்ருக்கள். நாம் கண்ணை மூடிக்கொண்டு, ஆத்ம சிந்தனைச் சிற்று உட்கார்ந்தாலும், ராகத்வேஷம் போவதில்லை; ஆதலால் ஞான யோகம் செய்வது கஷ்டம்; ஸ்தூல மார்க்கத்தில் (பெரும் போக்கான வழியில்) சென்றால் கீழே விழ மாட்டோம். ஸூக்ஷ்ம (நுட்பமான) மார்க்கத்தில் போனால் தவறி கீழே விழுவோம்; உயிர் பிழைப்பதே கஷ்டமாகிவிடும்.

**பூரி தக்ஷிணைக் கதை**—ஒரு ப்ரபு பூரிதக்ஷிணை கொடுக்க எல்லோரையும் கோவிலுள் அடைத்து, தான் வாசற் கதவு அருகிலிருந்து, ஒவ்வொருவராக, தக்ஷிணைக் கொடுத்து, வெளியில் அனுப்பினான். ஒரு தடவை தக்ஷிணை வாங்கின ஒருவன் பின் மதில் ஏறி குதித்து, இரத்த காயத்துடன் மறுபடியும் தக்ஷிணை வாங்க வந்தான். அவனைக் கண்ட அந்தப் ப்ரபு, "நீ மறுபடியும் உள்ளே

என் வந்தாய்?" என்று கேட்க, அதற்கு அவன், "எனக்கு மூன்று மனைவிகளுண்டு; இரண்டு பேரைத் திருப்தி செய்து விடலாம்; ஆனால் அந்த மூன்றும் மனைவியின் தூண்டுதலால, மதில் ஏறி குதித்து வந்தேன்" என்று பதில் சொன்னான். பசி, தாகம், ஆசை என்பதே மூன்று மனைவிகள். முதல் இரண்டை த்ருப்தி செய்துவிடலாம். ஆனால், ஆசையை த்ருப்தி செய்வது கஷ்டம். இதுதான் ராகம். இதை ஞானயோகம் செய்பவன் போக்க வேண்டும்.

**ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண பரதர்மாத் ஸ்வநுஷ்ட்டிதாத் ।**
**ஸ்வதர்மே நிதநம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ: 35**

ஒருவன் இதர வர்ணாச்ரம தர்மத்தைப் பூர்த்தியாகச் செய்வதை காட்டிலும், தன் வர்ணாச்ரம தர்மத்தைக் குறைவாகச் செய்வதே மேலானது. மற்றவர் தர்மத்தை நன்றாகச் செய்தாலும் அது விநாசத்தையே கொடுக்கும்.

இதுதான் மற்றவர் எல்லோரும் சொல்லும் பொருள் இந்த ச்லோகத்திற்கு. ஆனால் நம் பாஷ்யகாரர் இதை சரியான பொருளாக ஒப்புக்கொள்ளவில்லை.

முதலில், மற்றவர்க்குரிய வர்ணாச்ரம தர்மத்தை ஒருவன் செய்வது தர்மமாகாது; அது பாபம் என்றே சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. அதை தர்மம் என்று சொல்லுகிறது சாஸ்திர விரோதம்.

"ஸ்வதர்மம்" என்றால் கர்மயோகம். நாம் பழக்கப்பட்ட தர்மம் எதுவோ அதுவே ஸ்வதர்மம். (ஸ்வஸக்யபூதோ தர்ம:—ஸ்வதர்மம்) ஒருவனுக்கு அனுபவமாய் செய்ய சக்தியுள்ள தர்மமே ஸ்வதர்மம். பல ஜன்மாக்களில் ஜீவன் இந்த்ரியங்களைக் கொண்டு பல செயல்களைச் செய்து பழக்கப்பட்டிருக்கிறான். ஆதலால், இந்த்ரியங்களால செய்யப்படும் கர்மயோகம் ஸ்வதர்மம்.

"பரதர்மம்" என்பது ஜ்ஞானயோகம். (அசக்ய பூதோ தர்ம: பரதர்மம்). நாம் சுலபமாய் செய்து முடிக்க பழக்கப்படாத தர்மம் பரதர்மம். இந்த்ரியங்களை அடக்கி, ராகத்வேஷம் அற்றுச் செய்ய வேண்டியது ஞானயோகம் என்றே இங்கு பொருள் கொள்ள வேண்டும்.

மேலும் கண்ணன் இங்கே முன் ச்லோகத்திலேயும், பின் ச்லோகத்திலேயும் ஞானயோகம் செய்வது கஷ்டம் என்று சொல்லி வருவதினால் ஸந்தர்ப்பத்தை யொட்டிய பார்த்தாலும், ஸ்வதர்மம்,

பரதர்மம் என்பதற்கு கர்மயோகம் ஞானயோகம் என்றே பொருள் தெறுகிறது.

ஜீவன் பல பிறவிகளில் இந்த்ரியங்களைக்கொண்டு பல செயல்களைச் செய்து பழக்கப்பட்டிருக்கிறான். ஆதலால், கர்மயோகம் சுலபம். அதைப் பூர்த்தியாகச் செய்யாவிடினும் அதில் பழக்கப்பட்ட இந்த்ரியங்களைக் கொண்டு பகவான் அதைப் பூர்த்தி செய்து வைக்கிறான். சந்தியாவந்தனத்தில், காயத்ரி மந்த்ரம் மிக முக்கியமானது. அதை ஜெபம் செய்து வந்தாலும், நல்ல பிறவியைக் கொடுத்து கர்மயோகத்தில் மூட்டி பூர்த்தி செய்து வைக்கிறான் பகவான்.

இந்த்ரியத்தை அடக்கிச் செய்ய வேண்டிய ஞானயோகம் செய்வது கஷ்டம்; அதைக் குறைவாகச் செய்தால் ஆபத்து; அதை பூர்த்தியாகச் செய்யவும் முடியாது; செய்கிறவன் நினைவையொட்டி 'அதைப் பூர்த்தியாகச் செய்தாலும்' என்று இங்கே கூறப்பட்டுள்ளது. ஒருநாள் ஞானயோகம் செய்து, அது தனக்குக் கை புகுந்ததாக நினைக்கிறான்; மறுநாளே ராஜஸ குணம் மேலிட்டு மனது அவனை விஷயங்களில் இழுத்துச் சென்று விடும் செய்ததும் வீணாய் விடும். "ஆரம்ப சூரத்வம் அநர்த்தத்தையே விளைவிக்கும்".

பூர்வ ஜன்மவாசனையே வித்து; ரஜஸ்தமோ குணம் தண்ணீர் சரீரம் பூமி; பூமி ஜல சம்பந்தம் உண்டானால் வித்து முளைத்தே தீரும். பயிர் உண்டாவது நிச்சயம். அதுபோல சம்சார சம்பந்தத்தினால் காமக்ரோதாதிகளான பயிர் விருத்தி அடைகிறது. நமக்கு பகவத் விஷயத்தில் காமம் (ஆசை) வேண்டும். க்ஷுத்ர விஷயங்களில் காமம் கூடாது.

**அத கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ: ।**
**அநிச்சந்நபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: ॥36॥**

"அர்ஜுந உவாச"—அர்ஜுனன் கேட்கிறான்: க்ருஷ்ணா! விருப்பம் இல்லாதிருந்தும், உலகில் உள்ள புருஷன் எதனால் ஏவப்பட்டு, பலாத்காரமாக பாபத்தைச் செய்ய நேரிடுகிறது?

நாம் பகவத் விஷயத்தைப் படிக்கிறோம், கேட்கிறோம். பாபத்தைச் செய்ய இஷ்டப்படுவதில்லை, இருந்தும் சில சமயம் பாபச் செயல்களைச் செய்யும்படி நிர்பந்தமாக ஏற்படுகிறது. அது ஏன்?

ஸ்ரீ பகவான் உவாச : கண்ணன் அருளியது.

**காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: |**
**மஹாசனோ மஹாபாப்மா வித்யேநம் இஹ வைரிணம் 37**

அர்ஜுனா! காமம் என்னும் ஆசையே அவர்களை பாபத்தைச் செய்யும்படி தூண்டுகிறது; காமத்தினால் கோபம் உண்டாகிறது. காம ஏஷ க்ரோதஏஷ ரஜோகுண ஸமுத்பவ: இந்தக் காமமும் க்ரோதமும் ரஜோ குணத்தினால் உண்டாகின்றன.

காமத்திற்கும், நெருப்புக்கும் த்ருப்தி என்பதில்லை. வழியோடு போகும் ஒருவனை எப்படி புயல்காற்று அடித்துச் செல்கிறதோ, எப்படி ஒரு படகை நதியின் வெள்ளம் எதிர்நோக்கி அடித்துச் செல்கிறதோ, அதுபோல ஒருவன் இஷ்டப்படாமலிருந்தாலும், இந்த ரஜோ குணத்தினால் உண்டாகும் காமமே ஒருவனை பாபச் செயலைச் செய்யும்படி செய்கிறது.

**தூமேனாவ்ரியதே வஹ்னிர் யதாऽऽதர்சோ மலேந ச |**
**யதோல்பேனாவ்ருதோ கர்ப்பஸ் ததா தேனேதம் ஆவ்ருதம் 38**

நம்மை ஆசை (காமம்) எப்படி மூடிக்கொண்டிருக்கிறது என்பதைச் சில உதாரணங்களைக்கொண்டு விவரிக்கிறான் பகவான்.

நெருப்பு எப்படி புகையினால் சூழப்பட்டிருக்கிறதோ, கர்ப்பம் எப்படி "உத்பலம்" என்னும் தோலால் மூடப்பட்டிருக்கிறதோ, அதேபோல காமம் நம்மை மூடிக்கொண்டிருக்கிறது.

இந்த மூன்று உதாரணங்களும் மூன்று உண்மையைக் காட்டுகின்றன.

1. "ஸஹஜத்வம்"—நெருப்பு இருந்தால் புகை இருந்தே தீரும். நெருப்பு ஜ்வாலையினால் ப்ரகாசித்திருப்பதுபோல, ஜீவன் தன் ஜ்ஞான ஒளியினால் ப்ரகாசித்திருப்பவன். ஒரு குழந்தை, தாயின் கர்ப்பத்திலிருக்கும்பொழுது அதற்கு பகவத் ஜ்ஞானமும், பூர்வ ஜன்ம ஞானமுமிருக்கும்; பூமியில் வந்து விழுந்தவுடன் அந்த உணர்வு மறைந்து ஆசை அதை மூடிக்கொள்கிறது. எப்படி புகையில்லாமல் நெருப்பில்லையோ அதுபோல ஆசையில்லாத, சரீரம் பெற்ற ஜீவனில்லை.

2. கண்ணாடி தூசி-தூசியைத் துடைத்தால் முகம் கண்ணாடியில நன்றாகத் தெரியும். அதுபோல விஷய ஆசையை விலக்கினால் பகவத் ஜ்ஞானம் உண்டாகும். ஆனால், தூசி மறுபடியும் வந்து மூடிக்கொள்வதுபோல ஆசை நம்மை மறுபடியும் மூடிக்கொள்கிறது.

3. "கர்பம் சர்மம்"—தாயின் கர்ப்பத்திலிருக்கும் சிசுவை "உத்பலம்" எனப்படும் ஒரு மெல்லிய தோல் மூடியிருக்கும். அக் குழந்தை எவ்வாறு முயன்றாலும் வெளியில் வரமுடிகிறதில்லை. பகவான் இச்சித்தபோது, தானாகவே வெளியில் கொண்டு வந்து தள்ளப்படுகிறது. அந்தத் திரையை அது தானாகவே விலக்கிக் கொள்ள முடிகிறதில்லை; சிறையில் அடைத்தவன்தான் விடுவிக்க வேண்டும். அதுபோல ஆசையான திரையை பகவானே போக்க வேண்டுமே ஒழிய, நம்மால் போக்கிக்கொள்ள முடியாது. அப்படி நம் முயற்சியினால் ஆசையைப் போக்கினாலும், அது கண்ணாடியை தூசி மூடிக்கொள்வது போலவும், தண்ணீரிலுள்ள பாசியை விலக்கினால் அது மறுபடி மூடிக்கொள்வது போலவும், ஆசை நம்மை மறுபடியும் மூடிக்கொள்ளும்.

**ஆவ்ருதம் ஜ்ஞாநம் ஏதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணா ।**
**காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணாநலேந ச ॥39॥**

ஆதலால், அர்ஜுந! ஜ்ஞானியின் சாஸ்திர ஜ்ஞானம், திருப்தி செய்ய முடியாத ஆசையாகிற நித்ய சத்ருவினால் மூடப்பட்டிருக்கிறது. அந்த ஆசையை இவன் போக்கிக் கொள்ள முடியாது.

**இந்த்ரியாணி மநோபுத்திரஸ்யாதிஷ்டாநம் உச்யதே ।**
**ஏதைர் விமோஹயத்யேஷ ஜ்ஞாநம் ஆவ்ருத்ய தேஹிநம் ॥40॥**

இந்த நித்ய சத்ருவான ஆசைக்கு இருப்பிடம் கண் முதலான இந்த்ரியங்களும், மனது புத்தியும்தான்: ஆசை இவைகளை சூழ்ந்திருந்து, சாஸ்த்திர ஜ்ஞானம் கார்யகரமாக வொட்டாமல் சரீரம் பெற்ற ஜீவனை மயக்குகிறது.

**தஸ்மாத் த்வம் இந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப!**
**பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாந விஜ்ஞாந நாசநம் ॥41॥**

இந்த்ரியங்களை அடக்கிச் செய்யவேண்டியது ஜ்ஞானயோகம் அதைச் செய்பவனுடைய ஆத்ம ஜ்ஞானம் இந்த ஆசையான சத்ருவினால் கெடும் ஆதலால் அர்ஜுனா! நீ மோக்ஷார்த்தமான கர்ம யோகத்தை இந்த்ரியங்களைக்கொண்டு செய்து, அந்த ஆசையை ஒழித்திடலாம்.

**இந்த்ரியாணி பராண்யாஹு: இந்த்ரியேப்ய: பரம் மந: ।**
**மநஸஸ்து பரா புத்தி: யோ புத்தே: பரதஸ்து ஸ: ॥42॥**

ஆத்ம ஜ்ஞானத்திற்கு, முக்கிய விரோதி இந்த்ரியங்கள், அவை களில் மனமே முக்கிய சத்ரு. மற்ற எந்த இந்த்ரியங்களை அடக்கி னாலும் அடக்கலாம்; மனத்தை அடக்குவது கஷ்டம். இது ப்ரபல மான விரோதி; இதைவிட பெரிய சத்ரு புத்தி. புத்தியைக்காட்டி லும் மேற்பட்ட விரோதி காமம். (ஆசை). (இங்கே பராணி, பரம் என்கிற பதங்களுக்கு 'சத்ரு' என்றே பொருள்.)

**ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப் யாத்மாந மாத்மநா ।**
**ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் 43**

தோள்வலி பெற்ற அர்ஜுநா! ஜ்ஞானத்திற்கு விரோதியான புத்தியைக் காட்டிலும் மேலான விரோதி காமம். ஆதலால் நீ உன் புத்தியினால் மனத்தைக் காம யோகத்தில் நிறுத்தி காமம் என்னும் அந்தக் கொடும் விரோதியை வெல்வதற்கு முயற்சி செய்வாயாக.

உலக அனுபவத்தில் நாம் பார்க்கலாம்; ஒருவன் தன்னைப் பெற்று வளர்த்த தாய் தந்தையர்களை பூஜித்து அவர்களுக்கு வேண்டிய நன்மையைச் செய்வதில்லை. ஆனால் தன் வீட்டிற்கு யாராவது தன் நண்பர்கள் வந்து விட்டால், அவர்களை அவன் அமோகமாக விசாரித்து உபசரிக்கிறான். அதேபோல நிருபாதிக மாதா பிதாவான ஈச்வரனை நாம் மறந்து, அநித்யமாய் நடுவில் வந்து போகும் நம் சரீரத்தையும், சரீரத்தின் பார்யா புத்திரர்களையும் போஷிப்பதிலேயே காலத்தைக் கழிக்கிறோம்.

தசரதன் காமத்திற்கு வசப்பட்டு ஸ்ரீராமனைக் காட்டிற்கு அனுப் பினான் என்பது லக்ஷ்மணன் கருத்து: ராமோ விக்ரஹவான் தர்ம என்கிற ஸாக்ஷாத் தர்மமான ராமனையும், ஸத்யம் என்கிற தர்மத்தையும் சீர்தூக்கிப் பார்த்தால், ஸத்யம் என்பது ஒரு தர்ம மாகவே லக்ஷ்மணன் மனத்தில் படவில்லை.

## மனப்ரவ்ருத்தி—விஷய ப்ரவ்ருத்தி

கடோப நிஷத்தில் வெகு அழகாய் ஒரு விஷயம் சொல்லியிருக் கிறது; மோக்ஷத்தில் இச்சையுள்ள ஒருவன், முதலில் தன் இந்த்ரி யங்களையும், மனத்தையும், புத்தியையும் விஷயங்களில் போகாமல் அடக்கவேண்டும். ஜீவாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறியவேண் டும். பின்பு பரமாத்மாவைப் பற்றிய ஜ்ஞானம் பெறவேண்டும். அதன் பிறகு பகவத் பக்தி செய்து, அது பரபக்தி, பரஜ்ஞான பரம பக்தியாக வளர்த்து மோக்ஷம் பெறலாம் என்கிறது.

இதை இந்த உபநிஷத்தில் எப்படிச் சொல்லியிருக்கிறதென்றால் நாம் ஒரு ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போக நல்ல ரதம் (வண்டி) வேண்டும். அதற்கு சாரதி வேண்டும். குதிரையை ஓட்ட ஜேணம் வேண்டும். குதிரைக்குக் கடிவாளம் வேண்டும். நல்ல மார்க்கம்

(சாலை) இருக்கவேண்டும். அப்போதுதான் நாம் ஊர்போய்ச் சேரலாம்.

"பரம பதமான" தேசத்திற்குப் போக, த்ருடமான சரீரம் (ரதம்) வேண்டும். நல்ல குதிரை (மனம்) வேண்டும். நல்ல புத்தி (ஜேனம்) வேண்டும். மார்க்கமான இந்த்ரியங்கள் நன்றாகயிருக்கவேண்டும். இப்படி இருந்தால் தான் நாம் பரமபதம் போய்ச் சேரலாம். இல்லாவிடில் அவை நம்மை சம்சாரமான படுகுழியிலே தள்ளிவிடும். மனமான குதிரை சரியான வழியில் போகாவிடில் புத்தியான கடிவாளத்தைக்கொண்டு நல்லவழியில் அதைத் திருப்ப வேண்டும். இந்த உபநிஷத்தின் பொருளையே கண்ணன் கீதையில் அருளிச செய்திருக்கிறான்.

ஆனால் நம் நிலை எப்படியிருக்கிறது? நாம் குதிரைகளை அடக்காமல் அவைகளை, போகிற வழியே விடுகிறோம். நம் வேலையாட்கள் நாம் சொல்வதைக் கேட்பதில்லை; அவர்கள் சொல்வழி நாம் நடக்கிறோம்.

இவையெல்லாவற்றையும்விட ஆசையை அடக்குவது கஷ்டம்; ஆதலால் அர்ஜுந! பலனில் பற்றற்று உனக்கு உசிதமான கர்ம யோகத்தையே நீ செய்வாயாக.

நமக்குள்ளதெல்லாம் ஆத்ம ஜ்ஞானம்தான். ஆத்ம யாதாத்ம்ய ஜ்ஞானத்துடன் ஒரு ஜீவன் பகவான் தன் சரீரத்தைக் கொண்டு பகதாராதன ரூபமான கர்மாவை அவனே செய்து கொள்கிறான் என்ற ஜ்ஞானததுடன் ஒருவன் கர்மாவைச் செய்து வந்தால், அதுவே அவனை மோக்ஷத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும். தனித்து, ஜ்ஞானயோகம் அவன் செய்யவேண்டியதில்லை. இப்படிப்பட்ட கர்ம யோகத்தையே நீ செய்யவேண்டும் என்று சொல்லி, கிருஷ்ணன் இந்த மூன்றும் அத்யாயத்தைப் பூர்த்தி செய்திருக்கிறான்.

ஸ்ரீ ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹம்

## மூன்றும் அத்தியாயம்

**அஸக்த்யா லோக ரக்ஷாயை குணேஷ் வாரோப்ய கர்த்ருதாம்!**
**ஸர்வேச்வரே வா ந்யஸ் யோக்தா த்ருதீயே கர்மகார்யதா||**

ஜ்ஞானயோகம் செய்ய சக்தியுள்ளவர்களும் அதைச் செய்ய தகுதியில்லாதவர்களின் நன்மைக்காக, தனக்குள்ள கர்த்ருவத்தை, முக்குணங்களிடமும், பகவானிடமும் வைத்து, ஒரு பலனையும் இச்சியாமல், கர்மங்களைச் செய்யவேண்டும் என்பதையே இந்த மூன்றும் அத்தியாயத்தில் ஸாரமாக கண்ணான் அருளிச் செய்திருக்கிறான்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ பகவத் கீதை

## நான்காம் அத்தியாயம்

மூன்றும் அத்யாயத்தில் கண்ணன் அர்ஜுனனைப் பார்த்து, "ஞானயோகத்தைவிட கர்மயோகமே சிறந்தது. ஆதலால் நீ உனக்குரிய கர்மாவான போரையே செய்" என்று சொன்னான். இந்த நான்காம் அத்தியாயத்தின் முதல் மூன்று ச்லோகங்களிலே, "உன்னைப் போர் செய்யத் தூண்டுவதற்காக இந்த கர்மயோகத்தை புதிதாக உனக்குச் சொன்னேன் என்பதில்லை. இதை நான் ஏற்கனவே சூரியனுக்குச் சொல்லியிருக்கிறேன். சூரியன் தன் புதல்வன் மனுவுக்கும், மனு தன் புத்திரன் இக்ஷ்வாகுக்கும் சொல்லி, பரம்பரையாக வந்து கொண்டிருந்தது. இப்போது மறைந்திருக்கிறபடியால், நான் உனக்கு அதைச் சொன்னேன்" என்கிறான்.

ஸ்ரீ பகவான் உவாச—கண்ணன் அருளியது.

**இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாந் அஹம் அவ்யயம் |**
**விவஸ்வாந் மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத் ||1||**

இந்த கர்மயோகம் அழிவில்லாதது; இதை நான் முன்னரே சூரியனுக்குச் சொல்லியிருக்கிறேன். சூரியன் தன் புத்திரனை மனுவுக்குச் சொன்னான். மனு தன் மகன் இக்ஷ்வாகுக்குச் சொன்னான்.

இங்கே யோகம் என்றால் கர்மயோகம் என்றே பொருள். ஞானயோகம் என்பதில்லை. அஹம் என்றால் தர்மம் கர்மம் எல்லாவற்றுக்கும் மூலகாரணமான நான். அவ்யயம்—அழிவில்லாதது.

எல்லாம் அழிந்த பிரளய காலத்திலும், கர்மயோகம் உள்பட எல்லா வேத சாஸ்திரத்தையும், பகவான் தன் ஹ்ருதயத்தில் வைத்திருந்து, ச்ருஷ்டி ஆரம்பத்தில் ப்ரஹ்மா போன்ற அதிகாரிகளுக்கு உபதேசிக்கிறான். ஆதலால் கர்மயோகம் நித்யமானது. அழிவில்லாதது. இன்னும், கர்மயோகம், ஞான பக்தியை உண்டாக்கி நித்யமான, மோக்ஷ பலத்தைக் கொடுப்பதினால், கர்மயோகம் நித்யம் என்றும் சொல்லலாம்.

**ஏவம் பரம்பரா ப்ராப்தம் இமம் ராஜர்ஷயோவிது: |**
**ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ||2||**

அநேக ராஜாக்களும் ரிஷிகளும் இந்த கர்மயோகத்தைப் பரம்பரையாக அவரவர் தந்தையர் மூலமாக அறிந்து, அநுஷ்டித்து வந்தார்கள். வெகு காலமாகி விட்டபடியால் அது இப்போது நஷ்டமாகி

விட்டது. யுகங்கள் தோறும் நாளுக்கு நாள் சாஸ்திரத்தில் ஞான சக்தி அநுஷ்டானம் குறைந்து கொண்டிருக்கிறபடியால், இந்த தர்மத்திற்கு நஷ்ட ப்ராயம் ஏற்பட்டிருக்கிறது. முழுமையும் அழிந்து விட்டது என்பதற்கில்லை. வியாஸர் பீஷ்மர், அக்ரூரர் போன்ற சில மஹான்கள் இதைச் செய்து கொண்டிருக்கிறார்கள். இப்போது குறைவு ஏற்பட்டிருக்கும்போது இந்த தர்மத்தை நான் உனக்குச் சொன்னேன்.

**ஸ ஏவாயம் மயாதேऽத்ய யோக: ப்ரோக்த: புராதந:|**
**பக்தோ ஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதத் உத்தமம்||3||**

இந்த கர்மயோகம் மிகவும் முக்கியமானது; பழமையானது. நீ எனக்கு பக்தனாகவும் தோழனாகவுமிருப்பதனால் ஒளிமிக்கதும் ரகஸ்யமானதுமான இந்த கர்மயோகத்தை நான் உனக்குச் சொன்னேன்.

அர்ஜுன! நீ என் நண்பன், என்னுடைய பக்தன். நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடப்பாய் என்று இந்த சிறந்த ரஹஸ்யமான கர்மயோகத்தை உனக்குச் சொன்னேன்; இது மிகவும் ச்ரேயஸ்கரமானது, பழமையானது என்பதை நம்பு. இல்லாததைச் சொல்லி உன்னைப் போரில் தூண்டுகிறேன் என்று எண்ணாதே.

அர்ஜுன உவாச — அர்ஜுனன் சொன்னது.

**அவ(ப)ரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத: |**
**கதமேதத் விஜாநீயாம் த்வம் ஆதௌ ப்ரோக்தவாந் இதி ||4||**

கிருஷ்ணா! உன் பிறவி இப்போதிருக்கிறது, வெகு காலத்திற்கு முன்பே நீ சூரியனுக்குச் சொன்னாய் என்பது எப்படிப் பொருந்தும்?

ஆனால் இது சரியான கேள்வியாகாது. ஏனெனில், கிருஷ்ணன் ஈச்வரன், ஸர்வஜ்ஞன், அநாதியானவன், என்பது பீஷ்மர் போன்ற மஹான்கள் சொல்ல, கேட்டறிந்தவன் அர்ஜுனன்; நான் முக்காலத்திலுமிருப்பவன்" என்பதை க்ருஷ்ணனே இரண்டாம் அத்யாயம் "நத்வே வாஹம் ஜாது நாஸம்" என்னும் ச்லோகத்தில் சொல்லியிருக்கிறான். ஆதலால் இப்போது இருக்கும் நீ அப்போது சொன்னது எப்படிப் பொருந்தும் என்றோ, அதை இப்போது நீ எப்படி அறிந்து சொல்கிறாய் என்றோ, இக்கேள்விக்கு கருத்தல்ல; கிருஷ்ணனுடைய பதிலில் இருந்துஇதன் சரியான பொருளை நாம் அறிய வேண்டும்; நீ எதனால் பிறக்கிறாய்? எப்போது பிறக்கிறாய்? எதற்காக பிறக்கிறாய் ;

என்பதே இக்கேள்வியின் கருத்து என்பது கண்ணனுடைய பதிலி லிருந்து இதற்குச் சரியான பொருளாகத் தேறுகிறது;

ஸ்ரீ பகவான் உவாச—கண்ணன் அருளியது.

**பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந।**
**தாந்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ॥5॥**

அர்ஜுன! உன்னைப் போல எனக்கும் பல பிறவிகள் சென்று விட்டன. என் பிறவிகளையும் உன் பிறவிகளையும் யான் அறி வேன்; நீ அறிய மாட்டாய்.

நம்மைப் போன்ற மனிதருக்குப் பல பிறவிகள் உண்டு என்பதை அர்ஜுனன் அறிவான்; ஆதலால், உனக்கு எப்படி, பல பிறவிகள் உண்டோ, அதே போல எனக்கும் பல பிறவிகள் உண்டு; ஸர்வஜ் ஞனாகையால் நான் அவைகளை அறிவேன்; அஜ்ஞானியான நீ அவைகளை அறிய மாட்டாய், நான் என் இச்சையினாலேயே பிறக் கிறேன். நீ உன் கர்மாவினால் பிறக்கிறாய் என்கிறான்.

**அஜோ'பி ஸந் அவ்யயாத்மா பூதாநாம் ஈச்வரோ'பி ஸந்**
**ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா ॥6॥**

பிறப்பில்லாத தன்மையனாயிருந்தும், எல்லோருக்கும் ஈச்வரனா யிருந்து கொண்டு, என் ஜ்ஞான சக்தி முதலான கல்யாண குணங் களுடனேயே ஒன்றையும் விடாமல் நான் அவதரிக்கிறேன்.

**ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய**—என்பதற்கு அத்வைதிகள் சொல்லும் பொருள் என்னவென்றால், "ப்ரக்ருதியின் தன்மையான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களுடன் நான் பிறக்கிறேன்" என்பதே யாம். இது சரியான பொருளாகாது.

**விசிஷ்டாத்வைத மதத்தில்**—சித், அசித், ஈச்வரன் என்னும் மூன்றும் உண்மைப் பொருள்கள்; அவைகளில், அசித்தின் காரியம் ப்ரக்ருதி. இதற்குத்தான் ஸத்வ, ரஜஸ் தமோ குணங்கள் உண்டு. இதற்கு ஞானமில்லை; ஸ்வரூப விகாரமுண்டு; ஜீவ னுக்கு ஸ்வரூப விகாரமில்லை; ஞான விகாரம்மாத்திரமுண்டு. ஈச்வரனுக்கோவெனில் ஸ்வரூப விகாரமுமில்லை; ஞான விகாரமு மில்லை=ஒருவித விகாரமும் அற்றவன். எப்போதும் ஒரு படி பட்டிருப்பவன். (விகாரம்=மாறுதல்)

பகவான் அவதரிக்கும் பொழுதெல்லாம், அவனுடைய ஞான சக்தியாதி குணங்களில் ஒருவித மாறுதலின்றியே அவைகளை பூர்ண

மாக உடையவனாகவே பிறக்கிறான் என்பது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம். ஆதலால் "ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய" என்பதற்கு, "தனக்கே உரிய (ப்ரக்ருதியினால் அல்லாத) அப்ராக்ருதமான திருமேனியுடனே, ஞான சக்தி கல்யாண குணங்களுடன் பிறக்கிறான் என்பதே பொருள்.

"ஆத்ம மாயயா" —என் இச்சையினாலேயே; "ஸம்பவாமி" பல படியாக அவதரிக்கிறேன்.

"பூதாநாம் ஈச்வர:அபிஸத்" எல்லா பிராணிகளுக்கும் ஈச்வரனாக இருந்து கொண்டே அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹத்துடன், என் இச்சையினால் நான் அவதரிக்கிறேன்.

ஹேயப்ரத்ய நீகத்வம் (தோஷமற்றவன்; தோஷங்களைப் போக்குபவன்) கல்யாண குணாகரத்வம் (நற்குணக்கடல்) இவை இரண்டும் ஸர்வேச்வரனுக்கு உபயலிங்கம் (அடையாளம்) என்பர். அவன் எங்கே எப்படி அவதாரம் செய்தாலும் இவ்விரண்டு குணங்களுடனேயே அவதரிக்கிறான்.

இதை எல்லா அவதாரங்களிலும் காணலாம்; ஸ்ரீ ராமாவதாரத்தில், தசரதனுக்கு மகனாய்த் தோன்றியிருக்கும் போது, சடாயு, சபரி போன்றவர்களுக்கு மோக்ஷம் கொடுத்திருக்கிறான்; கிருஷ்ணாவதாரத்தில் சங்கு சக்கரங்களுடனேயே, அவதரித்திருக்கிறான். அத்வைதிகள் சொல்வதுபோல் ப்ரக்ருதியினாலான சரீரமாகயிருந்தால், பூதனை கொடுத்த அந்த க்ரூரமான விஷத்தை உண்டு அப்போதே மாண்டிருப்பானன்றோ! ப்ரக்ருதியினாலான சரீரமாகயிருந்தால் ஏழு வயதில் ஏழுநாள் பசி தாகமில்லாமல் கோவர்த்தன கிரியை அனாயாசமாக தூக்கி நின்று எல்லா கோபாலர்களையும் ரக்ஷித்திருக்க முடியுமா?

அர்ச்சையிலும் திருப்பாணாழ்வார் போன்ற மஹான்கள் அவனை "அமலன்" ஹேயப்ரத்யநீகன் ஒருவித தோஷமும் தட்டாதவன், தன்னைக்கிட்டினாரின் தோஷங்களைப் போக்குகிறவன் என்பதை நேரில் கண்டு அனுபவித்துப் பேசியுள்ளார்கள்.

இங்கு மாயை என்பதற்கு ஞானம் என்றே பொருள்; மித்யை பொய் என்பதல்ல; இதற்கு ஆதாரம் உள்ளது.

ஆதலால், பகவத் அவதாரம் ப்ரக்ருதியினால் ஆனது மித்யை (பொய்) என்று அத்வைதிகள் சொல்லும் பொருள் பொருந்தாது.

அப்ராக்ருத திருமேனியுடன் தன்னுடைய அப்ராக்ருத தன்மையை விடாமல் தனக்குள்ள எல்லா ஜ்ஞான சக்திகளுடன் தன் இச்சையி ஞலேயே அவதரிக்கிறான் பகவான் என்பதே சரியான பொருளாகும்.

''அவதரிக்கும் காலத்தைச் சொல்லுகிறான்.''

**யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத।**
**அப்யுத்தாநம் அதர்மஸ்ய ததா ऽ த்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥7॥**

பரத குலத்தவனே! எந்தெந்த காலத்தில் தர்மம் நசிக்கிறதோ அதர்மம் மேலிடுகிறதோ அந்தந்த காலத்தில் நான் என்னை ஸ்ருஷ்டித்துக் கொள்கிறேன்.

''க்லானி-என்றால் குறைவு என்றே பொருள். அழிவு என்பதில்லை; அவரவர்கள் செய்யவேண்டிய வர்ணாச்ரம தர்மங்கள் உலகில் குறைந்தால், தராசின் ஒரு தட்டு கீழே தாழ்ந்தால் மற்றொரு தட்டு மேலோங்கியே தீருவதுபோன்று தர்மம் குறைகையில் அதர்மம் மேலோங்கும்' அந்தக்காலங்களில பகவான் தன் இச்சையினாலேயே அவதரிக்கிறான்.

**பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்।**
**தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥8॥**

இதற்குமேல் தன் அவதார ப்ரயோஜனத்தைச் சொல்லுகிறான்.

ஸாதுக்களை ரக்ஷிக்கும் பொருட்டும், துஷ்டர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலை நாட்டுவதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன்.

சாதாரணமாக உலகில் அறிவில் குறைந்தவனை பரம ஸாது என்பர். இத்தகையவனை இங்கு சொல்லவில்லை.

பகவத் பக்தியைப் பெற்று அவனை நேரில் கண்டு அநுபவிக்க ஆர்த்தி பிறந்த தண்டகாரண்ய ரிஷிகள், சபரி, சடாயு போன்றவர்களையும், அக்ரூரர், விதுரர், மாலாகாரர் போன்றவர்களையும்;—பகவானுடைய முக மலர்ச்சிக்காகவே அவனைக் கிட்டி தொண்டு செய்யப்பாரிக்கும் பக்தர்களையும்;–''துடியுகாயதே'' என்று கண்ணனை ஒரு க்ஷணம் காணப்பெறாவிடில், யுக காலம் போல் உணரும் கோபியர் போன்றவர்களையும்; தாமரை மலரினால் அவனை அர்ச்சிக்க ''ஆதிமூலமே'' என்றழைத்த கஜேந்த்ராழ்வானைப் போன்றவர்களையும்—'' எங்கு முளன் கண்ணன்'' என்று உணர்ந்த ப்ரஹ்லாதனை போன்ற மெய்ஞானியரையும் ரக்ஷிப்பதற்காகவே பகவான் அவதரிக்கிறான்.

"பரித்ராணாய ஸாதூனாம்—மேல் சொன்ன ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும். "ரஷிக்கையாவது"–அவர்களுடைய அநிஷ்டத்தைப் போக்கி இஷ்டத்தைச் செய்வது.

ரிஷிகளுக்கு விரோதி இராவணாதிகள். கஜேந்த்ரனுக்கு விரோதி முதலை; சோபியருக்கு விரோதமானது கோபாலர்களுடைய வெறுப்பு. அதைப் போக்கியும், அவர்களுடைய ஸ்த்ரீத்வ அபிமானத்தை அதாவது மமகாரத்தை போக்கியும், தன்னை அநுபவிக்க கொடுத்திருக்கிறான்.

"விநாஸாய ச துஷ்க்ருதாம்"—துஷ்டர்களை அழிக்கும் பொருட்டும். "உம்" என்பதினால் இது முக்கிய பிரயோஜனமன்று; இதை பரமபதத்திலிருந்தே தன் இச்சையினாலே அவன் செய்திருக்கலாம். ஸாது ரக்ஷணம் செய்யும்போது இது தன்னடையே ஏற்படுகிறது, "பிக்ஷாம் அட; காம்ச ஆநய"—"பிச்சைக்குப் போகும்போது என் பசுவைக் கண்டால் ஓட்டிவா" என்பதுபோல. இந்த துஷ்ட விநாஸனம்.

'தர்ம ஸம்ஸ்தாபனம்"—ஸத்யம், தானம் தபஸ் என்கிற ஸாதாரண தர்மங்களை இங்கு சொல்லவில்லை; இவைகளை ஆசார்யர்கள், ஆழ்வார்கள் போன்ற மஹான்கள் அவதரித்து தங்கள் உபதேசத்தினாலும், அநுஷ்டாத்தினாலும் நிலை நிறுத்தி உள்ளனர் ஆதலால், விசேஷ தர்மமான "பக்தி, ப்ரபத்தி"களை ஸ்தாபிப்பதும், "சித்த தர்மமான தன்னைத்" தானே ஸ்தாபிப்பதுமே பகவத் அவதாரப் பிரயோஜனம்.

### பக்தியை ஸ்தாபிக்கும் வழி

சேதனருக்கு தன்னிடம் பக்தியை உண்டாக்க அவனுடைய திருமேனி சௌந்தர்யமே பகவானுக்கு முக்கிய சாதனம், "ரூபௌதார்ய" என்றும் "ஸாக்ஷாத் மந்மத மந்மத:' என்றும் பும்ஸாம் த்ருஷ்டி சித்த அபஹாரிணம்" என்றும் புருஷனையும் பிச்சேற்றும்படியான அழகு படைத்தவன் பகவான். விமுகரான சேதனர் முதலில் அவன் அழகில் ஈடுபட்டு அவனைக் கிட்டுகிறார்கள்; அப்படி கிட்டினவர்களை தன் எளிமை, இனிமை குணங்களினாலும், தன் ஆச்சர்ய செயல்களாலும், தன்னிடம் அன்பு, (பக்தி) உண்டாகச் செய்து அதைப் படிபடியாக பரபக்தி, பரஜ்ஞான, பரம பக்தியாக வளரச் செய்து மோக்ஷத்தையே கொடுக்கிறான். "ஜந்மத்ரய சத்ரு பரஸ்சத பௌநஷவாதியான சிசுபாலன் அகப்படத் திருத்தும் திருமேனி அழகு படைத்தவன் ஈச்வரன்.

"அர்ச்சாவதாரத்திலும்" அவனுடைய அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹத்தில் ஈடுபட்டு, அவனிடம் பக்தியைச் செய்து ஆத்ம ச்ரேயஸ் பெற்றிருக்கிறார்கள் பல மஹான்கள். "என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்கிறார் திருப்பாணாழ்வார். பின்னை உறங்கா வில்லிதாஸர் பெரிய பெருமாளுடைய கண்ணழகில் ஈடுபட்டு, ஸம்ஸாரத்தில் விரக்தி பிறந்து ஓர் உத்தம பாகவத் பக்தரானார்.

இப்படி தன் திருமேனி அழகினாலும் குணங்கள், செயல்களாலும் ஸம்ஸாரி சேதனரைத் திருத்தி, அவர்களுக்குத் தன்னிடம் பக்தியை உண்டாக்குவது பகவத் அவதார பிரயோஜனங்களில் ஒன்று.

"ப்ரபத்தி" என்னும் சரணாகதி தர்மத்தையும் தான் அவதரித்து நிலை நாட்டியிருக்கிறான். இதை ஸ்ரீராமாயணத்தில் பல இடங்களில் காணலாம். தன்னைச் சரணம் பற்றின விபீஷணனை, தன் ஆப்தரான வானராதிகள் ஒரு முகமாகத் தடுத்தபோதிலும், வெகு பாடுபட்டு ஸ்ரீராமன் தன் சரணாகத ரக்ஷகத்வத்தை (புகலளிக்கும் தன்மையை) நன்கு ஸ்தாபித்திருக்கிறான்.

"தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய"

எது மோக்ஷத்திற்கு ஸாதனமோ அதுவே 'தர்மம்" எனப்படும்.

நம் கர்ம, ஞான, பக்தி ப்ரபத்தி எல்லாம் மோக்ஷ ஸாதனமாகாது; அவைகள் நம்மை மோக்ஷத்திற்கு அதிகாரிகளாக ஆக்குபவை அத்தனையே; "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதனம்" எனறும் "ராமோ விக்ரஹவான் தர்ம" என்றும் சொல்லப்படுகிற ஸர்வேச்வரனே மோக்ஷத்திற்கு ஸாதனமான "சித்த தர்மம்". இந்த தர்மமான தன்னை ஸ்தாபிப்பதே அவதாரத்தின் முக்கிய பிரயோஜனமாகும்.

சத்யமில்லை சாஸ்திரம் கடவுளில்லை என்னும் காலங்களில் பகவான் அவதாரம் செய்து தன்னை ஸ்தாபிக்கிறான். "எங்கு முளன் கண்ணன்" என்று ப்ரஹலாதன் சொல்ல, "இங்கு இல்லையெனில் உன்னை வதம் செய்வேன்" என்று இரண்யன் தூணபுடைப்ப அங்கு அப்பொழுதே அவன் வீய சிங்கப்பிரான் தோன்றி 'எங்குமிருக்கும் பரதெய்வமான நாராயணனே தான்' எங்கும் இருக்கும் தன் இருப்பை ஸ்தாபித்திருக்கிறான்'. இதேபோல மற்றும் பல அவதாரங்களிலும் காணலாம். இப்படி பக்தி, ப்ரபத்தி போன்ற தர்மங்களையும், சித்த தர்மமான தன்னையும் ஸ்தாபிப்பதே பகவத் அவதாரங்களுக்கு முக்கிய பிரயோஜனமாகும்.

சாதுக்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களை சிக்ஷிப்பதற்கும் பகவான் அவதரிக்க வேண்டியதில்லை. இருந்தபடியே தன் சங்கல்பத்தினாலேயே (நினைத்த மாத்திரத்திலேயே) இவைகளைச் செய்து தலைக்கட்ட சக்தி பெற்றவன். ஆனால்; "ஒருநாள் காண வாரேயே" என்றும், "காணவாராயென்று கண்ணும் வாயும் துவர்ந்து" என்றும் கதறுகின்ற நம்மாழ்வார் போன்ற மஹான்களுக்கும்,' 'ஒரு பகலாயிரம் ஊழியாலோ' என அவனைக் காணப்பெறாத ஒரு நொடிப் பொழுதை ஆயிரம் கல்ப காலமாக கருதிக் கதறும் கோபியர் போன்றவர்களுக்களுக்காகவும், "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்கிறபடி அவனைக்காணாமல் தரிக்க முடியாத பல பக்தர்களும் தன்னைக் கண்டு தன்னுடன் பேசி, தன்னை தழுவுதற்காகவே அவன் அவதாரம்செய்கிறான். இவையெல்லாம் தன் சங்கல்பத்தினால் ஆகாத காரியமன்றோ.

"அவதார ரஹஸ்ய ஞானமும் அதன் பலனும்".

அர்ஜுன! இப்படி என் அவதாரங்களும் என் செயல்களும் திவ்யம், (அப்ராக்ருதம் ப்ரகிருதியினால் ஆனவையல்ல) என்பதை எவன் அறிகிறானோ, அவன் சரீரத்தை விட்ட பிறகு, மறுபிறவி அடைவதில்லை. (மோக்ஷம் பெறுகிறான்).

**ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத: |**
**த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாம் ஏதி ஸோऽர்ஜுந ||9||**

மே ஜந்மச, மே கர்மச என பிரித்துப்பொருள் கொள்ளவேண்டும். என் அவதாரமும் திவ்யம், அப்படி அவதரித்து நான் செய்யும் செயல்களும் திவ்யம் என்று சொல்லி, தானே அதில் ஈடுபட்டு மோஹிக்கிறான்.

"திவ்யம்"—என் பிறவியும், என் செயல்களும் ப்ரக்ருதியினால் ஆனவைகளல்ல; (முக்குணங்களால் தூண்டப்படுபவையல்ல) அப்ராக்ருதமானவை; உன்னைப்போல கர்மத்தினாலும் என் பிறவியில்லை; என் இச்சையினாலேயே நான் பிறக்கிறேன்; அப்படி நான் பிறந்து செய்யும் செயல்களும் உன் செயலைப்போல முற்பிறவிப் பயனாய் ஏற்படுபவையல்ல. என் இச்சைப்படியே செயல்படுபவன் நான். ரஜஸ் தமஸ் அடியான ஹேய குணங்கள் எனக்கில்லை. "பரமஸத்வ ஸமாச்ரய க: அதாவது சுத்த ஸத்வமயமானது அவன் திருமேனியும் அவன் அவதார சேஷ்டிதங்களும்.

"யோ வேத்தி தத்வத" எவன் ஒருவன் உண்மையாக, ஐயம் திரிபற மேலே சொன்னபடி என்னை தெரிந்துக் கொள்கிறானோ,

"த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி" ஜ்ஞானம் பிறந்தவன் இந்த சரீரத்தைவிட்ட பிறகு, வேறு பிறவி எடுப்பதில்லை.

"மாம் ஏதி"-என்னையே அடைகிறான்.

இப்படி தன் அவதாரமும் தன் செயல்களும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுடைய ப்ரக்ருதி சம்பந்தத்தினால் ஆனவையல்ல; தன் இச்சையினாலேயே நடைபெறுகின்றன என்கிற உண்மையை அறிகிறவனுக்கு சம்சார பந்தம் விலகி மோக்ஷம் சித்திக்கும் என்பதை பல ச்ருதியாக பகவானே இந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கிறான்.

இந்த உண்மையை அறியாமல் அத்வைதிகள் பொருள் கூறுகிறபடி பகவத் அவதாரங்களும் செயல்களும் மித்யை, அவன் நம்மைப் போல் கர்மத்தினால் ப்ரக்ருதி சம்பந்தத்தினால் பிறக்கிறான் என்று சொல்வது சம்சார பந்தத்திலேயே கட்டுண்டு விநாசத்தை அடைவிக்கும் என்பது சொல்லாமலே தேறும்.

இந்த பகவத் அவதார ஜ்ஞானம் பெற்றவனுக்கு பக்தி செய்யத் தடையான பாபங்கள் போய்விடுகின்றன; பிறகு அவன் பக்தியைச் செய்து நன்மை பெறுகிறான் என்பதே கருத்து.

நாம் பகவானை, கண்களால் சேவித்தாலும், அவன் சரித்திரத்தையும் குணங்களையும் வாயினால் கூறி, மனத்தினால் சிந்தித்தாலும், நம பாபங்கள் போய நன்மை பெறுகிறோம் என்கிறது சாஸ்திரம். க்ருஷ்ணன் யசோதையின் குறுங்கயிற்றினால் தன் இச்சையினாலேயே கட்டுண்டான் என்கிற உண்மையை, அறிந்தால், நம் சம்சாரக் கட்டு, தானே அவிழ்ந்து விடும்; பிறர் குற்றங்களை நாம் சொன்னால் நமக்கு பாபமே உண்டாகிறது.

உலகில் நாம் பிறர் குற்றங்களைச் சொல்லி சந்தோஷமும் படுகிறோம்; ஆனால், க்ருஷ்ணன் வெண்ணெ திருடினான், பெண்களைக் கண்டு கண்டான், உரலில் கட்டுண்டான் என்று பகவானுடைய செயல்களில் எதைச் சொன்னாலும், நினைத்தாலும் நம் பாபம் அற்றுவிடுகிறது என்கிறது சாஸ்திரம்.

"த்யக்த்வா தேஹம் புநர் ஜென்ம நைதி"—இந்த ஜன்மாவிலேயே இந்த சரீரத்தை விட்டு விடுகிறான்; மறுபிறவி அடைவதில்லை இந்த அவதார ரஹஸ்ய ஜ்ஞானம் பெற்றவன் என்கிறான். இவன் ஸஞ்சித கர்மா, ப்ராரப்த கர்மா இரண்டும் போய் மோக்ஷம் பெறுகிறான்.

"ஸஞ்சித கர்மா"—நாம் அநேக பிறவிகளில் நல்லதும் தீயதும் பல செய்து, அதிகமான புண்ய பாபங்களைச் சேர்த்து வைத்திருக் கிறோம்; இதுதான் ஸஞ்சித கர்மா. அவை ஒன்றின் பின் ஒன்றாக நமக்குப் பலனைக்கொடுத்து வருகிறது. ஏதோ ஒரு பிறவி யில் செய்த கர்ம பலனை, இப்பிறவியில் அனுபவித்து வருகிறோம்; பயனளித்து வரும் இதுதான் "ப்ராரப்த கர்மா"

மோக்ஷத்தை விரும்பி, பகவத் பக்தி செய்பவனுக்கு, ஸஞ்சித கர்மா எல்லாம் போய்விடுகிறது. அவன் அனுபவித்து வரும் ப்ராரப்த கர்மா முழுமையும் அவன் அனுபவித்து தீர்ந்த உடன்தான் அவனுக்கு மோக்ஷம். இது பல பிறவி எடுத்து அறவேண்டியிருக் கலாம். ஆனால் அவதார ரஹஸ்ய உண்மையை அறிந்தவனுக்கு ஸஞ் சித கர்மா, ப்ராப்த கர்மா இரண்டும் தொலையப் பெற்று, இப்பிறவி முடிவிலேயே மோக்ஷம் கிட்டுகிறது என்கிறான் கண்ணன்.

தசரதன் ஸ்ரீராமனை பகவான் என்று அறியவில்லை; தன்னைப் போல ப்ரக்ருதி சம்பந்தத்தால் உண்டான தன் மகன் என்றே அறிந் தான். "அஹம் வேத்மி மஹாத்மானம்" என்று விச்வாமித்ரன் சொல்லக் கேட்டும், தாடகா தாடகேய நிரஸனம்செய்த அவன் வீரச் செயல்களை அறிந்தும், ராமனை பரதெய்வமாக தெரிந்து கொள்ளவில்லை. ஆதலால் இவனுக்கு மோக்ஷமில்லை.

ததிபாண்டன் என்பான் ஒருவன்; இவன் தயிர் விற்று ஜீவிக் கிறவன். தாய் யசோதையின் தண்டனைக்குப் பயந்து, க்ருஷ்ணன் இவனிடம் வந்து அடைக்கலம்புகுந்திருக்கும் சமயத்திலும், கண்ணன் பரதெய்வம், இவன் யசோதையினிடம் பயந்தாற்போல் நம்மிடம் வந்து ஒளிந்திருக்கிறான். இவன் தன் இச்சையினால் இப் படிச் செய்பவை, இவன் லீலைகள் விளையாடல்கள் என்பதை நன்கு அறிந்தான்; கண்ணனின் அவதார ரஹஸ்யஜ்ஞானம் பெற்ற ததி பாண்டன் அப்பிறவியிலேயே மோக்ஷம் பெற்றான்.

**வீதராகபயக்ரோதா மந்மயா மாமுபாச்ரிதா: |**
**பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவம் ஆகதா: ||10||**

எவன் என் அவதாரத்தின் உண்மையை அறிகிறானோ, அவ னுக்குப் பாபங்கள் ஒழிகின்றன; ராகத்வேஷமும், காமக்ரோதங் களும் அறுகின்றன. ஸாம்சாரிக விஷயத்தில் வைராக்யம் உண்டாகி றது; என்னிடமே மனத்தை ஊன்றி வைத்திருக்கிறான்; என் தர்மங் களில் சிலவற்றைப் பெற்று மோக்ஷமடைகிறான்.

"ஜ்ஞானம்"—அவதார ரஹஸ்ய ஞானம் என்பது பொருள். அந்த ஜ்ஞானம் பெறுவது ஒரு தபஸ். நமக்கு பலவித பாபங்கள் உள்ளன; கர்மாநுஷ்டானம் செய்யத் தடையான பாபம்; பகவத் ஜ்ஞானம் பெற வொட்டாமல் தடுக்கும் பாபம், பக்திக்குத் தடையான பாபம்; பகவத் ப்ராப்திக்கு (மோக்ஷத்திற்கு) தடையான பாபம் என நான்குவித பாபங்களையும் இந்த ஜ்ஞான தபஸானது போக்குகிறது. அவை போனால், நமக்கு சப்தாதி விஷயங்களில் வைராக்யம் உண்டாகிறது; பகவத் பக்தி செய்து மோக்ஷம் பெறுகிறோம்.

"மத்பயா"—ஈச்வரனாகி விடுகிறான் என்றும் "மத்பாவம்" ஈச்வர பாவம் வந்து விடுகிறது என்றும் அத்வைதிகள் இதற்குப் பொருள் கூறுகின்றனர். இது பொருந்தாத பொருள்.

"மன்மயா"—என்னிடம் ஊன்றிய மனத்துடன் என்னை த்யானம் செய்து; "மத்பாவம்":—சில தர்மங்களில் எனது ஸாம்யத்தை (தன்மையைப் பெறுகிறான் என்பதே விசிஷ்டாத்வைதிகள் கூறும் பொருள். அதாவது மோக்ஷ தசையில் ஜீவனுக்கு அபஹதபாப்மத்வம் (தோஷம் அற்று இருத்தல்; தோஷங்களை நீக்குதல்) ஞான விகாஸம், முதலான தர்மங்கள் உண்டாகின்றன என்பது விசிஷ்டாத்வைத மதக் கொள்கை. அவைகளைப் பெறுகிறான் என்பதே மத்பாவம் என்பதற்குப் பொருள். இதை ஸ்ரீ பாஷ்யகாரர் பல ஆதாரங்களைக் கொண்டு அழகாக நிரூபித்திருக்கிறார்.

1. முன் ச்லோகத்தில் "மாம்ஏதி" என்னை அடைகிறான்; அடைபவன் வேறு, அடையப்படுகிறவன் வேறு; ஆதலால் இங்கே ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறான் என்று பொருள் கூறுவது பொருந்ாது.

2. இன்னும் கீதையில் மம ஸாதர்ம்யம் ஆகத:" ஜீவன் முக்தி தசையில் சில தர்மங்களில் எனக்கு சமமான நிலையை அடைகிறான் என்று அருளியிருக்கிறான். ஸாம்யம், ஸமம் என்பது இரண்டு பொருள்கள் உள்ள இடத்திலேயே (இதற்கு அது சமம்) சொல்ல முடியும்; ஒன்றாகி விடுகிறான் என்பது பொருளல்ல.

3. வேதமும், "ப்ரஹ்மவித் ஆப்னோதி பரம்"—'பரம்'-ஈச்வரனை 'ப்ரஹ்மவித்'-பிரம்மத்தை அறிபவர்கள்; 'ஆப்னோதி'-பிரம்மத்தை அடைகிறார்கள் என்று சொல்லியிருக்கிறதே ஒழிய ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறார்கள் என்று சொல்லவில்லையே.

4. இன்னும் "பரமம் ஸாம்யம் உபைதி" ப்ரஹ்மத்தோடு ஸாம்யத்தையே தெளிவாகச் சொல்லுகிறது இந்த ச்ருதி.

இப்படி பல கீதா ச்லோகங்களைக் கொண்டும், வேத வாக்யங்களைக் கொண்டும் ஜீவ பர ஸாம்யமே உண்மை, ஐக்கியம் உண்மையன்று என்பதை ஸ்ரீ பாஷ்யகாரர் தெளிவாக நிரூபித்திருக்கிறார். ஆதலால் இந்த ச்லோகத்திற்குப் ஸாம்யப் பொருளையே சொல்ல வேண்டும். அது எப்படிச் சொல்லக்கூடும் எனில் வேதத்திலும், புராணங்களிலும், ஆழ்வார் பாசுரங்களிலும் பகவானுடைய முகம் சந்திரன், கண் தாமரை என்று இப்படி முற்றுவமையாக பல வாக்யங்கள் உள்ளன. அவைகளுக்கு பகவானுடைய முகம் சந்திரன் போலக் குளிர்ந்து ஒளிர்கிறது; கண் தாமரைப் பூவைப்போல சிவந்து அழகாயிருக்கிறது என்றே பொருள் கொள்கிறோம். அதே போல இங்கும் மம்மயா, மத்பாவம் என்பதற்கு "என்னைப்போல" என்று ஸாம்யத்தையே பொருளாகக் கொள்ளவேண்டும்; ஐக்யம் அல்லது ஒன்றாகி விடுகிறது என்று கூறுதல் கூடாது.

**யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் |**
**மம வர்த்மாநுவர்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ||11||**

எவர் எவ்வாறு என்னை ஆச்ரயிக்கிறார்களோ, அவ்வாறே நான் அவர்களுக்கு பலனளிக்கிறேன். பார்த்தா! மனிதர்கள் எவ்வகையினாலும் என் வழியையே அனுசரிக்கிறார்கள்.

"எவர் எந்தப் பலனை விரும்பி என்னை வழிபடுகிறார்களோ, அந்தப் பலனை அவர்களுக்கு நான் அளிக்கிறேன். தாங்கள் விரும்புபவையெல்லாம் என் ஸ்வபாவத்தை அறிந்து பெறுகிறார்கள் என்பதே, மற்றவர்கள் சொல்லும் பொருள். ஆனால், நம் பாஷ்யக்காரர் இந்த ச்லோகம் அர்ச்சாவதாரத்தையே (கோயில்களிலும் வீடுகளிலும் விக்ரஹங்களில் நாம் ஆராதிக்கும் பகவானையே) சொல்லுகிறது என்று பொருள் கூறியிருக்கிறார். விபவாவதாரமான ராம க்ருஷ்ணாதி அவதாரங்கள் எப்படி உண்மையோ அதேபோல அர்ச்சாவதாரமும் உண்மை. திவ்யம், என்பதையே இதில் சொல்கிறான். அந்தப் பெயரில் எவர் என்னை எந்த உருவத்தில், அர்ச்சையில் என்னை ஆராதித்து வணங்குகிறார்களோ, அந்த உருவத்தில் நான் பூர்ணமாக என் எல்லா குணங்களுடனும், ஸர்வ சக்தியுடனும் விளங்குகிறேன். அதனால் என்னுடைய சக்தி முதலிய குணங்களையெல்லாம் அர்ச்சையில் மனிதர்கள் அனுபவிக்கிறார்கள் என்பதே சரியான பொருள்.

கண்ணன் கர்மயோகம் ஞானயோகம் இவைகளைச் சொல்லி வரும்போது நடுவில் தன் அவதார ரஹஸ்யத்தைச் சொல்லி வருகிறான். ராம க்ருஷ்ணாதி அவதாரங்களை என் இச்சையினாலேயே எடுக்

கிறேன் என்றான் கீழே. ஆனால் என் பக்தர்கள் என்னை எந்த விக்ரஹத்தில் அர்ச்சிக்க விரும்புகிறார்களோ, அந்த விக்ரஹத்திலும் நான் பூர்ணமாக அப்ராக்ருத திவ்ய மங்கள திருமேனியோடும், அறிவாற்றலோடும் நற்குணங்களோடும் தோன்றுகிறேன் ; என்கிறான் இதில்.

"பஜனம் என்றால் என்ன ?" பகவானை உகப்பிக்க கூடிய செயல் எதுவானாலும் அதுவே பஜனம் எனப்படும்.

"பகவத் பக்தி" என்பது பகவானையும் அவன் வடிவழகு, ஆத்ம குணங்களையும் இடைவிடாது தைலதாரை போல் சிந்திக்கிற சிந்தனமே.

"அவதாரம்" உயர்ந்தவன் தாழவந்து பிறப்பதே அவதாரம்.

பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என்கிற பகவானுக்குள்ள ஐந்து நிலைகளில், அர்ச்சையிலேயே, நாம் அவனைக கண்ணால் கண்டு அனுபவித்து அர்ச்சனை, வழிபாடு, பக்தி இவைகளைச் செய்யமுடியும்.

"பஜாம் யஹம்" அவர்கள் எந்த உருவத்தில் என்னை அர்ச்சிக்கிறார்களோ, அந்த உருவத்தில் நான் அவர்களுக்கு என்னைக் காட்டுகிறேன். அந்த வடிவத்தில் என்னை அனுபவிக்கச் செய்கிறேன். ஒரு எஜமானன் தன் வேலையாளிடம் இன் முகம்காட்டி, இனிய சொல் சொல்வதே அந்த வேலையாளுக்குப் ப்ரீதியாகவிருக்கும். அதேபோல ஸர்வ ஸ்வாமியான பகவான் அர்ச்சையில் நாம் விரும்புகிறபடி தன்னை நமக்குக் காட்டுகிறான்

"மம வர்த்மானுவர்த்தந்தே" என் ஸ்வபாவங்களுடன், அதாவது என் எளிமை, இனிமை போன்ற நீர்மைக் குணங்களுடனும், ஜ்ஞான, பல, ஐச்வர்ய, வீர்ய, சக்தி தேஜஸ்ஸுடனும், அர்ச்சையில் நான் எழுந்தருளியிருந்து அவர்கள் என்னை அனுபவிக்கக் கொடுக்கிறேன்.

'தமருகந்தது எவ்உருவம் அவ்வுருவம்தானே,

தமருகந்ததெப் பேர் மற்றப் பேர்'

என்கிற பேயாழ்வாரின் பாசுரப்படி அடியார்கள் விரும்பும் உருவத்தில எழுந்தருளியிருந்து, அவர்கள் இடும் ஆஸனம், ஒப்பனை, போன்ற உபசாரங்களை உகப்புடன் ஏற்றுக்கொள்கிறான். தன்னை

அனுதரிப்பவர்களையும் தான் ஆதரித்து நிற்குமிடம் அர்ச்சை. ஒரு பக்தர் தான் ஆராதிக்கும் க்ருஷ்ண விக்ரஹத்திற்கு ஒரு பொன்னாலான சதங்கை பண்ணி சாத்தி, 'சதங்கை அழகியார்' என்கிற திருநாமமும் அவனுக்கு சூட்டியிருந்தார். அந்த க்ருஷ்ணன் பக்கத்து அகத்திலிருந்த மற்றொரு பக்தர் கனவில் தோன்றி, சதங்கை அழகியார் என்னும் அத்திரு நாமத்தையே உகந்து சொல்லிக்கொண்டு, தனக்கு நாவல்பழம் வேணுமென்று கேட்டதாக, ஒரு சரிதம் உண்டு. இப்படி பக்தர்களிட்ட உருவத்தையும், பெயரையுமே அவன் உகந்து ஏற்றுக்கொள்கிறான்.

## அவதாரிகை

கீழ் 2, 3 அத்தியாயங்களில் கண்ணன் ஜ்ஞான யோகத்தைவிட கர்மயோகமே சிறந்தது. ஆதலால் அர்ஜுன! நீ உன் வர்ணாச்ரம தர்மமான போரையே, செய்வாயாக என்று சொன்னான். இந்த நான்காம் அத்யாயத்தின் முதலில், "இந்த கர்மயோகம், பழமையானது, நான் இதை முன்னமேயே சூரியனுக்குச் சொல்லி, பரம்பரையாக வந்திருந்து, இப்போது மறைந்திருக்கிறது அதையே நான் உனக்குச் சொன்னேன்" என்றான்.

"சரீரம் என்பது தோஷமுள்ளது; ப்ரக்ருதியினாலானது; எல்லோருடைய தோஷத்தையும் போக்கும் உனக்கு, இப்படி ஹேயமான சரீரம் எப்படிக்கூடும்?" என்று அர்ஜுனன் கேட்க "அர்ஜுன! உன் உடல் கர்மத்தினால் உண்டாகிறது; என் சரீரமோ என் இச்சையினாலேயே உண்டாகிறது; தோஷமேயில்லாதது; ப்ரக்ருதியினால் (பஞ்ச பூதங்களினால்) ஆனதல்ல; அப்ராக்ருதம் என்பதை 'ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய என்பதினால் சொல்லி, 'ஸம்பவாமி ஆத்ம மாயயா" என் இச்சையினாலேயே நான் பிறக்கிறேன் என்று பதில் அளிக்கிறான்.

பிறகு, அர்ஜுனன், "க்ருஷ்ணா! நீ ஸத்ய ஸங்கல்பனாயிற்றே, நினைத்ததை இருந்த இடத்திலிருந்தே செய்யவல்லவனாயிற்றே! நீ எதற்காகப் பிறக்கிறாய், எப்போது பிறக்கிறாய் என்று கேட்க, பகவான், தர்மம் குறைந்து அதர்மம் மேலோங்கும் பொழுதெல்லாம் நான் என் இச்சையினாலேயே, அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹத்துடனும், என் ஜ்ஞான, சக்தி, மற்ற எல்லா கல்யாண குணங்களுடனும் அவதரிக்கிறேன். ஸாதுக்களை ரக்ஷிக்கும் பொருட்டும், துஷ்டர்களை அழிக்கும் பொருட்டும், தர்மங்களை நிலைநிறுத்துவதற்காகவும் அவதரிக்கிறேன் என்று தன் அவதார காலத்தையும், அவதாரப் பயன்களையும் சொன்னான். இதைச் சொன்ன கண்ணன் தன் அவதாரங்களையும் செயல்களையும் நினைத்து மகிழ்ச்சியில் ஆழ்கிறான்

அர்ஜுனா! எப்படி என் அவதாரங்களும் என் சேஷ்டிதங்களும் திவ்யம்; அதாவது கர்ம வசமாக வந்ததல்ல, தமோ, ரஜோ குணங்களையுடைய ப்ரக்ருதியினால் ஆனதல்ல, என் இச்சையினாலேயே என் ஞான சக்தியாதி கல்யாண குணங்களுடன் உண்டானவை என்கிற உண்மையை எவன் அறிகிறானோ அவன் சம்சார பந்தம் அற்று இப்பிறவியிலேயே மோக்ஷம் பெறுகிறான் என்று தன் அவதார ரஹஸ்யஜ்ஞானத்திற்குப் பலனையும் கூறினான்

அதற்குமேல், "அர்ஜுனா! எப்படி என் ராம க்ருஷ்ணாதி, விபவ அவதாரங்கள் திவ்யமோ, அதேபோல என் அர்ச்சாவதாரமும் திவ்யம். என் பக்தர்கள் எந்த உருவத்தில், எந்த விக்ரஹத்தில் என்னை அன்புடன் வணங்கி ஆராதிக்கிறார்களோ (பூஜிக்கிறார்களோ), அவைகளில் நான் அப்ராக்ருதமாய், என் ஞான சக்தி பலம், வீர்யம், தேஜஸ்ஸுடனும், வடிவழகு, எளிமை, இனிமை போன்ற நீர்மை குணங்களுடனும் முழுதுமாக வந்து பிறக்கிறேன் என்பதைச் சொல்லி முடித்தான்.

இதற்குமேல் இவ்வளவு சுலபமாயிருக்கும் உன்னை ஏன் எல்லோரும் வணங்கி பூசித்து, கர்ம யோகத்தைச் செய்து மோக்ஷம் பெறுகிறதில்லை என்பதற்கு இந்த 12-ம் ச்லோகத்தில் பதில் சொல்கிறான்.

**காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: |**
**க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா ||12||**

கர்மங்களின் பலனை விரும்பி இந்த உலகில் உள்ள தேவதைகளை பலர் பூஜிக்கிறார்கள். ஏனெனில், அவர்கள் விரும்பும் பலன்கள் விரைவில் கிடைக்கின்றன.

உலகிலுள்ள மனிதருக்கு சீக்கிரம் பலன் கிடைக்கக்கூடிய செயல்களிலேயே விருப்பம் அதிகம். ஆகலால் உலகத்தவர் மற்ற இந்திராதி தேவதைகளைக் குறித்து அர்ச்சனை, யக்ஞம், யாகம் முதலியவைகளைச் செய்கிறார்கள்; அத்தேவதைகள் அவர்கள் விரும்பும் செல்வம், புத்திராதிகளைச் சீக்கிரமே கொடுக்கிறார்கள். ஆனால் அப்பலன்கள் அல்பமாயும் அஸ்திரமாயுமிருப்பவை. சீக்கிரமே அழிந்துவிடும்; எவரும் என் மேன்மையை அறிந்து அழியாச் செல்வமான மோக்ஷத்தை விரும்பி என்னை ஆராதிப்பதில்லை.

அவரவர் பூர்வ ஜன்ம பாப வாசனையே அவர்களை இப்படிச் செய்யத் தூண்டுகிறது. பாப மற்று மோக்ஷ பலனை விரும்பி என்னையே ஆராதிப்பவர் கிடைப்பது அரிது.

பொதுவாக நமக்கு நற்செயல்களைச் செய்வதில் ருசியில்லை; ஆனால் அவைகளின் பலனில் மாத்திரம் ஆசை உண்டு. கெட்ட செயல்களை ஆசையோடு செய்கிறோம்; அவைகளின் பலன் மாத்திரம் நமக்கு வரக்கூடாது என்று இச்சிக்கிறோம். ஆனால் நாம் விரும்பினாலும், விரும்பாவிடினும், நாம் செய்யும் கர்ம பலன் நமக்கு வந்தே தீரும். அவைகளை நாம் அனுபவித்தேயாக வேண்டும்.

**சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச: ।**
**தஸ்ய கர்த்தாரம் அபி மாம் வித்தி அகர்த்தாரம் அவ்யயம் ||13||**

அவரவர் கர்மாநுகுணமாக நான்குவித வருணங்கள் என்னால் படைக்கப்பட்டிருக்கின்றன. அந்த ச்ருஷ்டிக்கு நான் கர்த்தாவே யன்றி, அந்தந்த மாறுதலுக்கு நான் கர்த்தாயில்லை; நான் தோஷ மற்றவன் என்பதை நீ தெரிந்துக்கொள்.

எவன் ஒருவன் தன்னை இந்த உலகின் ச்ருஷ்டிக்கு கர்த்தா வாகவும், அகர்த்தாவாகவும் (கர்த்தாயில்லை) என்றும் அறிகிறானோ அவன் என்னைக் குறித்து கர்மாக்களைச் செய்து ஆத்ம ச்ரேயஸ் பெறுகிறான் என்கிறான். ஸர்வேச்வரனை உள்ளபடி அறிந்தால், நம் பாபம் போய்விடுகிறது. அப்போது நாம் பகவதாராதன ரூபமான கர்மாக்களைச் செய்து மோக்ஷம் பெறலாம்.

''பகவான் ஒருவனையே கர்த்தா, என்றும் அகர்த்தா வென்றும் அறிவது எப்படிக் கூடும்? இரண்டும் மாறுபட்டிருக்கிறதே? ஒரு சேணியனை துணிக்கு கர்த்தா என்னலாமே ஒழிய அவனை அதற்கு அகர்த்தா (கர்த்தாயில்லை) என்று எப்படிச் சொல்ல முடியும். இதற்கு பலர் பலவிதமாகப் பொருள் கூறியுள்ளனர்.

''சங்கரர்'' விவகார தசையில் பகவானைக் கர்த்தா என்கிறோம்; உண்மையில் பார்த்தால், அவன் அகர்த்தா தான். கர்த்தாயில்லை; ஏனெனில், ப்ரஹ்மத்திற்கு குணமில்லை; செயலுமில்லை என்பது அவர் கொள்கை.

சீதா பிராட்டி, ''ஸ்ரீராமன் லோகத்திற்கெல்லாம் நாதன். நான் அவன் கையைப் பிடித்ததனால் எனக்கும் நாதன். ஆனால் அவன் அநாதன், நாதனற்றவன் என்று சொல்வதுபோல் சிலர் உலகுக்கெல்லாம் அவன் கர்த்தா, அவனுக்கு கர்த்தாயில்லை என்றும் பொருள் கூறியுள்ளனர்.

**ஸ்ரீ பாஷ்யகாரர் :—** நாம் பூமியை செப்பனிட்டு, ஒரு குழியில் அவரை விதையும், மற்றொரு குழியில் துவரை விதையும் நடுகிறோம்;

நன்னாரி[illegible]க்கிறோம்; அவை முளைக்கின்றன. அவரை விதை அவரைச் செடியாகவும், துவரை விதை துவரைச் செடியாகவும் முளைக்கின்றன. இதற்கு கர்த்தா யார்? நிலம், நீர் இவை சம்பந்தம் ஏற்படும் வரையில நாம் கர்த்தா; ஆனால் அவை அவரைச் செடியாகவும், துவரைச் செடியாகவும் முளைப்பதற்கு நாம் கர்த்தா இல்லை; (காரணமில்லை).

அதே போல ஜீவனுக்கு ப்ரக்ருதி சம்பந்தம் உண்டு பண்ணும் வரையில் பகவான் கர்த்தா. ஆனால் தேவனாகவும் மனிதனாகவும், பசு பக்ஷிகளாகவும், ஸ்தாவரங்களாகவும் பிறப்பதற்கோ, ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்திரனாவதற்கும் தனவந்தனாகவும், தரித்திரனாகவும், ஸுகியாகவும், துக்கியாகவும் இருப்பதற்கும் பகவான் காரணமில்லை. அவரவர் பூர்வ ஜன்ம கர்ம பலன்களே காரணம். இப்படி நாம் தெரிந்துகொண்டால் நம் பாபம் போய்விடுகிறது.

ஆனால் நாம் என்ன நினைக்கிறோமெனில் சுகம் வந்தால் நம ஸாமர்த்யத்தினால் வந்ததாகவும், துக்கம் வந்தால் பகவானால் உண்டாவதாகவும் நினைத்து, "இந்த தெய்வத்திற்கு கண்ணில்லை" என்று ஈச்வரனை நிந்திக்கவும் செய்கிறோம். விவேகிகள் சுகம் துக்கம் எது வந்தாலும் நம் கர்ம பலன் என நினைத்து சாந்தமாயிருப்பர்.

**ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா !**
**இதி மாம் யோऽபிஜா நாதி கர்மபிர் ந ஸ பத்யதே ॥ 14 ॥**

படைப்பு முதலான செயல்கள் என்னைக் கட்டுப்படுத்துவதில்லை. ஏனெனில் இந்த விவித, விசித்திர ச்ருஷ்டியில் நான் ஒரு பலனையும் விரும்புவதில்லை; இப்படி யாவனொருவன் என்னை அறிகிறானோ; அவன் கர்மயோகம் செய்யத் தடையான பாபங்களிலிருந்து விடுபடுகிறான்.

கர்மா என்பது செயல்; "அது புண்ய செயலாகவுமாம்; பாபச் செயலாகவுமாம். எந்தச் செயலும் என்னைக் கட்டுப்படுத்துவதில்லை; ஏனெனில் மேலே சொன்ன வேறுபாடுள்ள படைப்பில் எனக்குச் சம்பந்தம் இல்லையன்றோ! அவரவர்களின் புண்ய பாபமே அதற்குக் காரணம்; நான் அவாப்த சமஸ்த காமன்; எல்லாம் நிறைந்தவன். எனக்குத் தேவையானது ஒன்றுமில்லை; இந்த ஜகத் ச்ருஷ்டியைச் செய்து நான் அடையவேண்டிய பலன் ஒன்றுமில்லை" என்கிறான் கண்ணன்.

இப்படி உள்ளபடி எவன் ஒருவன் என்னை அறிகிருனோ, அவன் கர்மயோகம் செய்யத் தடையான பாபமற்று, கர்மயோகத்தை பூர்த்தியாகச் செய்து ஆத்ம ச்ரேயஸ் பெறுகிருன்.

**ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி: |**
**குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் || 15 ||**

மேலே சொன்னபடி என்னை அறிந்து பாபம் தொலையப் பெற்று, மோக்ஷத்தில் இச்சையுள்ள முன்னேர்களால், நான் உனக்குச் சொன்ன கர்மயோகம் செய்யப்பட்டிருக்கிறது.

என்றல் ஏற்கனவே சூரியனுக்கு உபதேசிக்கப்பட்டு, பரம்பரையாக வந்து கொண்டிருந்த கர்மயோகத்தை, பல அரசர்களும், ரிஷிகளும், இன்னும் பல மஹான்களும் மோக்ஷத்தை விரும்பிச்செய்து ஆத்ம நன்மை பெற்றிருக்கிருர்கள். ஆதலால், அர்ஜுன! நீயும் என்னை உள்ளபடி அறிந்து பாபம் தொலையப்பெற்று உனக்குரிய போரை, பயனில் இச்சையில்லாமல் செய்து ஆத்ம நன்மை அடைவாயாக,

**கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: |**
**தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத்||16||**

கர்மா என்றல் என்ன? அகர்மா என்றல் என்ன? மோக்ஷம் விரும்பி செய்யப்படும் கர்மா எவ்விதமானது என்பவைகளை ஞானவான்களும் சரியாக அறிகிறதில்லை. இப்படிப்பட்ட ஞானமடங்கிய கர்மயோகத்தை, ஸர்வேச்வரனை நானே உனக்கு விரிவாகச் சொல்கிறேன். அதை நீ கவனத்துடன் கேட்டு அறிந்து செய்வாயாகில் நீ சம்சார பந்தத்திலிருந்து விடுபடுவாய்.

இங்கே "கர்மா" என்றல் மூன்றும் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட கர்ம யோகம். "அகர்மா" என்றல்; அந்த கர்மயோகத்தில் அடங்கியுள்ள ஞானம்; ஆத்ம யாதாத்ம்ய ஞானம் என்பதே பொருள்.

இரண்டாம் அத்தியாயத்தின் முதலில் ஆத்மா வேறு, சரீரம் வேறு, ஆத்மா நித்யன், சரீரம் அநித்யம் என்ற அறிவோடு, அவனவனுக்குள்ள வர்ணச்ரம தர்மத்திற்குச் சேர செய்துவரும் செயல் "கர்மா" என்பதை பகவான் சொன்னன்.

அதன் பிறகு ஆத்மாவின் நித்யத்வம், ஞானத்வம் முதலான ஆறு குணங்களுடன் அதை அறிந்து (ஆத்ம யாதாத்ம்ய ஞானத்

துடன்) பயனில் இச்சையில்லாமல், பகவான் உகப்புக்காக அவரவர் கர்மாநுஷ்டானத்தைச் செய்வது "கர்மயோகம்" என்றான்.

மூன்றும் அத்யாயம் முதல் சொல்லி வரும் கர்மயோகம் வேறு. பகவத் சரீரபூத: ஜீவ: ஜீவன் பகவானுக்கு உடல்.

தன் உடலைக் கொண்டே பகவானே எல்லாச் செயல்களையும் செய்விக்கிறான், நான் செய்யவில்லை என்கிற கர்த்ருத்வ த்யாகத்துட னும், பலத்யாகம், மமதா த்யாகத்துடனும் தன் வர்ணாச்ரமத்திற்குச் சேரச் செய்யும் செயல், "கர்மயோகம்". இதிலேயே ஜ்ஞானயோகம் அடங்கியுள்ளது. தனித்து ஜ்ஞானயோகம் செய்யவேண்டியதில்லை என்பதை கண்ணன் சொன்னான்.

இந்த ச்லோகத்தில் "கர்மா" என்பதற்கு கடைசியாக மூன்றும் அத்யாயத்தில் சொல்லப்பட்ட "கர்மயோகம்" என்பதே பொருள். அதில் அடங்கியுள்ள "ஜ்ஞான பாகமே" "அகர்மா" எனப்படுகிறது. இவைகளை ஞானியும் உள்ளபடி அறிகிறதில்லை என்கிறான். ஸர்வேச் வரனான நான் அதை உனக்குத் தெளிவாகச் சொல்கிறேன். அதைக் கேட்டு அதன்படி நீ செய்வாயாக' என்கிறான்.

அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தையோ, காயத்ரி போன்ற மந்திரங் களையோ ஒருவன் ஜபிக்கும்போது, அதனால் சொல்லப்படும் நாரா யணனை மனத்தில் த்யானம் செய்து கொண்டே மந்திரத்தை உச்ச ரிக்க வேண்டும். "இந்த த்யான பாகமே முக்கியமானது"

அதே போல நாம் பகவத் ஆராதனமோ, (பூஜை), யஜ்ஞமோ, அர்ச்சனையோ செய்யும்போது, இந்த ஜீவன் பகவானுக்குச் சரீரப் பொருள், அவனுக்கு சேஷபூதன், (அடிமை), பகவத் ருசியில்லாத எனக்கு ருசியை உண்டாக்கி, அடிமையான என்னைக்கொண்டு, தானே இவைகளைச் செய்துகொள்கிறான். அந்த தொண்டை (கைங்கர்யத்தை) பெற்று உகப்பவனும் அவனே என்கிற எண்ணத் தோடு செய்யவேண்டும்.

**கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யஞ்ச விகர்மண: |**
**அகர்மணச்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி:| || 17 ||**

ஏன் எல்லாரும் இந்த கர்ம யோகத்தை அறிந்து செய்வதில்லை?

"கர்ம", "அகர்ம" "விகர்ம" என மூன்று. இம்மூன்றிலும் அறியவேண்டியவை பல உண்டு. அவைகளை அறிந்து மோக்ஷத்தில் இச்சை பிறந்து கர்மயோகம் செய்வது கஷ்டம்.

"கர்ம" என்றால் மூன்றும் அத்யாயத்தில் சொல்லப்பட்ட கர்ம யோகம்.

"அகர்ம" என்பது அதில் அடங்கிய ஞானபாகம்.

"விகர்ம" என்றால் அவனவனுக்குரிய நித்ய நைமித்ய கர்மாக்கள்.

இவை மூன்றையும் ஒருவன் சரியாக அறியவேண்டும். 'இது என்ன ப்ரஹ்ம வித்யையா' என்பர் உலகில் பலர், கீதை "ப்ரஹ்ம வித்யைதான்". இதன் பொருளை சரிவர அறிவது கஷ்டம்.

"விகர்மா" : சாஸ்திரத்தில் சொல்லியுள்ள படி தன் வர்ணாச்ரமத் திற்குச் சேர "விகர்மாவை"– நித்ய நைமித்ய கர்மாவை, சரிவர கற்று உணாதல் வேண்டும் அவைகளை விடாமல் வெகு காலம் செய்துவர வேண்டும். அப்படிச் செய்து வந்தால், ராகத்வேஷம் அற்று, சித்த சுத்தி உண்டாகும்.

"அகர்ம" இப்படி ராகத்வேஷம் அற்று, சித்த சுத்தி பெற்ற வனே ஆத்ம யாதாத்ம்ய ஞானத்தை, அகர்மாவை பெறமுடியும்.

"கர்ம" இப்படி ஆத்மயாதாத்ம்ய ஞானம் பெற்றவனே மூன்றாம் அத்யாயத்தில் சொன்னபடி "பகவத் சரீர பூத: ஜீவ:" என்கிற ஜ்ஞானத்துடன் ,பயனில் பற்றில்லாமல் கர்மயோகம் செய்து ஆத்ம ச்ரேயஸ் பெறுகிறான்.

எந்தக் கர்மாவுக்கும் (செயலுக்கும்) மூன்றுவித பலன்கள் உள்ளன.

"ருசி ஜனகத்வம்" அதே போல செயலைச் செய்வதில் ருசியைப் பிறப்பிக்கும் ஒருவன் ஒரு பொய் சொன்னால், அது மேலேயும் அவனை பொய் சொல்வதில் தூண்டும். ஒருவன் ஒரு தடவை கோவிலுக்குப் போனால் மேன்மேலும் கோவிலுக்குப் போக ருசியை உண்டாக்கும்.

"பலஜனகத்வம்" எந்த கர்மாவுக்கும் திருஷ்ட பலனைத் தவிர, அதிர்ஷ்ட பலனான புண்ய பாபமும் உண்டாகும். நல்ல முறையில் ஒரு செயலைச் செய்து பணம் சம்பாதித்தால், அந்தப் பணம் த்ருஷ்ட பலன். அதனால் உண்டாகும் புண்யம் அதிர்ஷ்ட பலன் (கண்ணுக் குத் தெரியாத பலன்)

"யோக்யத்வம்" நல்ல செயல் செய்பவனுக்கு யோக்யன் என் கிற பெயரும் நல்லவரின் சேர்க்கையும் கிடைக்கிறது. அதேபோல கெட்ட செயல் செய்பவருக்கு அயோக்யன் என்ற பெயரும், துஷ்டரு டைய சேர்க்கையும் உண்டாகும். ஒருவன் பலனை விரும்பாமல் கர்மாவைச் செய்தாலும் இந்த இயற்கையான மூன்று பலன்கள் உண்டு.

**கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய: ।**
**ஸ புத்திமாக் மநுஷ்யேஷு ஸயுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத் ॥ 18 ॥**

எவனொருவன் கர்ம யோகத்தில் ஞானயோகத்தையும், ஞான யோகத்தில் கர்மயோகத்தையும் காண்கிறானோ, அவனே வித்வான், ஞானவானாகிறான். வைதிக கர்மாக்களைச் செய்வதினால் அவன் மோக்ஷமும் பெறுகிறான்.

இதற்குப் பொருள் அறிவது கஷ்டம். கர்மயோகத்தை ஞான யோகமாகவும் ஞானயோகத்தை கர்மயோகமாகவும் எப்படி காண முடியும்? ஒரு மலரை மலர் என்று அறியலாமே ஒழிய அதை ஒரு மணி என்று எப்படி அறிவது?

நம்மை ஞானயோகத்தை செய்யச் சொல்லாமல் கோர யுத்த மான கர்ம யோகத்தைச் செய்யச் சொல்லுகிறானே கண்ணன் என்று அர்ஜுனன் நினைக்க, அர்ஜுனா! கர்மயோகம வேறு ஞானயோகம் வேறு என்று நினையாதே. கர்ம யோகமே ஞானயோகம்; ஞான யோகத்தைச் செய்து தலைகாட்டுவது கஷ்டம்; ஆதலால் சுலபமாய் செய்து பூர்த்தி செய்யக்கூடிய கர்மயோகத்தையே உனக்குச் சொன்னேன் என பொருள் தோன்றச் சொல்கிறான்.

கர்ம என்பது ஒரு செயல். ஞானம் என்பது ஒரு புத்தி விசேஷம். இரண்டையும் ஒன்றாகப் பார்ப்பது எப்படி?

"ஆதித்யோ யூப" என்பது ஒரு ச்ருதி வாக்யம். தூணை சூர்யன் என்கிறது இது. தூணும் சூரியனும் ஒன்றல்ல; ஆனால், யாகத் தில் ஒரு ஆட்டைக்கட்டும் தூண் நன்றாய் அலங்கரிக்கப்பட்டு சூரியனைப்போல் ப்ரகாசிக்கிறது என்பது இதன் பொருள். "அக்நிர்க் மாணவ": என்கிறது மற்றோர் வாக்யம். நல்ல ப்ரஹ்மசாரி அக்நியைப்போல் ஜொலித்து நிற்கிறான் என்பதையே மாணவனை அக்நி என்கிறது.

அதேபோல கர்மயோகம், ஒரு செயலாக யிருந்தாலும் அதில் அடங்கியுள்ள ஞானபாகம் ப்ரகாசித்துக்கொண்டிருப்பதினால் கர்ம யோகமே ஞானயோகம் என்று சொல்லும்படியிருக்கும். ஞான யோகியும் தன் சரீரம் தரிப்பதற்காகச் சில கர்மாவைச் செய்யவேண்டுமாகையினால் ஞானயோகமே கர்மயோகம் என்றும் சொல்லலாம்.

**யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்ப வர்ஜிதா: |**
**ஞானாக்நி தக்த கர்மாணம் தம் ஆஹு: பண்டிதம் புதா: || 19 ||**

மோக்ஷத்தை விரும்பி எவன் ஒருவன் நித்யநைமித்ய கர்மாக் களையும், லௌகீக கர்மாக்களையும் பலத்தை விரும்பாமலும், தன்னைச் செய்பவனாக எண்ணாமலும் செய்கிறானோ, அவனை ஞானிகள்,

எல்லாப் பாபங்களும் ஞானாக்னியினால் பொசுக்கப்பட்ட மஹா பண்டிதன் என்றே சொல்லுவர்.

"ஸர்வே" என்பதினால் வைதிக, லௌகிக எல்லாச் செயல்களையும் குறிக்கிறது.

"கர்ம வர்ஜிதம்" "ஸங்கல்ப வர்ஜிதம்" கர்ம பலனை இச்சியாமலும், 'நான் செய்கிறேன்' என்று எண்ணாமலும், தேகாத்மாபிமானமில்லாமல், ஆத்ம யாதாத்ம்ய ஜ்ஞானத்துடன் செய்கிறவனே மஹா பண்டிதன் ஆகிறான் என்பர் ஞானிகள்.

லௌகிக கர்மாக்களிலும் நமக்குப் பலனில் ஆசைகூடாது. ஒரு வேளைக்குப் போதுமான பொருளையே தேடவேண்டும் முமுக்ஷு என்கிறது சாஸ்திரம். நாமோ, நம் ஆயுள் பூராவுமில்லை; நம் பரம்பரை பரம்பரைக்கும் தேவையான பொருள் தேடுகிறோம். மோக்ஷம் பெற விரும்புபவனுக்கு இப்படிப்பட்ட ஆசைக் கூடாது. இதற்குச் சேர ஒரு சரிதம்.

நச்சரிப்பான் ஒருவன் பகவானைக் குறித்து தவம் செய்தான். பகவான் அவன் தவத்திற்கு மெச்சி அவன்முன் தோன்றி, "நான் உனக்கு ஒரே ஒரு வரம் கொடுக்கிறேன் கேள் என்றார். அவன் கேட்ட வரமாவது: "எனக்கு 21-வது தலைமுறைப் பேரன் ஏழாவது உப்பரிகையில் தங்கக் கிண்ணியில் பால்சோறு சாப்பிடுவதை நான் கண்ணால் கண்டு பின்பு மோக்ஷம் பெறவேண்டும்' என்றான். தனக்கு குடும்பம் தனம், தான்யம் போன்ற செல்வச் செழிப்போடு ஏழாவது மாடியில தான் ஏறி, கண்ணால் பார்க்கவேண்டுமென்பதினால் தனக்கு உடல் திடத்தையும் கேட்டு, மோக்ஷத்தையும் கேட்டுக் கொண்டான். மனிதனுக்குள்ள ஆசைக்கு அளவேயில்லை என்பதைக் காட்டுகிறது இந்தக் கதை.

**த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய: |**
**கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: || 20 ||**

கர்ம பலன்களில் ஆசையற்று சரீரத்தில் பற்றில்லாமல், தன் ஆத்மாவை பார்ப்பது ஒன்றிலேயே நோக்குடையவனாய், எவன் கர்மயோகம் செய்கிறானோ, அவன் பல கர்மாக்களைச் செய்தாலும் அவைகளைச் செய்பவனல்ல; விட்டவனாகவே ஆகிறான்.

"நிராச்ரய" ஆத்மா தான் இருக்கும் சரீரத்தை நோக்காதவன். சரீரமில்லாமல் நாமில்லை என்று நாம் நினைக்கிறோம்; ஞானிகளுக்கு ஞானமே ஆத்மாவுக்கு இருப்பிடம், ஆத்மாவின் நிலையான தர்மம் ஞானமே என்று அவர்கள் இருப்பர்.

1. நம் கர்மேந்த்ரியங்களை பொருள் தேடும் விஷயத்தில் செயலைச் செய்ய பழக்குவது அப்யாஸம்; இங்கு ஆத்ம பரமாத்ம ஞானமில்லை; செயல்களில் பழக்கம் மட்டுமே உண்டாகிறது.

2. இப்படி செயல்களில் பழக்கப்பட்ட இந்த்ரியங்களை, ஆத்ம பரமாத்ம விஷயத்தில், அதாவது, பகவதாராதனம், பகவத் பூஜை த்யானம், வந்தனம், ஸத் சரித்திரம் கேட்டல் (ச்ரவணம்) படித்தல் இவையெல்லாம் "ஞான அப்யாஸ தசை"

3. ஆத்ம பரமாத்ம ஜ்ஞானம் பெற்று தேகாத்மாபிமானம் அற்று, பயனில் இச்சையில்லாமல், ஆத்ம யாதாத்ம்ய ஞானத்துடன் செய்யும் செயலே "கர்மயோகம்".

மறுபடியும் கர்ம யோகத்திற்கு ஜ்ஞான யோகதவம் உண்டு என்பதையே சொல்கிறான்.

**நிராசீர் யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ: |**
**சாரீரம் கேவலம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பிஷம் || 21 ||**

பலத்தில் ஆசையற்று, விஷயங்களிலிருந்து மனத்தை அடக்கி, தன் சரீரத்திலும் அதைப் பற்றினவைகளிலும் தன்னது என்கிற அபிமானத்தை விட்டு, ஆத்மா ஒன்றிலேயே மனத்தை வைத்திருக்க வேண்டும். இப்படியிருப்பவன், தன் ஆயுள் முழுவதும் கர்மாவைச் செய்து வந்தாலும், அக்கர்ம பலன் அவனை கட்டுப்படுத்துவதில்லை. இவன் மறுபடி ஸம்ஸாரத்தை அடையமாட்டான். இவனுக்குத் தனித்து ஞானயோகம் செய்யாமலே, ஆத்ம தரிசனம் உண்டாகிறது.

**யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: |**
**ஸமஸ்ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே || 22 ||**

கர்மயோகி தன் தேக யாத்திரைக்காகக் கரையக்கூடாது; தானாகவே கிடைக்கும் பொருளைக் கொண்டு த்ருப்தி அடைய வேண்டும். சுகம், துக்கம், குளிர்ச்சி, வெப்பம் இவைகளைப் பொருட்படுத்தல் கூடாது; லாப நஷ்டம், ஜெயம் அபஜெயம் இரண்டையும் ஒன்றுபோலக் கருத வேண்டும்; தன் சத்ருக்களிடத்திலும் கோபம் கூடாது; இப்படியிருந்து ஒருவன் கர்ம யோகம் செய்வானாகில், ஞானயோகம் செய்யாமலே, இவன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்று, ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான். அதாவது மோக்ஷம் பெறுகிறான்.

**கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்த்திதசேதஸ: |**
**யக்ஞாயாSSசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே || 23 ||**

தன் மனத்தை ஆத்மாவினிடமே வைத்திருப்பவனுக்கு, விஷய ஆசை. காமக்ரோதம் போன்றவை தன்னடேவே விலகிவிடும். இவன் பகவத் ப்ரீத்யர்த்தமே யஜ்ஞமி, யாகாதிகள் செய்வான்; இவைகளைச் செய்யத் தடையான பாபங்களும் போய்விடும்.

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவி: ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணாஹுதம்
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா ||24||

ஒருவன் யாகம் யஜ்ஞம் செய்யும்போது, பகவானுக்குச் சரீரப் பொருளான தன்னால், பகவானுகிற ஆத்மா என்னும் அக்நியில், பகவானுக்குச் சரீரமான அவிஸ்ஸை, அவனுக்குச் சரீரமான "ஸ்ருக்" என்பதினால் ஹோமம் செய்யப்படுகிறது என்று நினைக்க வேண்டும்.

எல்லாவற்றையும் ப்ரஹ்மாத்மகம் (பகவானை ஆத்மாவாகக் கொண்டவை, எல்லாம் பகவானுக்கு சரீரம்) என்று தெரிந்து, ஹோமம் செய்தால், அவன் அந்த பகவானுக்குச் சரீரமாயுள்ள தன் ஆதமாவைக் காண்கிறான். ஆத்ம தரிசனம் பெறுகிறான் என்பது பொருள்.

இங்கே ப்ரஹ்மம் என்றால் ப்ரஹ்மத்தை ஆத்மாவாகக் கொண்டவை, பகவானுக்கு சரீரம் என்றே பொருள். ஏனெனில் அவிஸ், ஸ்ருக் முதலானவை அசித், அசித்தும் ஈச்வரனும் ஒன்றாகமாட்டாது என்பதை எல்லா மதஸ்தரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். "அஹமேவாஜ்யம்" என்று பகவானே 9-வது அத்யாயத்தில் தெளிவாகச் சொல்லியிருக்கிறான். "ஸ்ருக்" என்றால் ஹோமம் செய்யும் ஒரு கருவி.

தைவமேவாபரே யஜ்ஞம் யோகிந: பர்யுபாஸதே |
ப்ரஹ்மாக்நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோப ஜுஹ்வதி || ||25||

ச்ரோத்ராதீநிஇந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி |
சப்தாதீந் விஷயாந் அந்யே இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி ||26||

ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராணகர்மாணி சாபரே |
ஆத்மஸம்யமயோக்நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீபிதே ||27||

த்ரவ்ய யஜ்ஞாஸ் தபோயஜ்ஞா: யோகயஜ்ஞாஸ்ததாபரே |
ஸ்வாத்யாய ஜ்ஞாநயஜ்ஞாச்ச யதய: ஸம்சிதவ்ரதா: ||28||

மற்றும் சிலர் செவி முதலான ஐம்புலன்களை அடக்குவதான அக்நியில் ஹோமம் செய்கிறார்கள்; சப்தம், ரூபம் முதலான விஷயங்களை இந்த்ரியங்களான அக்னியில் ஹோமம் செய்கிறார்கள்.

இன்னும் சிலர் அறிவினால் மனத்தை அடக்குவதான அக்னியில், இந்திரியங்கள், பிராணன் இவைகளின் செயல்களை ஹோமம் செய்கிறார்கள்.

முயற்சியினால் மன உறுதியுடன் சிலர் அவர்கள் திரவ்யத்தை நல்ல வழியில் தானம் முதலான நற்செயல்களில் யக்ஞம் செய்கிறார்கள். ஸத் விஷயத்தில் தானம் செய்வது ஒரு யக்ஞமேயாகும். மற்றும் சிலர் க்ருச்ரம், சாந்த்ராயணம் உபவாஸம் முதலிய தவமான யக்ஞங்களையும், வேறு சிலர் புண்ய தீர்த்த ஸ்நானம், புண்ய க்ஷேத்ர வாஸம் ஆகிய யக்ஞத்தையும் சிலர் வேதம் ஓதுதல், அவைகளின் பொருளை அறிந்து அதைச் சிந்தனம் செய்தலாகிற யக்ஞங்களையும் செய்கிறார்கள்.

இந்த மூன்று ச்லோகங்களில், கர்மேந்த்ரியங்களையும், ஞானேந்த்ரியங்களையும் அவைகள் தம் தம் வழியே செல்லாமல் அடக்குவது ஒரு யக்ஞம், தபஸ் என்பதையும்; பணத்தை நல்ல வழியில் சம்பாதிக்க வேண்டும்: அப்படி கிடைத்த பணத்தில் ஒரு பாகத்தை நல்ல காலத்தில், நல்ல க்ஷேத்ரத்தில், தக்க பாத்திரத்தில் தானம் செய்வதும், புண்ய க்ஷேத்ரவாஸம், புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தல், வேதம் ஓதுதல், ஓதுவித்தல், அதன் பொருளை ஞானவான்களிடம் கேட்டறிதல், அப்படிக் கேட்ட பொருளை தனியான இடத்திலிருந்து சிந்தனை செய்தல், இவையெல்லாம் ஆத்ம க்ஷேமத்தை கொடுக்கக்கூடிய தவம், யக்ஞம் என்றே கூறப்பட்டுள்ளது.

**அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேபானம் ததாபரே ।**
**ப்ராணாபானகதீ ருத்வா ப்ராணாயாமபராயணா: ॥29॥**

**ஸர்வேப்யேதே யக்ஞவிதோ யக்ஞக்ஷபிதகல்மஷா: ॥30॥**
**யக்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம் ।**

சிலர் தங்கள் உட்கொள்ளும் ஆஹாரத்தில் ஓர் அளவோடிருப்பர்; இப்படி இருந்து, தம் உடலிலுள்ள அபான வாயுவுடன் ப்ராண வாயுவைச் சேர்க்கும் "பூரகத்திலும்", பிராணவாயுவுடன் அபான வாயுவைக் கொண்டுவந்து சேர்க்கும் "ரேசகத்திலும்", பிராண வாயு மேல் நோக்கிச் செல்வதையும், அபானம் கீழ்நோக்கிச் செல்வதையும் தடுத்து, பிராண, அபான, சமான, உதான, வ்யான ஆகிய ஐந்து விதமான காற்றையும் ஒன்றுபடுத்தலாகிய "கும்பகத்திலும்" ஊன்றியிருப்பார்கள்.

### பிராணாயாமம் செய்யும் முறை

பிராணாயாமம் செய்பவர்களுக்கு ஆஹார நியதி வேண்டும்; பாதி வயிறு அன்னம், கால் பாகம் தீர்த்தம், கால் பாகம் காற்று இருக்

வேண்டும். நாம் சாப்பிடும் ஆஹாரம் ஜீர்ணமாவதற்கு காற்றும் தண்ணீரும் வேண்டும். ஆதலால், இதுவே சரியான ஆஹாரம்.

வலது மூக்கை வலது கை கட்டை விரலால் மூடி, மூச்சுக் காற்றை சிறிது காலம் இடது மூக்கினுல் உள்ளே இழுக்க வேண்டும். இதுதான் பூரகம்; அப்போது, "ப்ராணே அபாந ஜுஹ்வதி"— மேல் நோக்கி வரும் பிராணவாயு, கீழ்நோக்கிச் செல்லும் அபான வாயுவுடன் சேர்க்கப்படுகிறது.

பின்பு இரண்டு மூக்கையும் மூடிச் சிறிது நேரம் மூச்சுக் காற்றை உள்ளே இருத்தல் செய்ய வேண்டும். அப்போது "பிராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி"—ஐந்து விதமான காற்றும் ஒன்ருய் சேர்கின்றன. இதுதான் "கும்பகம்" எனப்படும்.

பின்பு வலது மூக்கினுல் மூச்சை வெளியில் விட வேண்டும். இது "ரேசகம்" எனப்படும். "அபான ப்ராணேஷு ஜுஹ்வதி"— அபான வாயு மேல் நோக்கி வந்து ப்ராணவாயு உடன் சேருகிறது.

**நாயம் லோகோ'ஸ்த்யயஜ்ஞஸ்ய குதோ'ந்ய: குருஸத்தம ||31||**

"தைவமே அபரே யஜ்ஞம்" என்கிற 25-ம் ச்லோகம் முதல் பிராணுயாமம் முடிய சொல்லிவந்த எல்லா கர்ம யோகிகளும் நித்ய நைமித்ய பஞ்ச மஹா யஜ்ஞங்களை பலனில் இச்சையில்லாமல் செய்வர்கள். யஜ்ஞ யாகாதிகளில் மிச்சப்பட்ட அமிர்தத்திற்கு சமான அன்னத்தை, புசித்து பாபமற்றவர்களாய் ப்ரஹ்மாத்மகமான ஜீவாத்ம தரிசனம் பெறுவர். நாமும் தினமும் பகவானுக்கு அர்ப்பணம் பண்ணப்பட்ட அன்னத்தையே புசித்தால், நம் பாபம் போய் நமக்கு ஆத்ம நன்மையே கிட்டும்.

"ஸநாதனம் ப்ரஹ்மம் யாந்தி"—என்பதினல் பழமையான ப்ரஹ்மாத்மகமான ஜீவாத்ம தரிசனம் பெறுகிருர்கள் என்பதே பொருள்.

"நாயம் லோகோ 'ஸ்த்ய யஜ்ஞஸ்ய குதோந்ய:" நித்ய நைமித்ய கர்மாக்களை மஹாயஜ்ஞாதிகளையும் செய்து சரீரம் ஆத்மா இரண்டிலும் சுத்தி பெருதவனுக்கு இந்த லோகமுமில்லை; பரலோகமுமில்லை. அதாவது இந்த லோகத்திலும் சுகமில்லை. பரலோக சுகமுமில்லை. அவன் இருந்தும் இல்லாதவனுக்குச் சமம்.

ஒருவன் நித்ய நைமித்ய கர்மாக்களைச் செய்து, சித்த சுத்தி பெற்ருல்தான், அவன் யஜ்ஞயாகாதிகளான காம்ய கர்மாக்களையோ பலனில் இச்சையில்லாமல் செய்யும் கர்ம யோகத்தையோ செய்ய அதிகாரியாகிருன். அதாவது தகுதி பெறுகிருன். அதனுல் எவனும் தன் நித்ய கர்மாக்களை தன்னுலான வரை விடாமல் செய்ய வேண்டும்.

**ஏவம் பஹுவிதா யஜ்ஞாவிததா ப்ரஹ்மணோ முகே।**
**கர்மஜாந் வித்தி தாந் ஸர்வாந் ஏவம் ஜ்ஞாத்வா**
**விமோக்ஷ்யஸே ॥ 32 ॥**

இப்படி ஆத்ம தரிசனம் பெற பல கர்ம யோகங்கள் உள்ளன ; ஆனால் நித்ய நைமித்ய கர்மாக்களைச் செய்தால்தான், ஒருவன் அக் கர்ம யோகங்களைச் செய்ய யோக்யதையுள்ளவனாகிறான்; ஆதலால் அர்ஜுனா! நீ இதை அறிந்து கர்மயோகம் செய்து ஸம்ஸார பந்தத் திலிருந்து விடுபடுவாயாக.

**ச்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப।**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥ 33 ॥**

திரவ்யத்தினால் ஆகும் கர்ம யோகத்தில் உள்ள ஜ்ஞான பாகமே சிறந்தது ; குந்தியின் புதல்வனே! கர்மயோகமெல்லாம் நாம் செய்யும் ஸாதனங்களுடன் கூடியிருந்தாலும் ஜ்ஞானத்திலேதான் முடிவடை கிறது. ஜீவாத்மாவை அறிவதே கர்ம யோகத்தின் பயன். இது ஒரு ஜ்ஞானம்; ஆதலால் ஜ்ஞானத்திலேயே முடிவடைகிறது என் கிறான் ; நாம் பகவானுக்குச் செய்யும் பூஜை, வந்தனம், அர்ச்சனம் இவைகளில் கர்ம பாகமும், சிந்தனையான ஞானமும் உள்ளது. இவை யிரண்டில் ஜ்ஞானமே மேம்பட்டது ; பகவானை அறிவதான ஜ்ஞானத்திலேயே அவை முடிவடைகின்றன.

**தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா।**
**உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞாநிநஸ்தத்வதர்சிந: ॥ 34 ॥**

இந்த ஆத்ம ஜ்ஞானத்தை பெரியோர்களிடமிருந்து, அவர்களை நமஸ்கரித்து, அடக்கத்துடன் அவர்களுக்குப் பணிவிடைகள் புரிந்து கேட்டறிய வேண்டும்; ஞானிகள் தத்வங்களை நன்கு அறிந்தவர்கள்; நீ விரும்பும் ஜ்ஞானத்தை அவர்கள் உனக்கு உபதேசம் செய்வார்கள்.

அர்ஜுனா! நீ கர்ம யோகத்தைச் செய்யும்போது, நடுவில் சில சந்தேகங்கள் உண்டாகலாம். அப்போது ஜ்ஞாநிகளான பெரி யோர்களைக்கிட்டி, அவர்களை வணங்கி, அவர்களுக்குத் தொண்டு செய்து அடக்கத்துடன் அடிக்கடி கேட்டறிய வேண்டும்; பல பேர்களிடம் கேட்டறிதல் வேண்டும்.

"ப்ரணி பாதேந"—நாம் பெரியோர்களையும் பகவானையும் வணங்கினால், நமக்கு ஆத்ம க்ஷேமம் உண்டாகும். மனம், புத்தி, அஹங்காரம் இவைகளை அடக்கி, இரு கைகளும் கால்களும் பூமி யில் படும்படி நமஸ்காரம் செய்ய வேண்டும்.

"ஸேவயா"—பக்தியுடன் அவர்களுக்குப் பணிவிடைகள் செய் தல் வேண்டும்.

**யத் ஜ்ஞாத்வா ந புநர் மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ**
**யேந பூதாந்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ மயி || 35 ||**

பாண்டுவின் புத்ரனே! எந்த ஜ்ஞானத்தைப் பெற்று மீண்டும் மோஹம் அடைய மாட்டாயோ, அந்த ஜ்ஞானத்தினால் எல்லாப் பிராணிகளின் ஆத்மாக்களையும் உன்னிடத்திலும் என்னிடத்திலும் காண்பாய்.

"யத் ஜ்ஞாத்வா ந புநர் மோஹமேவம் யாஸ்யஸி"—எந்த ஜ்ஞானத்தைப் பெற்று, மறுபடியும் இப்படி மோஹத்தை அடைய மாட்டாயோ—தேகாத்பிமானத்தினாலும், தான் தன்னது என்கிற மமதையினாலும் உண்டாயிருக்கிற மோஹம் அடையமாட்டாய்; சரீரமே ஆத்மாவென்று எண்ணியும்; பீஷ்மர், த்ரோணர் நம்மைச் சேர்ந்தவர்கள் என்று எண்ணியும், அவர்களைச் கொல்வதைப்பற்றிய உன் கலக்கம் போகும். மறுபடியும் இக்கலக்கம் உண்டாகாது.

"யேந பூதாந் யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத் மந்யதோ மயி"—கர்மயோகம் செய்து ஆத்ம தரிசனம் பெற்றால், அதாவது உன் ஆத்மாவைப் பார்த்தால், மற்றெல்லாப் பிராணிகளிடத்தில் உள்ள ஆத்மாக்களும் அதேபோல் உள்ளன என்பதை அறிவாய்.

உன் ஆத்மாவை நீ அறிந்தால், 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல்' எல்லாப் பிராணிகளின் ஆத்மாவையும் நீ அறிந்தவனாவாய்.

"அதோ மயி"—அதே போல எல்லாப் பிராணிகளின் ஆத்மாக்களை என்னிடத்திலும் அறிவாய். என்றால் என்ன?

"ததா வித்வாந் புண்ய பாபே விதூய:, நிரஞ்சந: பரமம் ஸாம்யம் உபைதி" — என்கிற ச்ருதியில் புண்யம் பாபம் நீங்கி மோக்ஷம் பெற்ற ஜீவன் பரனை பகவானோடு ஸாம்யம் பெறுகிறான் என்கிறது. எல்லாப் பிராணிகளின் ஜீவாத்மாக்களும் மோக்ஷ தசையில் பகவானோடு ஸாம்யம் பெறுகிறார்கள் என்று அறிவாய் என்பதே பொருள்.

**அபி சேத் அஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: |**
**ஸர்வம் ஜ்ஞாநப்லவேநைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி || 36 ||**

அர்ச்சுந! நீ அதிகமான பாபம் செய்தவனாகயிருந்தபோதிலும், நெடுநாள் சேர்க்கப்பட்ட பாபங்களை யெல்லாம், ஜ்ஞானம் என்னும் படகைக் கொண்டு கடந்துவிடுவாய் ஆத்ம ஸாக்ஷாத்காரமான ஓடத்தினால் தாண்டிவிடுவாய்.

**யதைதாம்ஸி ஸமித்தோக்நி: பஸ்மஸாத்குருதேऽர்ஜுந |**
**ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா || 37 ||**

நன்றாக ஜ்வலிக்கும் தீயானது, விறகை எவ்வாறு சாம்பலாக்குமோ, அர்ஜுனா! அவ்வாறே ஜ்ஞானமான நெருப்பு எல்லா வினைகளையும் சாம்பலாக்கும்.

புண்ய பாபமான வினைப் பயனை யெல்லாம் அநுபவித்தே போக்கவேண்டுமென விதியிருக்க, அவைகள் எவ்வாறு அறியும்?

தண்ணீருக்கு குளிர்ச்சியும், நெருப்புக்கு உஷ்ணமும் இயற்கையான குணம். அதேபோல ஆத்ம பரமாத்ம ஞானத்திற்கு நம் நல்வினை தீவினைகளையெல்லாம் போக்கும் இயற்கையான குணம் உண்டு. ஆகலால், அர்ஜுனா! இப்போது நான் உபதேசித்த ஜ்ஞானத் தீ உன் கர்ம வினைகளையெல்லாம் எரித்துச் சாம்பலாக்கி விடும்.

**ந ஹி ஜ்ஞானேன ஸத்ருசம் பவித்ரம் இஹ வித்யதே ।**
**தத் ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி ॥ 38 ॥**

இவ்வுலகில் ஜ்ஞானத்திற்கு ஸமமாக பரிசுத்தம் செய்யும் பொருள் மற்றெதுவும் இல்லவே இல்லை. அத்தகைய ஞானத்தை கர்மயோகம் பூர்த்தியாகச் செய்தவன் ஒரு ப்ரயத்னமின்றி தானாகவே பெறுகிறான்.

**ச்ரத்தாவான் லபதே ஜ்ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: ।**
**ஜ்ஞானம் லப்த்வா பராம் சாந்திம் அசிரேணாதிகச்சதி ॥ 39 ॥**

இந்த என் உபதேசத்தால் ஜ்ஞானம் பெற்று அதை வளர்ப்பதில் ஆவல் கொண்டு, அதிலேயே மனத்தை ஊன்றி வைத்து, விஷயங்களில் செல்லாமல் அடக்கினால், அவன் விரைவில் ஜ்ஞானத்தை அடைகிறான். அப்படி ஜ்ஞானத்தை அடைந்து மேலான சாந்தியைப் பெறுகிறான், ஆத்மாநுபவம் பெற்று பரமானந்தத்தை அநுபவிக்கிறான் என்பது பொருள்.

**அஜ்ஞச்சாச்ரத்ததானச்ச ஸம்சயாத்மா விநச்யதி ।**
**நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மந: ॥ 40 ॥**

ஜ்ஞானயோகம் செய்பவன் சீக்கிரம் பலன் பெறுகிறதில்லை. கர்மயோகம் செய்பவன் புலன்களை விஷயங்களினின்று மீட்டு விரைவிலேயே ஜ்ஞானம் பெறுகிறான்; ஜ்ஞானம் உண்டானால், உடனே சாந்தி ஏற்படும். இப்படி இதில் ஜ்ஞானமும் ச்ரத்தையும் வேண்டுமென்பதைச் சொல்லி, இந்த ஜ்ஞானம் ஐயம் திரிபு அற்று இருக்க வேண்டுமென்கிறான் இந்த ச்லோகத்தில்.

ஜ்ஞானமில்லாதவனும், அது இருந்தும் செய்கையில் ச்ரத்தையில்லாதவனும், சந்தேகமே மனத்தில் உள்ளவனும் நாசமடைகிறான். இப்படி ஸம்ஸயம் உள்ளவனுக்கு இவ்வுலகில், ஒரு பலனுமில்லை; மோக்ஷ பலனுமில்லை, இங்கும், அங்கும், எங்கும் சுகமில்லை.

என உபதேசத்தினால் ஆத்ம ஜ்ஞானம பெறாதவனும், சிறிது பெற்று அதன் வளர்ச்சியில் முயற்சியில்லாதவனும், மனம் தெளியாமல் சந்தேகம் கொள்பவனும் கெட்டழிந்து போவான்; ஆத்ம பரமாத்ம ஜ்ஞானத்தில் தெளிவு பெறாமல் சந்தேக புத்தியுள்ளவனுக்கு இந்த லோகமுமில்லை; பரலோகமுமில்லை; இந்த லோகத்திலுள்ள, தர்மம் அர்த்தம், காமமுமில்லை. பரலோக பலனான மோக்ஷமும் கிடையாது. ஒருவித சுகமும் இல்லாதவனாகிறான்.

எல்லா புருஷார்த்தங்களும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் கர்மாக்களைச் செய்தே பெற வேண்டும்; அக் கர்மாக்களைச் செய்ய முதலில் சரீர ஆத்ம ஞானம் வேண்டும். இதில் நிச்சயமான ஜ்ஞானமில்லாதவனுக்கு சந்தேகமே எப்போதும் தோன்றிக் கொண்டிருக்கும் ஒருவித சுகமுமிராது.

**யோகஸந்ந்யஸ்த கர்மாணம் ஞாநஸம்ச்சிந் ऽந ஸம்சயம் |**
**ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய || 41 ||**

இப்படி என்னால் பலமுறை உபதேசிக்கப்பட்ட புத்தியோகத்தில், கர்மத்தை விட்டு, அதில் அடங்கிய ஜ்ஞானமே, கர்மத்தைவிட மேலானது என நினைத்து, அதில் உள்ள ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞானத்தில் சந்தேகமின்றி, உறுதியான மனத்தை உடையவனாயிருப்பவனை, ஸம்ஸாரத்திற்குக் காரணமான புண்ய பாபம் எதுவும் கட்டுப்படுத்தாது.

**தஸ்மாத் அஜ்ஞாநஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஞாநாஸிநாऽऽத்மந:|**
**சித்த்வைநம் ஸம்சயம் யோகம் ஆதிஷ்ட்டோத்திஷ்ட்ட பாரத**
**|| 42 ||**

ஆகையால், அஜ்ஞானத்தினால் உண்டான உன் மனத்திலுள்ள ஆத்மாவைப்பற்றிய சந்தேகத்தை ஜ்ஞானமான கத்தியினால் அறுத்தெறிந்து, கர்மயோகத்தையே செய்வாயாக, எழுந்திரு!

அர்ஜுந! அஜ்ஞானத்தினால் உனக்கு உண்டான ஆத்மாவைப் பற்றிய கலக்கத்தைப் போக்க, நான் உனக்குத் தெளிவாக இதுவரையில் உபதேசித்திருக்கிறேன்; இந்த ஆத்ம ஜ்ஞானம் என்னும் கத்தியினால், உன் அஜ்ஞானத்தை அறுத்துப் போகட்டு, என்னால் உபதேசிக்கப்பட்ட கர்ம யோகத்தை (போரை) செய்வாயாக, எழுந்திரு; என்று சொல்லி இந்த அத்யாயத்தை முடித்துக் கொள்கிறான் ஸ்ரீ க்ருஷ்ணன்.

ஸ்ரீ ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹம்:

**ப்ரஸங்காத் ஸ்வஸ்வபாவோக்தி: கர்மணோ கர்ம தாஸ்ய ச |**
**பேதா: ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தாத்யாய உச்யதே ||**

நான்காம் அத்யாயத்தில், கர்மயோகம் ஜ்ஞானயோகம், கர்மயோகத்தின் பிரிவுகள், கர்மயோகத்தில் அடங்கியுள்ள ஞானத்தின் மேன்மை சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு கேள்விக்குப் பதிலாக, தன் அவதார தசையிலும் மாறாத தன் நிலையைப்பற்றியும், அவதார ரஹஸ்யமும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்!

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பகவத் கீதை
# ஐந்தாம் அத்யாயம்

## அவதாரிகை

மோக்ஷம் பெற விரும்புகிறவன் முமுக்ஷு. இவன் முதலில் சரீர ஆத்ம ஞானம் பெற வேண்டும். ஆத்மாவின் உண்மை நிலையை அறிந்து, சாஸ்திரத்தில் சொல்லியபடி தனக்குரிய கர்மாவை வெகு காலம் செய்து வர வேண்டும். இப்படிச் செய்து வந்தால் மனத் தூய்மை பெற்று, விருப்பு வெறுப்பு அற்று, புலன்களை வெல்லுகிறான். பிறகு ஆத்ம சிந்தனம் செய்து, ஆத்ம தரிசனம் பெறுகிறான். இது இரண்டாம் அத்யாயத்தில் சொன்ன வழி.

மூன்றும் அத்யாயத்தில் ஆத்ம யாதாத்ம்ய ஞ்ஞானம் பெற்று' அதாவது ஜீவனின் நித்யத்வம், ஞ்ஞானத்வம், ஆனந்தத்வம், அமலத்வம், பகவத் ப்ரகாரத்வம் (பகவானோடு உள்ள உறவு முறை) என்கிற இக்குணங்களை அறிவதுடன் ''பகவத் சரீர பூத: ஜீவ: பகவானுக்கு ஜீவன் சரீரம் என்கிற ஞ்ஞானத்துடனிருந்து ஒருவன் கர்மயோகம் செய்து வந்தால், இவனுக்கு தனித்து ஞ்ஞானயோகம் (ஆத்ம சிந்தனம்) வேண்டியதில்லை. விரைவில் இவன் ஆத்மாவை நேரில் காணும் பேறு பெறுகிறான். இதைச் செய்வது எளிது என்பதையும் கூறுகிறான்.

இந்த கர்ம யோகத்தில் ஞ்ஞானயோகம் உட்கொண்டிருக்கை யாலும், எளிதாகச் செய்து முடிக்கக் கூடியதாகையினாலும், விரைவில் பலன் கொடுப்பதாயிருப்பதினாலும், பலனைக் கொடுக்க இது வேறொன்றை எதிர்பாராமையினாலும், ஞ்ஞான யோகம் செய்ய சக்தி பெற்றவனுக்கும், இக் கர்மயோகமே செய்யத் தக்கது, என்பதைச் சொன்னான்.

நான்காம் அத்யாயத்தில், இக் கர்ம யோகத்தில் அடங்கியுள்ள ஞ்ஞானத்தின் தன்மையையும், அதின் உட்பிரிவுகளையும் சொல்லி, அதிலுள் உள்ள ஞானபாகமே சிறந்தது என்று கூறினான்.

இந்த ஐந்தாம் அத்யாயத்தில், ஆத்ம தரிசனம் பெற ஞான யோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே சுருக்கமான உபாயம் என்ப தையும், அதைச் செய்யும் போது அதில் தனக்கு கர்த்ருத்வம் இல்லை என்று நினைக்க வேண்டும்; அதாவது 'தன்னை செய்வதாக எண்ணக் கூடாது என்பதையும் சொல்லி, கர்மயோகத்திலுள்ள ஞானத்தையும் விவரிக்கிறான் கண்ணன்.

**ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர் யோகஞ்ச சம்ஸஸி**
**யத் ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிச்சிதம் || 1 ||**

அர்ஜுன உவாச—அர்ஜுனன் கூறியது.

கண்ணா! நீ கர்மயோகத்தைவிட்டு ஞானயோகத்தைச் செய்வதையும், மறுபடியும் கர்மயோகத்தைச் செய்வதையும், ஆத்ம தரிசனம் பெற உபாயமாகப் புகழ்ந்து பேசினாய். இவ்விரண்டில் எது சிறந்தது என்று ஒன்றை உறுதியாக எனக்குச் சொல்வாயாக.

க்ருஷ்ணா! மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன் முதலில் கர்ம யோகத்தைச் செய்து, அதனால் மனக் குற்றங்களை எல்லாம் நீக்கி, பிறகு ஞான யோகத்தினால் ஆத்ம தரிசனம் பெறவேண்டும் என்று முதலில் சொல்லி, மூன்று நான்கு அத்யாயங்களில் ஞானயோகம் செய்ய தக்கவனுக்கும் கர்மயோகமே சிறந்ததாகும் என்றும், அது ஜ்ஞான நிஷ்டையை எதிர்பாராமலே, ஆத்மதரிசனத்தைத் தரக்கூடியது என்றும், கர்மயோகத்தை மிகவும் புகழ்ந்து பேசினாய். ஆதலால் ஜ்ஞானயோகம் கர்மயோகம் இது இரண்டில் எது சீக்கிரமாயும், எளிதாயும் ஆத்ம தரிசனத்தைக் கொடுக்கும் என்பதை நிச்சயித்து ஒன்றை எனக்குச் சொல்லவேண்டும்.

ஸ்ரீபகவான் உவாச—கண்ணனின் பதில்

**ஸந்ந்யாஸ: கர்மயோகச்ச யச்ச்ரேயஸகராவுபௌ |**
**தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே || 2 ||**

அர்ஜுனா! ஸந்யாஸமெனப்படும் ஞானயோகமும், கர்மயோகமும் இரண்டுமே ஆத்ம தரிசனத்தை அளிக்கக் கூடியவை. ஆனால் ஜ்ஞான யோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே சிறந்தது, அது எப்படி எனில்,

**ஜ்ஞேய: ஸ நித்யஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி |**
**நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே ||3||**

கர்மயோகம் செய்பவன் ஆத்ம யதாத்ம்ய ஞானத்திலேயே நிலைத்து, அதிலேயே த்ருப்தனாய், மற்றொன்றிலும் விருப்பு வெறுப்பு அற்று, வரும் இன்ப துன்பங்களைப் பொறுத்திருக்கிறபடியால், அவனை நித்ய ஸந்யாஸியான ஞானயோகி என்றே கொள்ளலாம். அவன் எளிதில் கர்மயோகத்தைச் செய்து சுகமாய் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான்.

**ஸாங்க்யயோகௌ ப்ருதக் பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: |**
**ஏகமப்யாஸ்த்தித: ஸம்யக் உபயோர் விந்ததே பலம் || 4 ||**

ஜ்ஞானயோகத்தினால்தான் ஆத்ம தரிசனம் பெற முடியும். கர்ம யோகத்தினால் அதைப்பெற முடியாது. இவை இரண்டும் வெவ்வேறு

என்று அறிவில்லாதவர்கள் கூறுவர். ஆனால் அறிவில் சிறந்தவர் அவ்விரண்டும் ஒரே பயனை ஆத்ம தரிசனத்தையே தருவதினால், எதை ஒன்றைச் செய்தாலும் ஆத்ம தரிசனத்தைப் பெறலாம் என்று அறிவர்.

**யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தாநம் தத் யோகைரபி கம்யதே |**
**ஏகம் ஸாங்க்யஞ்ச யோகஞ்ச ய: பச்யதி ஸ பச்யதி || 5 ||**

ஞானயோகம் கர்மயோகம் இரண்டும் தனித்தனியே ஒரே பலனைத் தருவதால் அவ்விரண்டும் ஒன்றுதான் என அறிபவனே பண்டிதன்.

**ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ துக்கம் ஆப்தும் அயோகத: |**
**யோகயுக்தோ முநிர் ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி || 6 ||**

முதலில் கர்மயோகத்தைச் செய்து மனச்சுத்தி பெறாமல் ஞான யோகம் செய்ய இயலாது. கர்மயோகியோ ஆத்மாவின் யாதாத்ம்ய ஞானத்தைப் பெற்று அந்த ஆத்மாவையே சிந்தித்திருந்து சுலபமாக பரிசுத்த ஆத்மாவைக் காண முடியும்.

இங்கே "ப்ரஹ்ம" என்கிற பதம் பரிசுத்த ஆத்மாவையே குறிக்கும். ப்ரஹ்மத்தை அடைகிறான் என்பது பொருளல்ல. பரிசுத்த ஆத்மாவின் தரிசனம் பெறுகிறான் என்பதே பொருள்.

"ஞானயோக:முநி:" ஞானயோகத்தைச் செய்பவன் என்பது பொருளல்ல. ஆத்ம யாதாத்ம்ய ஞானத்தை மனனம் செய்து கொண்டே கர்மயோகம் செய்பவன் என்பதே பொருளாகும்.

இந்த ச்லோகத்தினால், கஷ்டப்பட்டு புலன்களை அடக்கி நீண்ட காலம் கழித்து ஆத்ம தரிசனத்தைத் தரும் ஞானயோகத்தைக் காட்டிலும் சுலபமாய்ச் செய்து விரைவில் அதே பலனைப் பெறுவிக்கும் கர்மயோகமே சிறந்தது என்பது சொல்லப்படுகிறது.

**யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: |**
**ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே || 7 ||**

"யோகயுக்த" கர்மயோகம் செய்பவன், "விசுத்தாத்ம" மனத் தூய்மை பெற்றவனாய் "விஜிதாத்ம" மனத்தை உலக விஷயங்களில் போகவிடாமல், "ஜிதேந்த்ரிய" எளிதில் புலனடக்கம் பெற்றவனாய்; "ஸர்வபூதாத்மபூதாத்ம" எல்லா உடலிலும் உள்ள ஜீவாத்மாக்கள் ஒன்றுபோன்றவை என்பதை அறிந்து "குர்வந்அபி" கர்மாக்களைச் செய்து வந்தாலும் "லிப்யதே" சரீரமே ஆத்மா என்று கலங்க மாட்டான்.

கர்மயோகம் செய்பவன் தன் வர்ணாச்ரம தர்மத்திற்குச் சேர எல்லா கர்மாக்களையும் செய்து வருவான். அதனால் மனத்தூய்மை அடைகிறான். தனக்கு இயல்பான செயலைச் செய்வதினால் மனத்தையும் புலன்களையும் வெல்லுகிறான். தேவன், மனிதன், மிருகம், பறவை என்கிற வேற்றுமையெல்லாம் சரீரத்தைப் பற்றினவையேயன்றி, ஆத்மாவைச் சேர்ந்தவையல்ல; எல்லா சரீரத்திலும் உள்ள ஆத்மாக்களும் எக்காலத்திலும் ஒரே வடிவாய், ஞான ஸ்வரூபமாய், ஒரே மாதிரியாக உள்ளவை என்று ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை எப்போதும் அவன் சிந்தித்திருப்பதினால், எல்லா கர்மாக்களையும் அவன் செய்து வந்தாலும், சரீரமே ஆத்மா என்கிற அஜ்ஞானத்தினால் கட்டுப்பட மாட்டான். ஆதலால் வெகு விரைவில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறுகிறான்.

விசுத்தாத்மா, விஜிதாத்மா என்பவைகளில் "ஆத்மா" என்றால் மனம் என்பதே பொருள். இப்படி கீதையில் மற்றும் பல இடங்களிலும் சொல்லியிருப்பதை நாம் காணலாம்.

எல்லா இந்த்ரியங்களின் செயல்களுக்கும் காரணம் மனம். அந்த மனம் ஜயிக்கப்பட்டால், தன்னடையே ஜ்ஞானேந்த்ரியங்களான மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் புலன்களையும் கர்மேந்த்ரியங்களாக கை கால் முதலான ஐந்து பொறிகளையும் வென்றவனாகிறான். ஆதலால் ஜிதேந்த்ரிய: எனப்படுகிறான்.

"ஸர்வபூத ஆத்மபூத ஆத்ம" தேவன், மனிதன், திர்யக் ஸ்தாவரங்களான எல்லா உடலிலுள்ள ஆத்மாக்கள் தன் உடலிலுள்ள ஆத்மாவோடு ஸம வடிவு பெற்று இருப்பதினால், அவைகளுடன் ஒத்த தன் ஆத்மாவை எப்போதும் சிந்தித்திருப்பான். எல்லா பூதங்களுக்கும் ஆத்மாவாயுள்ள பரமாத்மாவை, தானும் ஆத்மாவாக உடையவன்", என்று சிலர் கூறும் பொருள் இங்கு சேராது. இங்கே ஆத்ம யாதாத்ம்ய ஜ்ஞானத்தைச் சொல்லி வருகிறபடியால் மற்றவர்கள் சொல்லும் பொருள் பொருத்தமில்லை. எல்லா சரீரங்களிலும் உள்ள ஆத்மாவே தன்னிடமுள்ள ஆத்மா என்று ஏகாத்ம வாதம் சொல்வதாகவும் சிலர் பொருள் கூறுவர். இதுவும் பொருந்தாது, ஆத்ம ஸ்வரூப ஐக்யம் என்பது ப்ரத்யக்ஷம், அநுமானம், சாஸ்திரம், கீதை இவைகளுக்கு ஒவ்வாது.

எப்படி பல மூட்டைகளில் உள்ள நெல்லையெல்லாம் ஒரே நெல் என்று ஜாதியைப் பற்றிச் சொல்லுகிறோமோ, அதேபோல இங்கேயும் எல்லா சரீரத்திலும் உள்ள ஆத்மாக்கள் ஒரே மாதிரியானவை என்பதே சரியான பொருளாகும். சரீர சம்பந்தத்தை விலக்கிப் பார்த்தால், எல்லா ஆத்மாக்களும் அணுவாய், நித்யமாய், ஜ்ஞானானந்த ஸ்வரூபமாய் ஒரே மாதிரி இருப்பது தெரியும்.

**நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யேத தத்வவித் |**
**பச்யக் ச்ருண்வக் ஸ்ப்ருசக் ஜிக்ரக் அச்நக்**
**கச்சக் ஸ்வபக் ச்வஸக் || 8 ||**

**ப்ரலபக் விஸ்ருஜக் க்ருஹ்ணக் உந்மிஷக் நிமிஷக்நபி |**
**இந்த்ரியாணி இந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயக் || 9 ||**

உள்ளபடி ஆத்ம யாதாத்ம்ய ஞானம் பெற்ற கர்மயோகி, தான் கண்களால் ஒன்றை காண்பதும், காதுகளால் கேட்பதும், கைகளால் எடுப்பதும், மூக்கினால் முகர்வதும், நாக்கினால் ருசிப்பதும், கால்களால் நடப்பதும், மூச்சு விடுவது, தூங்குவது முதலான எல்லா செயல்களும் "இந்த்ரியார்த்தேஷு இந்த்ரியாணி வர்த்தந்தே" அந்தந்த புலன்கள் அதனதன் செயலை தாமே செய்கின்றன என்று நினைக்க வேண்டும். "அஹம் கிஞ்சித் நைவ கரோமி" நான் அவைகளைச் செய்கிறவன் அல்லன் என்று எண்ணி, அவைகள் முன் ஜன்ம கர்ம வாசனைக்குத்தேர புலன்களால் செய்யப்படுகின்றன; அவைகளில் தனக்குச் சிறிதும் தொடர்பு இல்லை" என்று தன்னை அகர்த்தாவாக (கர்மாவை செய்யாதவனாக) சிந்திக்க வேண்டும்.

"கர்த்தா சாஸ்த்ர வத்வாத்" என்பது ப்ரஹ்ம சூத்ரம். இதில் ஜீவனை கர்த்தாவாகச் சொல்லியிருக்க, தான் கர்த்தாவில்லை என்று நினைப்பது எப்படிக் கூடும்.

முற்பிறவியின் வினைப் பயன்கள், இப்பொழுது புலன்களுடன் கூடி, எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றனவே ஒழிய ஜீவன் தானாகச் செய்கிறானில்லை; ஜ்ஞான ஸ்வரூபனான ஜீவனுக்கு இயல்பாக செயல்கள் உண்டாகின்றன என்பதே கருத்து.

**ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: |**
**லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா || 10 ||**

ஒருவன் மேலே சொன்னபடி கர்த்ருத்வத்தை (செயலை செய்பவனாயிருக்கையில்) ப்ரக்ருதியினாலான இந்த்ரியங்களிடம் வைத்து, கர்ம பலன்களில் சம்பந்தம் அற்று, இவ்வுலகில் பல கர்மாக்களைச் செய்து வந்தாலும், ஸம்ஸார பந்தத்திற்கு காரணமான புண்ய பாபங்களினால் கட்டுப்பட மாட்டான்; இவன் சரீரமே ஆத்மா என்று நினைத்திருக்கவும் மாட்டான்.

தாமரை இலை தண்ணீரில் உண்டாகி தண்ணீரிலேயே வளர்ந்து வந்தபோதிலும் அத்தாமரையில் தண்ணீர் ஒட்டுவதில்லை. அது போல ஜீவன் சரீரத்தில் பிறந்து அச்சரீரத்திலேயே இருந்து வந்தாலும் சரீர ஆத்ம விவேகத்தினால், தன்னை சரீரமாக நினையாமல், ஸம்ஸாரத்தில் ஒட்டாதிருக்க வேண்டும்.

இங்கு பரஹ்மணி என்கிற் சொல்லுக்கு ப்ரக்ருதியிலுலான இந்த்ரியங்கள் என்பதே பொருள். 'ப்ரஹ்ம' என்கிற பதம் ப்ரக்ருதியைச் சொல்லும்.

**காயேந மநஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி ।**
**யோகிந: கர்ம குர்வந்தி ஸங்கம்**
**த்யக்த்வாSSத்மசுத்தயே || 11 ||**

**யுக்த: கர்மபலம் த்யக்த்வா சாந்திம் ஆப்னோதி நைஷ்டிகீம் ।**
**அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே || 12 ||**

கர்மயோகிகள் ஆத்மாவுக்குப் பழமையான தங்கள் கர்ம பலன் விலக, தங்கள் உடல், மனம், புத்தி, புலன்களால் பலனில் சிறிதும் இச்சையில்லாமலும், மமதா புத்தியை விட்டும் கர்மாக்களைச் செய்கிறார்கள்.

இப்படி பயன்களில் இச்சையில்லாமல் கர்மயோகம் செய்பவர்கள், சுகமான ஆத்மானுபவத்தைப் பெறுகிறார்கள். அப்படியின்றி பயன்களை இச்சித்து கர்மயோகம் செய்பவர்கள், அக்கர்ம பலன்களினால் கட்டுண்டு நித்ய ஸம்ஸாரிகளாகவே இருப்பர்.

**ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாSSஸ்தே ஸுகம் வசீ ।**
**நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந் ந காரயந் || 13 ||**

ஆத்மாவுக்கு நான் செய்தேன் என்கிற கர்த்ருத்வமானது இயல்பாக உண்டானதல்ல. முற்பிறவியின் கர்மமடியாக வந்த சரீரத்தினால் உண்டானது. ஆதலால் எல்லா கர்மாக்களையும் (நவ த்வாரம்) ஒன்பது வாசலுள்ள சரீரத்தினிடம் வைத்து, தான் இருக்க வேண்டியதற்காக தன் சரீரத்தைக் கொண்டு முயற்சி செய்யாலும் சுதந்திரனாய் சுகமாய் அதில் இருக்கக் கடவன்.

உடலும் புலன்களும் அவைகளுக்கு இயல்பான கர்மாக்களைச் செய்கின்றன; தான் செய்யவில்லை என்று மனத்தினால் நினைத்து, கர்மாக்களில் தொடர்பு அற்று இருக்கும் ஜீவன், ஒன்பது வாசல் உள்ள சரீரமான பட்டணத்தில் சுகித்திருப்பன். ஒன்பது வாசல் என்பது, இரண்டு கண்கள், இரண்டு காது, இரண்டு மூக்கு, வாய் ஒன்று மல மூத்ராதிகள் கழிக்கும் வாயில்கள் இரண்டு.

**ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।**
**நகர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே || 14 ||**

தேவன், மனிதன், மிருகம், பறவை, தாவரம் என பலவகை பௌதிக பிராணிகளுக்கெல்லாம், கர்மாக்களைச் செய்யும் திறமையும், கர்மமும், அக்கர்மாக்களின் பயனும் ஜீவாத்மாவினால் வந்ததல்ல.

ஜீவன் சுதந்திரனாய் கர்மாவுக்கு வசப்படாமலிருக்கிறான். ப்ரக்ருதியின் இயற்கை வாசனையே இவைகளை உண்டாக்குகின்றன. அதாவது அநாதி காலமாயுள்ள தொல்வினைப்பயனாகிய ப்ரக்ருதியின் சேர்க்கையினால் "நான் தேவன்; நான் மனிதன்" என்று ப்ரக்ருதியினாலான சரீரத்தையே ஆத்மாவாக நினைத்து, அதனால் வரும் வாசனையினால் உண்டாகிறது.

**நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு: |**
**அஜ்ஞாநேநாSSவ்ருதம் ஜ்ஞாநம் தேந**
**முஹ்யந்தி ஜந்தவ: || 15 ||**

ஒருவன் தனக்கு உறவினராக (மனைவி மக்களாக) சிலரை எண்ணி, அவர்களின் பாபத்தினால் அவர்களுக்கு, உண்டாகும் துக்கத்தைப் போக்கி நன்மையைச் செய்யவோ, மற்றும் தனக்கு விரோதியான சிலரின் புண்ய பலனைப் போக்கி அவர்களுக்கு துன்பத்தை உண்டாக்கவோ முடியாது.

ஏனெனில், ஒரு ஜீவன் தன் முற்பிறவியின் கர்ம பலன்களுக்கு ஏற்ப, பல சரீரங்களை எடுக்கிறான். "திறந்து கிடக்கும் வாசல் தோறும் நுழைந்து புறப்படும் பதார்த்தம் போல" (திருவா—வாய்) என்பர் ஜீவனை. எத்தனையோ பிறவிகள், எத்தனையோ சரீரங்கள் எடுத்திருக்கிறான். ஒவ்வொர் பிறவியிலும் மனைவி மக்களான உறவினர் வெவ்வேறு, விரோதிகளும் வெவ்வேறு. பகவான் ஒருவனே எல்லோருக்கும் எக்காலத்திலும் ஸகல விதமான உறவினனாகிறான்.

கீழ் ச்லோகத்தில் ஜீவனை ஒன்பது வாசல் கொண்ட சரீரமான பட்டணத்திற்கு ப்ரபு என்றான். இச் ச்லோகத்தில் ஜீவனை விபு, எங்குமிருப்பவன் என்கிறான்; அதாவது பரிசுத்த ஜீவன் தன் ஞான ஒளியினால் எங்கும் ப்ரகாசித்திருப்பவன். ஆனால் ஸம்ஸார தசையில் சரீரத்தில் இருக்கும் ஜீவனுக்கு அந்த ஞானம் சுருங்கி சரீரத்தின் அளவில் மாத்திரம் பரவி, "நான் தேவன், நான் மனிதன்" என்று தன் சரீரத்தையே ஆத்மாவாக எண்ணி, அதற்கேற்ப கர்மாவைச் செய்கிறான். ஆதலால் மறுபிறவியிலும் முன் ஜன்ம கர்ம வாசனை தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கிறது. ஒரு ஜீவன் சரீரத்தை விட்டுப் போகும் போது அவன் புலன்களும் அதன் வாசனைகளும் (பழக்க வழக்கங்களும்—நுண் உணர்வுகளும்) அவனுடன் கூடவே போகின்றன. மறுபடி பிறவி எடுக்கும் போது அவைகளுடனேயே அவன் பிறக்கிறான்.

**ஜ்ஞாநேந து தத் அஜ்ஞாநம் யேஷாம் நாசிதமாத்மந: |**
**தேஷாம் ஆதித்யவத் ஜ்ஞாநம் ப்ரகாசயதி தத் பரம் [illegible]**

எந்த ஜீவன்களுக்கு ஆத்ம ஞானத்தினுல் விளையடியாக வந்த அறியாமை போக்கப்படுகிறதோ அவர்களுக்கு மேலான ஆத்ம ஞானம் சூர்யனைப்போன்று எல்லாவற்றையும் ப்ரகாசப்படுத்துகிறது.

மேலே சொன்ன ஜீவாத்மாக்களில் எவருக்கு உண்மையான ஆத்ம ஜ்ஞானம் உபதேசிக்கப்படுகிறதோ எவர் தினமும் அதையே சிந்தனை செய்கிருர்களோ, அவர்களுக்கு ஆத்ம ஞான வளர்ச்சிக்குத் தடையான பாபங்கள் போய், அறியாமை முற்றும் தொலையப் பெற்று, ஆத்ம ஜ்ஞானம் மென்மேலும் வளரப்பெற்று எல்லாவற்றையும் அறிகிருர்கள். அதாவது "ஸர்வஜ்ஞத்வம்" பெறுகிருர்கள்.

"தேஷாம்"— அவர்களுக்கு, என இங்கு பன்மையில் சொல்லியிருப்பதிஞல் அஜ்ஞானம் நீங்கிய முக்தி தசையிலும் ஆத்மாக்கள் பல, ஒன்றல்ல என்பது தேறுகிறது. இதஞல், ஸம்ஸார தசையில் அஜ்ஞானத்திஞல் நமக்கு ஜீவாத்மாக்கள் பல என்று தோற்றம் அளிக்கிறது. ஞானம் பிறந்தால் எல்லா ஆத்மாக்களும் ஒன்று என விளங்கும் என்கிற அத்வைத சித்தாந்தம் கண்டிக்கப்படுகிறது.

"பரம் தத் ஞானம்"— மேலான ஆத்மாவினுடைய இயல்பான ஜ்ஞானம், என்பதிஞல், ஜ்ஞானமே ஆத்மாவின் இயல்பான தர்மம். அது ஸம்ஸார தசையில் சுருக்கியிருக்கிறது. முக்தி தசையில் ஜீவனுக்கு அந்த ஞானம் மலர்ந்து 'ஸர்வஜ்ஞத்வம்' (எல்லாவற்றையும் அறியும் தன்மை) உண்டாகிறது என்பதும் தேறுகிறது.

இன்னும், "ஆதித்யவத்", சூரியனைப்போல என்பதிஞல், சூரியன் ஒளிப்பொருளாகியிருப்பது போல, ஜீவனும் அறிவின் வடிவாயிருப்பவன்; சூரிய கிரணங்கள் எங்கும் பரவி எல்லாப் பொருளையும், இருளை நீக்கிக் காண்பிப்பது போல, ஜீவனுடைய ஞான ஒளியும் எங்கும் ஒளிர்ந்து எல்லாவற்றையும் அறியச் செய்கிறது; அதாவது ஜீவனுக்கு 'ஸர்வஜ்ஞத்வம்' உண்டாகிறது. ஆஞல் சூரியனின் வெளிச்சம் இருளைப்போக்குமே ஒழிய, வஸ்துவை அறிவது ஜீவனின் ஞான ஒளியிஞலேயே.

**தத்புத்தயஸ் ததாத்மாந:தந்நிஷ்டா:தத்பராயணா: |**
**கச்சந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்த்தூதகல்மஷா: || 17 ||**

மேலே கூறியபடி ஆத்மாவை காண்பதில் உறுதியுள்ளவர்கள், ஆத்மாவினிடமே எப்போதும் தங்கள் மனத்தை வைத்து, அதில் நன்றாகப் பழகி, அதுவே பிரயோசனமாய் (பயனாக) நினைத்திருப்பர்.

அவர்களின் தொல்வினைகள் அற்று, திரும்பி வருதல் இல்லாத ஆத்ம அனுபவத்தைப் பெறுகிறார்கள்.

"தத் ஆத்மாந" ஆத்மாவைக் காண்பதிலேயே மனம் உடையவர்கள். "தந்நிஷ்டா:", ஆத்ம தரிசன பயிற்சியிலேயே ஊன்றியிருப்பவர். "தத்பாராயணா:"— அந்த ஆத்ம தரிசனமே முக்கிய பயனாக எண்ணியிருப்பவர், "ஜ்ஞாந நிர்தூத கல்மஷா"—இத்தப பயிற்சியினால் பழைய பாபங்கள் போய "அபுநராவர்த்திம் கச்சந்தி" ஸம்ஸாரத்திற்குத திரும்பி வராத ஆத்மானுபவத்தைப் பெறுவர். ஆத்மானுபவத்தில் எல்லா ஆனந்தங்களுமிருப்பதினால், அதைத் தவிர மற்ற ஒன்றிலும் அவர்கள் நெஞ்சு செல்லாது.

**வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ।**
**சுநி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சிந: ॥ 18**

படித்து அடக்கமுள்ள ப்ராஹ்மணனிடமும், படிப்பில்லாத ப்ராஹ்மணனிடமும், உருவத்தில் சிறிய பசுவினிடமும், உருப் பெரிய யானையிடமும், நாயினிடமும், அதைத் தின்னும் சண்டாளனிடமும், உள்ள ஜீவாத்மாக்கள் எல்லாம் ஒருபடிப்பட்டிருப்பதினால், உண்மையான ஆத்ம ஞானம் பெற்ற அறிஞர், அவைகளை சமமாகப் பார்ப்பர்.

படித்தவனுக்கு அடையாளம் விநயமே. படித்து வணக்கத்துடனிருக்கும் அந்தணனிடமும், சாதாரண படிப்பில்லாத ப்ராஹ்மணனிடத்தும், உருவத்தில் சிறிய பசு, உருவினால் பெரிய யானை, கொன்று தின்னப்படும் நாய், அதைத் தின்கிற சண்டாளன் இப்படிப்பட்ட எல்லோரிடமும் உள்ள ஆத்மாக்கள் எல்லாம் சமமானவை; ஒன்று போல உள்ளவை என்று அவைகளிலுள்ள ஆத்மாவின் ஸ்வரூபத்தைப்பற்றி கூறுகிறான் கண்ணன். சரீரத்தின் தொடர்பினால் உண்டான ஆத்மாவின் தர்மபூதஜ்ஞான வேற்றுமையைப் பற்றியோ, அந்த சரீரங்களினால் உண்டான வர்ணாச்ரமம், ஆசார வேறுபாடுகளைப் பற்றியோ, மறுக்கும் சமத்வம் இங்கு சொல்லப்படவில்லை. ஆனால் சிலர் இந்த கீதா ச்லோகத்தை ஆதாரமாகக் கொண்டு உலகிலுள்ள எல்லோரும் சமம்; ஜாதிமத பேதமில்லை என்று சொல்லி வருகிறார்கள். இது பொருளன்று.

எல்லா சரீரத்திலுமுள்ள ஜீவாத்மாக்கள் உருவத்தினாலும், நித்யத்வம் ஞானத்வம் முதலிய குணங்களினாலும், பகவானுக்கு சரீரமாயிருப்பதைப்பற்றியும் சமமானவைகள் என்பது பொருளே ஒழிய, சரீரத்தினாலும் சரீரத்தைப் பற்றிய ஜாதிமத தர்மங்களினாலும் சமம் அல்ல; கர்மானுகுணமாக அந்தந்த ஆத்மாவுக்கு ஏற்பட்டுள்ள உடலும், அதைச்சேர்ந்த பிராஹ்மண, க்ஷத்திரிய,

வைசிய, சூத்திர ஜாதிகளும், அச்சாதிகளை யொட்டிய குணங்களும் வேறு பட்டவைகளே. மற்றும் சிலர் யானைக்கு யானை அளவு ஆத்மா, பூனைக்கு பூனையளவு ஜீவன் என்றும் சொல்கிறார்கள். இதுவும் சேராது. எல்லா ஆத்மாக்களும் அணு ஸ்வரூப மானவையே.

**இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்த்திதம் மந: |**
**நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே**
**வ்ஸ்திதா: || 19 ||**

இப்படி ஆத்ம ஸாம்யத்தில் எவர்களுடைய மனம் நிலைத்திருக்கிறதோ, அவர்களால் கர்மயோகம் செய்யும் போதே, அதாவது சாதன வேளையிலேயே, இந்த ஸம்ஸாரம் வெல்லப்பட்டதாகிறது. இயற்கையினால் உண்டாகும் தோஷமெல்லாம் நீங்கி, ஸாம்யமுள்ள ஆத்மாவான ப்ரஹ்மத்தில் அவர்கள் நிலைத்திருப்பார்கள்.

அவர்கள் ப்ரஹ்மமான ஆத்மாவினிடமே மனத்தை நிலையாக வைத்து, ஆத்ம தரிசனம் பெறுவதற்கு முன்பே ஸம்ஸாரத்தை ஜயித்தவர்களாகிறார்கள். ப்ரஹ்மம் என்கிற பதம் பகவானையும் சொல்லும், நான்முகக் கடவுளையும் சொல்லும், ப்ரக்ருதி சம்பந்த மற்ற ஜீவாத்மாவையும் சொல்லும். இங்கு ஜீவனையே சொல்லுகிறது.

**ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம் |**
**ஸ்த்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்த்தித: || 20 ||**

தத்வ தரிசிகளால் உபதேசிக்கப்பட்டு, ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து, அதையே எப்போதும் நினைத்து பழகி வந்து, அதனால் சரீரமே ஆத்மா என்கிற அறிவின்மை நீங்கி, பரிசுத்த ஆத்மாவையே பார்க்க விருப்பமுள்ளவனாயிருப்பவன், உலகிலுண்டாகும் நிலையில்லாத அல்பமான விருப்பம் வெறுப்புகளில் சந்தோஷமோ, துன்பமோ அடைய மாட்டான். தான் விரும்பியது கிடைத்தால் ஆனந்தமும், விரும்பாதவை கிடைத்தால் துன்பமும் அடைய மாட்டான். இரண்டையும் சமமாகவே கொள்வான்.

**பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மநி யஸ் ஸுகம் |**
**ஸ ப்ரஹ்மயோக யுக்தாத்மா ஸுகம் அக்ஷயம் அச்நுதே || 21 ||**

எந்த கர்மயோகி உலக விஷயங்களில் சிறிதும் மனத்தைச் செலுத்தாமல், தன் ஜீவாத்ம ஸ்வரூபத்தையே நினைத்திருந்து அதிலேயே எல்லா இன்பங்களையும் பெறுகிறானோ, அவனே ஆத்ம தரிசனத்திற்கு முயல்வதில் ஈடுபட்ட மனமுடையவனாகிறான். அவன் ஆத்மானுபவமான நித்யானந்தத்தைப் பெறுகிறான்.

**யே ஹி ஸம்ஸபர்சஜா போகா: துக்கயோநய ஏவ தே !**
**ஆத்யந்தவந்த : கௌந்தேய ந தேஷு ரமதே புத : 22**

உலக விஷயங்களில் உண்டாகும் இன்பமெல்லாம், துன்பத் திற்கே காரணமாயிருக்கும். அவை தோன்றி அழிபவைகளே. இப்படி அவைகளின் உண்மையான தன்மையை அறிந்தவன் எவனும் அவைகளைப் பெற முயலமாட்டான்.

உலகில் எந்த விஷயமும் இன்பம் போல் தோன்றினாலும், அவை நம்மைத் துன்பத்திலேயே கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும்.

செல்வம், வீடு வாசல், மனை மககள் இது போன்றவைகளை பெறுவதும் கஷ்டம்; அவைகளை காப்பாற்றுவதும் கஷ்டம், அவை களால் உண்டாகும் இன்பமோ நிலைத்திராதவை. அவை நம்மை துன்பத்திலேயே சேர்ப்பிக்கும். இதை ஆராய்ந்து அறிந்தவன் எவனும் இந்த அல்பமாயும், நிலையில்லாததும், துன்பத்திலேயே முடியக்கூடியதுமான உலக விஷயங்களைப் பெற முயல மாட்டான்.

**சக்நோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் சரீரவிமோக்ஷணாத் !**
**காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த : ஸ ஸுகீ நர: || 23 ||**

**யோऽந்தஸ்ஸுகோऽந்தராராமஸ் ததாஅந்தர்ஜ்யோதிரேவ ய : !**
**ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி || 24 ||**

எவன் சரீரம் அழிவதற்கு முன் ஆத்ம தரிசனம் பெற கர்மயோகம் செய்யும்போது உண்டாகும் காம க்ரோதாதிகளைப் பொறுக்க வல்ல வனோ, அவனே ஆத்மானுபவம் பெறத் தக்கவன். அவன் சரீரம் அழிந்த பிறகும் தன் ஆத்மானுபவத்திலேயே சுகித்திருப்பான்.

**லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: !**
**சிந்நத்வைதா யதாத்மாந : ஸர்வபூதஹிதே ரதா: || 25 ||**

**காமக்ரோதவியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம் !**
**அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விதிதாத்மநாம் || 26 ||**

வெப்பம் குளிர்ச்சி, சுகம் துக்கம் இவை போன்ற இரட்டைகளி லிருந்து விடுபட்டு, ஆத்மாவினிடமே மனத்தை வைத்து, எல்லா உயிர்களும் ஆத்ம நன்மையைப் பெற வேண்டும் என்கிற பரந்த மனப்பான்மை யுடையவர்கள், தன் ஆத்ம தரிசனத்திற்காக முயல் பவர் (க்ஷீண கல்மஷா) ஆத்ம தரிசனம் பெற தடையான பாபங்கள் போய் (ப்ரஹ்ம நிர்வாணம் வர்த்ததே) ஆத்மானுபவமான ப்ரஹ்மா னந்தத்தை அடைகிறார்கள்.

காம க்ரோதங்கள் அற்று, உலக விஷயங்களில் பற்று இல்லா மல், தன் மனத்தை ஆத்மாவினிடமே நிலையாக வைத்திருக்கும் கர்ம யோகி, எங்கிருந்தாலும் ஆத்மானுபவ சுகத்தையே அடைகிறான்.

ஸ்பர்சாந் க்ருத்வா பஹிர்பாஹ்யாந் சக்ஷுச்சைவாந்தரே ப்ருவோ: |
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ: ||27||

யதேந்த்ரியமனோபுத்திர் முனிர் மோக்ஷபராயண: |
விகதேச்சாபயக்ரோதோ யஸ் ஸதா முக்த ஏவ ஸ: || 28 ||

காம க்ரோதம் அற்று, மற்ற விஷயங்களில் பற்றில்லாமல், யோகம் செய்யத்தக்க ஓர் ஆஸனத்தின் மீது நேராக நிமிர்ந்து உட்கார்ந்து கண்களிரண்டையும் புருவங்கள் மத்தியில் இறுத்தி மூக்கு நுனியைப் பார்க்க வேண்டும். உள் மூச்சு, வெளி மூச்சு விடுவது சமமாக இருக்க வேண்டும். மனம் புத்தி புலன்களும் வேறு விஷயங்களில் போகாமல் ஆத்மாவினிடமே யிருத்தல் வேண்டும். இப்படியிருந்து ஆத்ம தரிசனம் பெறுவதே முக்கிய பயனாகக் கருதி யிருக்க வேண்டும். இவ்வாறு இருப்பவன் யோகம் சித்தி அடைவதற்கு முன்னமேயே முக்தன் எனப்படுகிறான்.

போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம் |
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் சாந்திம் ருச்சதி ||29||

நித்ய நைமித்ய கர்மாக்களை ஆரம்பமாயும் கர்ம யோகத்தை முடிவாகவும் உடைய அந்த கர்ம யோகத்தை எளிதில் அடையும் வகை சொல்லப்படுகிறது.

நாம் செய்யும் யாகம் யஜ்ஞம் எல்லாம் பரமனையே போய்ச் சேர்கின்றன. அதனால் ஈச்வரன் நம்மிடம் உகந்து நமக்கு நன்மையைச் செய்கிறான். அந்த பகவானே இப்போது க்ருஷ்ணனாய் அவதரித்திருக்கிறான் என்பதை அறிந்து, நாம் செய்யும் எல்லா கர்மங்களினாலும் அந்த க்ருஷ்ணனே ஆராதிக்கப் படுகிறான் என்பதைத் தெரிந்தும், அக்கர்மங்களைச் செய்வது இனிமையாக யிருக்கும். நமக்கு ஆத்ம சாந்தியும் உண்டாகும் என்பதைச் சொல்லி, இந்த ஐந்தாம் அத்யாயத்தைப் பூர்த்தி செய்து கொள்கிறான் கண்ணன்.

---

*ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்*

கர்ம யோகஸ்ய ஸௌகர்யம் சைக்ர்யம் காச்சந தத்விதா: |
ப்ரஹ்ம ஞாந ப்ரகாரச்ச பஞ்சமாத்யாய உச்யதே ||

கர்மயோகம் செய்வது எளியது என்பதையும், அதின் விரைவில் பலனளிக்கும் தன்மையையும், அதற்கு உறுப்பான அங்கங்களையும், தூய ஜீவாத்மாக்களை சமமாகக் காண்பதற்கு ஏற்ற நிலையையும், இந்த ஐந்தாம் அத்யாயத்தில் கூறப்படுகிறது.

*ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்!*

ஸ்ரீமத் பகவத்கீதை

# ஆறும் அத்தியாயம்

ஐந்தாம் அத்யாயத்தில் ஞானத்தை உட்கொண்ட கர்ம யோகம் செய்வது எளிது; அது விரைவில் பலனளிக்கக் கூடியது என்பதையும் அதைச் செய்யும் முறைகளையும், எல்லா சரீரத்திலும் உள்ள ஆத்மாக்கள் சமமானவை என்பதையும் சொன்னான். இந்த ஆறும் அத்யாயத்தில் கர்மயோகம், ஞானயோகம் இரண்டுமே தனித் தனியே ஆத்ம தரிசனத்தைப் பெற சாதனமானவை. ஆனாலும் இவ்விரண்டில் கர்ம யோகமே சிறந்தது என்பதை விளக்குகிறான்.

முதல் சில சுலோகங்களில் கர்மயோகம் செய்பவனுக்கு இருக்க வேண்டிய யோக்யதையைச் சொல்லுகிறான்.

பகவான் உவாச :—கண்ணன் கூறியது.

**அநாச்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய: |**
**ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்நி: ந சாக்ரிய: || 1 ||**

கர்மாவின் பயனை விரும்பாமல் எவன் அதைச் செய்கிறானோ, அவனே கர்மயோகி. இவன் ஜ்ஞான யோகியுமாகிறான், அக்நி காரிய மான வைதிக கர்மாக்களையோ நித்ய நைமித்ய கர்மாக்களையோ இவன் விட்டவனல்லன்.

இவன் செய்யும் கர்ம யோகத்திலேயே ஜ்ஞானமும் அடங்கியுள்ள படியினால் இவன் ஞானயோகியுமாகிறான். ஜ்ஞான யோகியோ வெனில் ஞான நிஷ்டையிலிருப்பவன். இவன் கர்மா எதையும் செய் பவனல்லன்; ஆதலால் அவைகளை இவன் விட்டவனாகிறான்.

**யம் ஸந்ந்யாஸ இதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ |**
**ந ஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கச்சந || 2 ||**

அர்ஜுனா ! ஞானயோகமென்று எதனைச் சொல்லுவரோ அது வாகவே கர்மயோகத்தை அறிவாயாக. ஏனெனில் உடலையே ஆத்மாவாக ப்ரமிப்பதை விடாத எவனும் கர்மயோகம் செய்யத் தகுதியற்றவனாகிறானன்றோ ?

கர்மயோகம் செய்பவனுக்கு உடலே ஆத்மா என்கிற அறிவின்மை போக வேண்டும். இந்த ஆத்ம ஞானம் பெற்று செய்யப்படும் கர்மயோகத்தை ஞானயோகம் என்றே கூறலாம்.

**ஆருருக்ஷோர்முநேர் யோகம் கர்ம காரணம் உச்யதே |**
**யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரணம் உச்யதே || 3 ||**

ஆத்ம சிந்தனம் செய்பவனுக்கு ஆத்ம தரிசனம் பெற கர்ம யோகம் காரணமாகும். ஆத்ம தரிசனம் பெற்ற பிறகு, அவனுக்கு கர்மயோகம் செய்யாமை இயல்பாகி விடும்.

ஆத்ம ஸாக்ஷாத் காரம் பெற கர்மயோகம் ஸாதனம். ஆனால் ஆத்ம தரிசனம் பெற்ற பிறகு அந்த இன்பகரமான அந்த ஆத்மானுபவத்திலேயே அவன் ஈடுபட்டிருப்பானுகையால் கர்மயோகம் தானுகவே அவனை விட்டு நழுவும்.

**யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே ।**
**ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகாருடஸ் ததோச்யதே ॥ 4 ॥**

எப்பொழுது புலன்கள் விஷயங்களில் சம்பந்தப் படுவதில்லையோ, அப்பொழுது விஷயங்களைப் பெற அவன் முயற்சி அற்று இருப்பான். அந்நிலையில் உள்ளவனே அஹங்கார மமகாரங்கள் அற்று கர்ம யோகம் செய்யத் தகுதியுள்ளவனுகிறுன்.

ஸாதன தசையில் புலனடக்கம் பெற கர்மயோகம் செய்தேயாக வேண்டும். ஆத்ம தரிசனம் பெற்ற பின்பு கர்மயோகம் வேண்டியதில்லை. இப்படி புலன்களை அடக்கி அஹங்கார மமகார மற்றவனே கர்மயோகியாகிறுன்.

**உத்தரேத் ஆத்மநா SSத்மாநம் நாத்மாநம் அவஸாதயேத் ।**
**ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந: ॥ 5 ॥**

**பந்துராத்மா SSத்மநஸ் தஸ்ய யேநாத்மைவா SSத்மநா ஜித: ।**
**அநாத்மநஸ்து சத்ருத்வே வர்தேதாத்மைவ சத்ருவத் ॥ 6 ॥**

தூய மனத்திருல் ஸம்ஸாரக் கட்டிலிருந்து ஜீவன் விடுபட வேண்டும். விஷயப் பற்றுதல் உள்ள மனத்திருல தன்னைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. ஒருவனுக்கு மனமே நெருக்கிய உறவாகும், அதுவே அவனுக்குக் கொடிய சத்ருவுமாகும்.

எவனுல் மனம் வெல்லப்படுகிறதோ அவனுக்கு அம் மனம் நல்ல உறவாகும். மனத்தை வெல்லாதவனுக்கு அதுவே கொடிய விரோதியாகும்.

"மந ஏவ மநுஷ்யாணும் காரணம், பந்த மோக்ஷயோ : பந்தாய விஷயா சங்கி முக்த்யை நிர் விஷயம் மந" என்கிறபடி உலக விஷயங்களில் செல்லும் மனமே நமது ஆத்ம க்ஷேமத்திற்கு விரோதி. அவ் விஷயங்களில் பற்று அற்று உள்ள மனம் நமக்கு ஆத்ம நன்மையைச் செய்வதால் நம்மிடம் நல் உறவாகும்.

'நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப் பெற்றால் என் செய்யோம், இனியென்ன குறைவினம்!" என்று ஆழ்வார் தம் மனத்தைக் கொண்டாடிப் பேசியுள்ளார்.

**ஜிதாத்மந: ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।**
**சீதோஷ்ணஸுகதுக்கேஷு ததா மாநாவமாநயோ: ॥ 7 ॥**

சுகம் துக்கம், வெப்பம் குளிர்ச்சி, மானம் அவமானம் இவைகளினால் கலக்கம் அடையாமலிருக்க வேண்டும் கர்மயோகி. இவனுக்கு ஆத்ம ஸ்வரூப ஞானம் நிலைத்திருக்க வேண்டும். இப்படியிருப்பவனே கர்மயோகம் செய்யத் தகுதியுள்ளவனாகிறான். (இங்கு பரமாத்மா என்கிற பதம் ஜீவாத்மாவைச் சொல்கிறது.)

**ஜ்ஞாந விஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: ।**
**யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்மகாஞ்சந: ॥ 8 ॥**

**ஸுஹ்ருந்மித்ரார்யுதாஸீந மத்யஸ்தத்வேஷ்ய பந்துஷு ।**
**ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே ॥ 9 ॥**

இவ்விரண்டு சுலோகங்களில் ஆத்ம சிந்தனம் செய்பவனுக்கு வேண்டிய தகுதியைச் சொல்லுகிறது.

ஜீவாத்மா சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவன்; அவன் நித்யன்; ஞான ஸ்வரூபன்.

தேவ மனுஷ்ய திர்யக் ஸ்தாவரமென்ற சரீரங்களில் வேறுபாடு இருந்த போதிலும் அவைகளிலுள்ள ஆத்மாக்கள் எல்லாம் ஒன்று போலுள்ளவை. அதாவது சமமானவை. இவைகளை அறிந்து புலன்களையும் மனத்தையும் அடக்கி, ஆத்மாவையே எப்போதும் சிந்தித்திருக்க வேண்டும். உலக விஷயங்களில் பற்றுதல் சிறிதும் கூடாது; ஒரு தங்கக்கட்டியையும், ஓட்டாஞ் சல்லியையும் ஸமமாக கருத வேண்டும். இப்படியிருப்பவனே ஆத்ம சிந்தனம் செய்ய அருகனாகிறான்.

ஆத்ம சிந்தனம் செய்பவனுக்கு ஆத்மானுபவம் ஒன்றே அவன் விரும்பும் பலன் ஆதலால் மற்ற எவராலும் அவனுக்கு ஒன்றும் ஆக வேண்டியதில்லை. ஆகையால் அவனுக்கு சத்ரு என்றும் மித்ரன் என்றும் எவருமில்லை.

இனி ஆத்ம யோகம் செய்யும் முறை

**யோகீ யுஞ்ஜீத ஸததம் ஆத்மாநம் ரஹஸி ஸ்தித: ।**
**ஏகாகீ யதசித்தாத்மா நிராசீ: அபரிக்ரஹ: ॥ 10 ॥**

கர்மயோகம் செய்பவன் தினம் தோறும் ஆத்ம சிந்தனம் செய்ய வேண்டும். மனிதரில்லாத தனி இடத்திலிருந்து மமகாரம் அஹங்காரத்தை விட்டு, ஒரு பயனையும் விரும்பாமல் ஆத்ம யோகம் செய்யும் காலங்களில், ஆத்மாவின் ஸ்வரூபத்தை, தெளிந்த மனத்தினால் சிந்திக்க வேண்டும்.

**சுசௌ தேசே ப்ரதிஷ்ட்டாப்ய ஸ்த்திரம் ஆஸநம் ஆத்மந: ।**
**நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சேலாஜிநகுசோத்தரம் ॥ 11 ॥**

**தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய: ।**
**உபவிச்யாऽஸநே யுஞ்ஜ்யாத் யோகம் ஆத்மவிசுத்தயே ॥ 12 ॥**

தூய்மையான இடத்திலிருந்து ஆத்ம சிந்தனம் செய்ய வேண்டும். அழுக்கு வஸ்திரம் அசுத்த மனிதர் தீண்டாத இடமாக இருத்தல் வேண்டும். உயரமில்லாத ஒரு மரப் பலகையின் மீது தர்பம், மான் தோல், பட்டு வஸ்திரம் இவைகளை ஒன்றின் மேல் ஒன்றாகப் போட்டு, அதின் மீது சிறிது சாய்ந்தாற் போல் உட்கார வேண்டும். புலன்கள் மனம் இவைகளை மற்று விஷயங்களில் செல்லாமல் அடக்க வேண்டும். மனத்தை ஆத்மா ஒன்றிலேயே நிறுத்தி ஆத்ம சிந்தனம் செய்ய வேண்டும்.

**ஸமம் காயசிரோக்ரீவம் தாரயந் அசலம் ஸ்த்திரம் ।**
**ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்சாநவலோகயந் ॥ 13 ॥**

**ப்ரசாந்தாத்மா விகதபீ: ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்த்தித: ।**
**மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥ 14 ॥**

உடல் தலை கழுத்து இவைகளை அசையாமல் சிறிது சாய்த்தாற் போல் ஸமமாய் இருத்தி, ஒரு பக்கமும் பாராமல் மூக்கு நுனியைப் பார்த்துக் கொண்டு, மனத்தை அடக்கி, ப்ரஹ்மசாரி வ்ரதத்திலிருந்து, பகவானை என் திருமேனியில் மனத்தை வைத்து சிந்தனை செய்ய வேண்டும். (ப்ரஹ்மமான ஆத்மாவினிடம் மனத்தை வைப்பதே இங்கு ப்ரஹ்மசர்ய வ்ரதம் எனப்படுகிறது. கண்ணை மூடிக் கொண்டால் தூக்கம் வரும், ஆதலால் பாதி மூடியும் பாதி திறந்தும் மூக்கு நுனியில் பார்வை விழுவது போல கண்கள் இருக்க வேண்டும் என்பது கருத்தே ஒழிய, மூக்கு நுனியைப் பார்க்க வேண்டுமென்பதல்ல).

**யுஞ்ஜந் ஏவம் ஸதாऽऽத்மாநம் யோகீ நியதமாநஸ: ।**
**சாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்த்தாம் அதிகச்சதி ॥ 15 ॥**

**ஆத்ம சிந்தனத்தில் ஆழ்ந்தவன் முதலில் பரமாத்மாவின் திருமேனியைச் சிந்திக்க வேண்டும் என்பது ஏன்?**

ஆத்ம த்யானம் செய்ய இழியுமுன் மனத்தை என் திவ்ய மங்கள விக்ரஹத்தில் நிறுத்தி மனச் சுத்தி பெற்று, சுகத்தின் எல்லையான மனச் சாந்தியை என்னிடமிருந்து பெற வேண்டும் என்கிறான்

சுபாச்ரயமான (பற்றுக் கோடு) பகவானின் திவ்ய மங்கள திருமேனியை சிந்தித்தால், மனத்தில் உள்ள கலக்கம் தொலைந்து மனச்சாந்தி உண்டாகும். பிறகு ஆத்ம சிந்தனத்தை எளிதாகச் செய்து முடிக்கலாம்.

நமக்கு சரீரம் சரீரத்தைப் பற்றிய அழகு முதலிய குணங்களும், ஜீவாத்மா, அதற்குண்டான குணங்களும் இருப்பது போல, பரமனுக்கும் அவனுடைய திவ்ய மங்கள திருமேனி, அதின் குணங்கள், பரமாத்மா அவனுடைய வாத்ஸல்யாதி குணங்களும் உண்டு என்பதே விசிஷ்டாத் வைத மதக் கொள்கை.

நாம் எந்த நற் செயலைச் செய்தாலும் அதை நடை பெறுமல் தடுக்கும் சில பாபங்கள் நமக்கு உள்ளன. அப் பரமாத்மாவை நாம் சிந்தனை செய்தாலும், அவன் திருமேனியை மனத்தினுல் நினைத்தாலும், அப்பாபங்கள் நீங்கும். நாம் தொடங்கும் நற்செயலைத் தடையின்றி முடியச் செய்யலாம்.

ஆண்டாளும் தான் நோன்பு என்கிற ஒரு நற்பணியைச் செய்ய ஆரம்பிக்குமுன் 'வாயினுல்பாடி மனத்தினுல் சிந்திக்க, போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்று அருளிச் செய்திருப்பதைக் காணலாம்

கண்ணனும் இதைப் பல இடங்களில், சொல்லியிருக்கிறுன். "தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர" என்று இரண்டாம் அத்யாயத்தில் புலனடக்குதல் கஷ்டம்; அதைப் பெற நீ உன் மனத்தை என்னிடம் வைத்தால், அதற்குத் தடையான பாபம் நீங்கி, நீ புலன்களை எளிதில் அடக்கலாம்" என்று அருளிச் செய்திருக்கிறுன். அதுபோல ஒன்பதாம் அத்யாயத்திலும், நீ என்னிடம் பக்தி செய்யத் தடையான பாபம் நீங்க நீ உன் மனத்தை என்னிடம் வை, "மந்மனு பவ மத் பக்த" என்கிற ச்லோகத்தில் கூறியுள்ளான். நாம் எந்த நற் செயலைச் செய்தாலும், அதைத் தொடங்கு முன் பகவத் த்யானம் செய்ய வேண்டும்

**நாத்யச்நதஸ்து யோகோ5ஸ்தி ந சைகாந்தம் அநச்நத: |**
**ந சாதிஸ்வப்நசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுந || 16 ||**

**யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।**
**யுக்தஸ்வப்நாவபோதஸ்ய யோகோ பவதி துக்கஹா || 17 ||**

ஆத்ம சிந்தனம் செய்பவன் இன்னும் எவ்வாறு இருக்க வேண்டு மென்பதைக் கூறுகிறன்.

ஆத்ம சிந்தனம் செய்பவன் அதிகமான உணவை உட்கொள்ளக் கூடாது. இப்படி சாப்பிட்டால் தூக்கம் வரும். சாப்பிடாமல் பசி யுடனுமிருக்கலாகாது. ஒரு செயலையும் செய்யாத சோம்பேறியாக வும் இருக்கக்கூடாது. எதிலும் மிதமாக யிருத்தல் வேண்டும். இப்படிப் பட்டவனே ஆத்ம சிந்தனம் செய்து ஆனந்தகரமான ஆதமானுபவம் பெறலாம்.

யதா விநியதம் சித்தம் ஆத்மந்யேவாவதிஷ்டதே ।
நிஸ்ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்ய: யுக்த இத்யுச்யதே ததா || 18 ||

யதா தீபோ நிவாதஸ்த்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகிநோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகம் ஆத்மந: || 19 ||

ஆத்மாவைப் பார்ப்பதே தனக்கு முக்கிய பயனைக் கொண்டு, உலக விஷயங்களில் ஆசை அற்று, ஆத்மாவை சிந்திப்பதிலேயே தன் மனத்தை நிலையாக வைத்திருப்பவனே ஆத்ம யோகத்தைப் பூர்த்தி செய்து, ஆத்ம தரிசனம் பெறத் தகுதி பெறுகிறன்.

காற்றில்லாத இடத்திலுள்ள ஒரு விளக்கின் தழல், எப்படி சிறிதும் ஆடாமல், அசையாமல் பிரகாசிக்குமோ, அதைப் போல் மற்ற விஷயம் எதுவும் கலசாமல், சிறிதும் மனம் அசையாமல் தன் ஆத்ம சிந்தனத்தில் இருப்பவனே ஆத்ம யோகியாகிறன்.

ஜ்ஞான மயமாயிருப்பவன் ஜீவன். இப்படி ஜ்ஞான மயமாயிருப் பதால் தானும் ப்ரகாசித்து, தன் ஞான ஒளியினல் மற்றப் பொருள் களை விளங்கச் செய்பவன் ஜீவன். ஆத்ம சிந்தனம் செய்பவனுடைய இந்த ஞான ஒளி, வெளி விஷயங்களில் செல்லாமல் ஸஞ்சலமின்றி தன்னைத் தான் அனுபவிப்பதிலேயே ஒரு நிலையில் இருக்க வேண்டும்.

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா ।
யத்ர சைவாऽऽத்மநாऽத்மாநம் பச்யந் ஆத்மநி துஷ்யதி || 20 ||

ஸுகமாத்யந்திகம் யத்தத் புத்திக்ராஹ்யம் அதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்த்திதச் சலதி தத்வத: || 21 ||

யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத: ।
யஸ்மிந் ஸ்த்திதோ ந துக்கேந குருணாऽபி விசால்யதே || 22 ||

தம் வித்யாத் துக்கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம் ।
ஸ நிச்சயேந யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ணசேதஸா || 23

ஆத்ம யோகத்தினுல் பெறக்கூடிய ஆத்ம தரிசனத்தின் சிறப்பைத் தெரிந்து, அதை மிக உகப்போடு செய்ய வேண்டுமென்பதற்காக அதன் மேன்மையை இந்த நான்கு சுலோகங்களில் சொல்லுகிருன் கண்ணன்.

ஆத்ம சிந்தனம் செய்யும் போது, மனம் மற்ற விஷயங்களில் செல்லாமல் ஆத்மா ஒன்றிலேயே நிலைத்திருக்கும். யோகத்தினுல் மனக்கண்ணுல் ஆத்மாவைக் காண்கிருன். அப்படி காணும் ஆத்மாவில் திருப்தியும் பெறுகிருன். அந்த யோகத்தையே ஆத்ம யோகம் என்று அறிவாய்.

எந்த யோகத்தினுல் மற்ற புலன்களால் அறியவொண்ணாததும், மனம் ஒன்றினுலேயே அறியத்தக்கதும், துன்பம் கலசாத சுகத்தை அடைகிருனே, அந்த யோகத்தினுல் அதை அனுபவம் பெற்றவன் அதிலேயே நிலைத்திருப்பானே, அந்த யோகமே ஆத்ம யோகம் என்று அறிவாய்.

எந்த யோகத்தைச் செய்ய ஆரம்பித்த பிறகு வேறு ஒன்றையும் இதைவிட மேலானதாக நினைப்பதில்லையோ, எந்த யோகத்தை நடுவில் விட்டால் மீளாத துயரத்தை அடைகிருனே அதுவே ஆத்ம யோகம் என அறிவாய்.

இப்படி துயரங்களுக்கெல்லாம் எதிர்த் தட்டான சுகமாகவே உள்ள யோகமே ஆத்ம யோகமாகும். இத்தகைய மேலான ஆனந்தத்தைத் தரக்கூடிய ஆத்மானுபவம் பெறும் யோகமே ஆத்ம யோகமாகும்.

ஆத்ம யோகம் செய்பவன் மற்ற எதிலும் பற்று அற்று, இன்பகரமான ஆத்மானுபவத்தைப் பெறுவதிலேயே நோக்குள்ளவனுயிருப்பான். தன் புதல்வன் இறந்தாலும், வேறொருவர் வீட்டில் ஒருவர் இறந்தால் துக்கப்படாமல் எப்படி உதாஸீனனுயிருப்பானே அப்படியே இருப்பான். சரீரத்திற்கு நோய் ஏற்பட்டாலும் இது கர்மாதீனம் என்று தேகாத்மாபிமானம் அற்று, அதைப் பொருட்படுத்த மாட்டான்

ஸங்கல்பப்ரபவாந் காமாந் த்யக்த்வா ஸர்வாந் அசேஷத: ।
மநஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமந்தத: ॥ 24 ॥

சனைச்சனைருபரமேத் புத்யா த்ருதிக்ருஹீதயா ।
ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥ 25 ॥

நாம் நமது என்கிற அஹங்கார, மமகாரத்தினுல் ஏற்படும் ஆசைகளை யெல்லாம் அடியோடு விட்டு, புலன்களை விஷயங்களிலிருந்து

மீட்டு, சிறிது சிறிதாய் மற்ற விஷயங்கள் முழுமையும் விட்டு, தன் மனத்தை ஆத்மா ஒன்றிலேயே ஊன்றி வைத்திருப்பான்.

**யதோ யதோ நிச்சரதி மநச்சஞ்சலம் அஸ்த்திரம் ।**
**ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மந்யேவ வசம் நயேத் ॥ 26 ॥**

மனம் ஸஞ்சல ஸ்வபாவ முள்ளது. ஆத்மாவில் நிலைத்திராது கண்ட விஷயங்களில் ஓடும். அப்போது அவ்விஷயங்களில் உள்ள துன்பத்தையும், ஆத்மானுபவத்தில் உள்ள மேலான சுகத்தை நினைத்து நினைத்து, மனத்தை ஸ்வாதீனம் செய்து ஆத்மாவில் கொண்டு வந்து நிறுத்தல் வேண்டும்.

**ப்ரசாந்தமநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ।**
**உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூதம் அகல்மஷம் ॥ 27 ॥**

மனத்தை ஆத்மாவினிடம் நிலையாக வைத்து அதனால் பாப மற்று, ராஜஸ தாமஸ குணங்கள் நீங்கி, தன் ஆத்ம ஸ்வரூபத்திலேயே நிலைத்திருக்கும் யோகிக்கு, ஆத்மானுபவமான மேலான சுகம் கிடைக்கும்.

**யுஞ்ஜந் ஏவம் ஸதாऽऽத்மாநம் யோகீ விகதகல்மஷ: ।**
**ஸுகேந ப்ரஹ்மஸம்ஸ்பர்சம் அத்யந்தம் ஸுகம் அச்நுதே ॥ 28**

இப்படி ஆத்ம யோகத்தில் நிலைத்திருப்பவன் தன் தொல்வினைகளெல்லாம் ஒழியப் பெற்றவனாய் அளவற்ற இன்பகரமாயுள்ள ஆத்மானுபவத்தை எளிதில் அடைகிறான்.

ஆக, முதல் ஒன்பது சுலோகங்களில் கர்மயோகம் செய்பவனுக்கு வேண்டிய தகுதியைச் சொன்னான். பிறகு ஆத்மயோகம் செய்யும் முறையை விவரித்தான். யோகம் ஆரம்பிக்குமுன் பகவத் த்யானம் செய்து யோகம் செய்யத் தடையான பாபங்களை போக்கிக் கொள்ள வேண்டுமென்றான். பின்பு இந்த யோகத்தின் சிறப்பைக் கூறி, இதை அறிந்து யோகத்தை மிக உகப்போடு செய்ய வேண்டும் என்பதைக் கூறினான். ஆத்மானுபவத்தினால் உண்டாகும் மேலான இன்பத்தையும் எடுத்துக் காட்டி, ஆத்மயோகம் செய்பவர்களின் நான்கு வகை நிலையை, மேல் நான்கு சுலோகங்களில் அருளிச் செய்கிறான் கண்ணன்.

**ஸர்வபூதஸ்த்தம் ஆத்மாநம் ஸர்வபூதாநி சாऽऽத்மநி ।**
**ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந: ॥ 29 ॥**

யோகத்தில் ஊன்றிய மனமுடையவன் எல்லா ஆத்மாக்களை யும் சமமாகப் பார்க்கிறான். தன்னை எல்லா ஆத்மாக்களிலும், தன்னிடம் மற்ற ஆத்மாக்களையும் இருப்பதாகக் காண்கிறான்.

கர்மயோகம் செய்து ஆத்ம தரிசனம் பெற்றவன் தன் ஆத்மா ஞான ஸ்வரூபனையிருப்பது போல மற்ற எல்லா ஆத்மாக்களும் பரிசுத்த தசையில் ஞானமயமாயிருப்பதை அறிகிறான். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல, தன் ஆத்மாவை ஞான ஸ்வரூபனாகவும், ஞானத்தை குணமாக உடையவனாகவும் இருப்பதை அறிந்து, மற்ற எல்லா ஆத்மாக்களும் அவ்வாறே உள்ளன என்பதை அறிகிறான். இது ஆத்ம தரிசனம் பெற்றவனின் முதல் நிலை.

**யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வஞ்ச மயி பச்யதி ।**
**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி ॥ 30 ॥**

எவனொருவன் எல்லா ஆத்மாக்களில் என்னை காண்கிறானோ எல்லா ஆத்மாக்களையும் என்னிடம் காண்கிறானோ, அவனுக்கு நான் காட்சியளிக்காமல் போவதில்லை. அவனும் எனக்கு காட்சியளிக்கா மல் இருப்பதில்லை.

ப்ரக்ருதி சம்பந்தம் அற்ற முக்த ஜீவாத்மாக்களுக்கு உண்டாகும் எட்டு விதமான குணங்களைப் பற்றி, முக்தாத்மாக்கள் பகவத் ஸாம் யம் பெற்றவர்கள் என்பதை இந்த யோகி உணர்கிறான் என்கிறான். இது இரண்டாம் நிலை.

"அபஹத பாப்மா விஜரோ விம்ருத்யு: விசோக: விஜிகித்ஸ:, அபி பாஸ: ஸத்யகாம: ஸத்ய ஸங்கல்ப:" என்கிற எட்டு குணங்களும் மோக்ஷம் பெற்ற ஜீவனுக்கு உண்டாகின்றன என்கிறது ச்ருதி. அதாவது பாபமற்றவன், மூப்பில்லாதவன், மரணமற்றவன், சோக மில்லாதவன், பசிதாகமில்லாதவன், பழுதுபடாத குணங்கள் உள்ளவன், பழுதுபடாத சங்கல்பம் (நல்ல எண்ணம்) உடையவன், என்று முக்தாத்மாவைச் சொல்லியுள்ளது. இதைப் பற்றி பரிசுத்த ஜீவன் மோக்ஷ தசையில் பகவானுடன் ஸாம்யம் பெறுகிறான்.

'ததா வித்வாந் புண்ய பாபே விதூய
நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம் உபைதி"

இந்நிலையிலுள்ள பகவத் உபாஸகன், புண்ய பாபங்களற்று ஒரு வித தோஷமுமில்லாதவனாய், மேலான பகவத் ஸாம்யத்தை அடை கிறான் என்று இதில் சொல்லப்பட்டிருக்கிறது.

"யோமாம் ஸர்வத்ர பச்யதி":— யாவனொருவன் முக்தி தசையில் உள்ள ஜீவாத்மாவுடன் என்னை ஸமமாய் பார்க்கிறானோ "ஸர்வஞ்ச மயிபச்யதி" அந்த முக்தாத்மாக்கள் என் தன்மையை அடைந்திருப்பதைப் பற்றி, அவர்களை என்னிடம் காண்கிறான். அவர்களுக்கு நான் காட்சி அளிக்காமற் போவதில்லை.

"அஸ்ய அஹம் ந ப்ரணச்யாமி"—அப்படி என்னுடன் சாம்யம் பெற்ற முக்தன் என்னை பரமாத்மா என்று அறியாமல் போவதில்லை. "ஸசமே ப்ரணச்யதி"—அதே போல அந்த முக்தனை எனக்கு ஸமமாயிருப்பவன் என்பதை நானும் அறியாமற் போவதில்லை.
மோக்ஷம் பெற்ற ஜீவாத்மாக்கள் சில குணங்களில் பரமாத்மாவுடன் ஸாம்யம் பெறுகிறார்கள். ஆத்ம தரிசனம் பெற்றவன் இதை அறிகிறான்.

"யத் ஜ்ஞாத்வா.....த்ரக்ஷ்யஸ் யாத்மந்யதோ மயி" என்று 4 அத், 35 ச்லோகத்தில் கண்ணன் கூறியுள்ளான். எல்லா ஆத்மாக்களும் ஒரே மாதிரியானவை. கர்ம பலனற்று மோக்ஷம் பெற்ற ஜீவாத்மாக்கள் பகவானுக்குள்ள சில குணங்களைப் பெற்று அதனால் அவனுடன் ஸாம்யம் பெறுகிறார்கள்.

இன்னும் 14 அத் 2ம் ச்லோகத்தில் "இதம் ஞானம் உபாச்ரித்ய மம ஸாதர்ம்யம் ஆகதா:" என்று முக்தருக்கு பகவத் ஸாம்யத்தை சொல்லியிருப்பதினாலும், இந்த ச்லோகத்திலும் பகவத் ஸாம்யத்தை சொல்வதாகவே பொருள் கொள்ள வேணுமே ஒழிய பகவானாகவே ஆகி விடுகிறார்கள் என்பதில்லை.

**ஸர்வ பூதஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வம் ஆஸ்த்தித: ।**
**ஸர்வதா வர்த்தமானோऽபி ஸ யோகீ மயி வர்த்ததே ॥ 31 ॥**

எல்லா ஜீவன்களும் முக்தி தசையில் என் ஸர்வஜ்ஞ (எல்லாம் உணர்வது) ஒற்றுமையை எல்லா ஆத்மாக்களிடமும் எவன் காண்கிறானோ அந்த யோகி எப்படியிருந்த போதிலும், முக்த ஜீவனோடு என் ஸாம்யத்தை நினைத்துக் கொண்டே வாழ்கிறான்.

ஈச்வரன் ஸார்வஜ்ஞன். மோக்ஷ தசையில் எல்லா ஆத்மாக்களுக்கும் ஞானம் மலர்ந்து ஈச்வரனைப் போல ஸர்வஜ்ஞத்வம் (எல்லாம் அறியும் தன்மை) உண்டாகிறது. இந்த முழு உணர்வினால் ஈச்வர ஸாம்யம் பெறுகிறார்கள். இவ்விதமான முக்தாத்மாவுக்குள் ஈச்வர ஸாம்யத்தை ஆத்ம தரிசனம் பெற்ற கர்மயோகி அறிகிறான். இவன் யோகத்தை விட்டிருந்தாலும் இந்த அறிவு அவனை விடுகிறதில்லை.

**ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பச்யதி யோ அர்ஜுந !**
**ஸுகம் வா யதிவா துக்கம் ஸ யோகீ பரமோ மத: ॥ 32 ॥**

எல்லா சரீரத்திலுமுள்ள ஆத்மாக்களின் ஸாம்யத்தைப் பற்றி, எவனொருவன், தனக்கும் பிறர்க்கும் உண்டாகும் சுக துக்கங்களை சமமாகப் பார்க்கிறானோ,அவனே யோகிகளுக்குள் சிறந்தவன். ஸர்வத்ர ஸுகம்வா யதிவா துக்கம் ஸமம் பச்யதி—தனக்குண்டாகும், சுக துக்கங்களையும் பிறர்க்குண்டாகும் சுக துக்கங்களையும் ஸமமாகப் பார்ப்பது எப்படி ?

பிறர்க்கு ஒரு மகன் பிறந்தால் எப்படி இவன் சந்தோஷப்பட மாட்டானோ, அதுபோல தனக்கு ஒரு குழந்தை பிறந்தாலும், இறந்தாலும் இவன் இன்பமோ, துன்பமோ பட மாட்டான். குழந்தை பிறத்தல் இறத்தல் என்பது கர்மமடிமாக வரும் சரீரத்தை பற்றியது. ஆத்மாவுக்கு அதில் சம்பந்தமில்லை, இவன் தேகாத்மாபிமானம் அற்றவனாகையினால், இச்சரீரத்தைப் பற்றி ஏற்படும் இன்ப துன்பங்களில் ஒட்டற்று இருப்பான்.

அர்ஜுன உவாச — அர்ஜுனன் கூறினான்.

**யோऽயம் யோகஸ் த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மதுஸூதந !**
**ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்த்திதிம் ஸ்த்திராம் ॥ 33**

**சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் !**
**தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥ 34 ॥**

மதுசூதந ! உன்னால் கூறப்பட்ட ஸமதர்சனமான யோகம் நிலைப்பது கஷ்டம் என்று நான் நினைக்கிறேன். ஏனெனில் மனம் சஞ்சலமானது, நிலையற்றது, வலிமையுள்ளது, கலங்கச் செய்வது, உறுதியானது. புயற் காற்றை அடக்குவது போல், மனத்தை அடக்குவது கஷ்டம் என நான் நினைக்கிறேன். "நின்றவா நில்லா நெஞ்சினை யுடையேன்" என்கிறார் நம்மாழ்வார்.

தேவன் மனிதன் பசு பக்ஷி என வெகு காலமாக ஆத்மாக்களை சரீர சம்பந்தத்தை யிட்டுப் பார்த்து வந்தவனை, இப்போது எல்லா ஆத்மாக்களும் ஞான ஸ்வரூபமாய் ஸமமாயுள்ளவர்கள் என்று நினைக்கச் சொன்னால் அது எப்படிக் கூடும் ? ஆதலால் நீர் சொன்ன இந்த ஆத்ம யோகம் நிலைத்திருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை என்கிறான் அர்ஜுனன்.

ஏனெனில் நம் மனம் சஞ்சலமுடையது. பழக்கப்பட்டவைகளிலேயே அது நிலைத்திராது. அப்படியிருக்க புதியதான இந்த ஆத்ம சாம்யத்தில் இந்த மனத்தை நிலைநிறுத்துவது அரிது. புயல் காற்றை

எப்படி ஒரு விசிறியைக் கொண்டு தடுக்க முடியாதோ, அதுபோல மனத்தை அடக்குவது என்பது கஷ்டம். நீயே இம் மனத்தை அடக்கும் உபாயத்தை எனக்கு அருளிச் செய்ய வேண்டும் என்கிறான் அர்ஜுனன்.

பகவான் உவாச :— கண்ணனின் பதில்.

அஸம்சயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேந து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ‖ 35 ‖

அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி: ।
வச்யாத்மநா து யததா சக்யோऽவாப்தும் உபாயத: ‖ 36 ‖

அர்ஜுன ! மனத்தை அடக்குவது அரிது தான். இதில் சந்தேகமில்லை. அது எந்த ஒரு விஷயத்திலும் நிலைத்திராது. ஆனால் உலக விஷயங்களில் உள்ள துன்பங்களையும் ஆத்ம தரிசனத்திலுள்ள இன்பத்தையும் எடுத்துக் காட்டி, அடிக்கடி சிந்தனை செய்து பழக்கி மனத்தை அடக்க வேண்டும். மனத்தை அடக்காமல் கர்மயோகம் செய்வது கஷ்டம். யோகம் செய்தால் தான் ஆத்ம தரிசனம் பெற முடியும். ஆதலால் சிறிது சிறிதாக மனத்தை அடக்க பழகிக் கொள்ள வேண்டும்.

அர்ஜுன உவாச—அர்ஜுனன் சொன்னது.

அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச் சலிதமாநஸ: ।
அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி ‖ 37 ‖

கச்சிந்நோபயவிப்ரஷ்டச் சிந்நாப்ரமிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ‖ 38 ‖

ஏதம் மே ஸம்சயம் க்ருஷ்ண ச்சேத்துமர்ஹஸ்யசேஷத: ।
த்வதந்யஸ் ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தா ந ஹ்யுபபத்யதே ‖ 39 ‖

க்ருஷ்ண ! ஊற்றத்துடன் ஒருவன் கர்மயோகம் செய்ய இழிகிறான். உறுதியாகப் பயில முடியாமல் யோகம் சித்தி அடைவதில்லை. நடுவில் நின்று விடுகிறது. அவன் கதி என்ன ?

ஒரு பெரிய மேகத்தினின்று பிரிந்த ஒரு சிறிய பாகம், வேறு மேகத்தை அடையாமல் அழிவது போல, இவன் பலனை விரும்பி கர்மாவைச் செய்து ஸ்வர்காதி பயன்களைப் பெறுமலும், கர்ம யோகத்தைப் பூர்த்தி செய்ய ஆத்ம தரிசனம் பெறுமலும் அழிந்து போகிறானு ? அல்லது இவனுக்கு வேறு ஏதாவது நலவழி உண்டா ?

இந்த என் சந்தேகத்தை நீயே போக்கி அருளவல்ல ஞான சக்தி பெற்றவன். ஆதலால் இந்த என் சந்தேகத்தைப் போக்கி என்னை தெளிவு படுத்த வேண்டும்.

ஸ்ரீ பகவான் உவாச : கண்ணன் கூறியது.

**பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ் தஸ்ய வித்யதே !**
**ந ஹி கல்யாணக்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி || 40 ||**

அர்ஜுன! யோகத்திலிருந்து நழுவினவனுக்கு இந்த லோகத்தில் ஒரு கெடுதலும் வராது. அவன் பரலோகத்திலும் நாசமடைய மாட்டான்.

ஆஸ்திக புத்தியுடன் சிறிதாவது பகவத் த்யானம் செய்தவன் ஒரு நாளும் கெட மாட்டான்.

இவ்வளவு உயர்ந்த யோகத்தைச் செய்தவன் முக்காலத்திலும் நல்லவனே. வெகு காலம் செய்து வந்த புண்ய பலத்தினால், இந்த யோகத்தை ஆரம்பித்திருக்கிறான். ஆதலால் புண்ய லோகம் செல்வது, மறுபடியும் விட்ட யோகத்தைச் செய்து முடிப்பது, மோக்ஷம் பெறுவது முதலான நன்மைகளே இவனுக்கு உண்டாகும்.

**ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாந் உஷித்வா சாச்வதீ: ஸமா: |**
**சுசீநாம் ச்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே || 41 ||**

யோகத்திலிருந்து நழுவினவன், புண்ணியம் செய்தவர்கள் அடையும் லோகத்தை அடைந்து, அங்கு சிறிது காலம் சுகத்தை அனுபவித்து, பிறகு நல்லொழுக்கமுள்ளவர்களின் வீட்டில் வந்து பிறக்கிறான்.

**அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம் |**
**ஏதத் ஹி துர்லபதரம் லோகே ஜந்ம யத் ஈத்ருசம் || 42 ||**

அல்லது யோகம் செய்கிற ஞானிகளின் வீட்டில் பிறக்கிறான். இப்படிப்பட்ட பிறவி கிடைப்பது அரிது.

**தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதை (தே)ஹிகம் |**
**யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தந || 43 ||**

இவ்வாறு பிறந்து முன் செய்த யோகத்தின் நினைவினால், விடுபட்ட யோகத்தை மறுபடியும் தொடங்கி அதை முடிக்க முயல்கிறான். ஒருவன் ஒரு வேலை செய்யும் போது தூங்கி எழுந்து மறுபடியும் அந்த வேலையைச் செய்து முடிப்பது போல, யோகத்தை நடுவில் விட்டவன், நல்ல குலத்தில் பிறந்து, முன் பிறவி வாசனையினால், அந்த யோகத்தை மறுபடியும் தொடங்கி, பூர்த்தி செய்கிறான். இவ்வித யோகத்தின் சிறப்பை, ஆதி பரதன், விதுரர், பீஷ்மர் கஜேந்திரன் முதலானவர்களிடம் காணலாம்.

**பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவசோ(அ)பி ஸ: |**
**ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்ததே || 44 ||**

இந்த காம யோகத்தைச் செய்வதில் விருப்பமிருந்து, அதை செய்யாமல் போனவனும், மறுபிறவியில், அந்த இச்சையின் வாசனையினுல், யோகத்தை செய்ய ஆரம்பித்து அதை பூர்த்தி செய்து, ஆத்ம தரிசனம் பெறுகிருன். இச்சையே பேற்றுக்கு ஸாதனமாகிறது.

**ப்ரயத்நாத் யதமாநஸ்து யோகீ ஸம்சுத்தகில்பிஷ: |**
**அநேக ஜந்மஸம்ஸித்தஸ் ததோ யாதி பராங்கதிம் || 45 ||**

பாபத்திலிருந்து விடுபட்டவனுய், அநேக பிறவியில் ஞானப் பேற்றைப் பெற்று, பிறகு உத்தம கதியை (மோக்ஷத்தை) அடைகிருன்.

யோகத்தின் பெருமையினுல் பற்பல பிறவியில் செய்த புண்யத்தினுல் பாபமற்று, யோகம் செய்யத் தகுந்தவனுகிருன். அவன் யோகம் செய்ய முயன்று ஏதோ ஒரு காரணத்தினுல் மனம் சலித்து யோகம் செய்வதை நடுவில் விட்டாலும், மறுபடியும் அந்த விடுபட்ட யோகத்தைச் செய்து முடித்து, ஆத்ம தரிசனம் பெறுகிருன். மோக்ஷமும் அவனுக்குப் பிறகு கிடைக்கிறது.

**தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞாநிப்யோऽபி மதோऽதிக |**
**கர்மிப்யச்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுந || 46 ||**

கேவலம் தவம் செய்கிறவர்கள், ஆத்மாவைப் பற்றின ஞானமுள்ளவர்கள், கேவலம் கருமங்களைச் செய்பவர்கள்; இவர்களைக் காட்டிலும், த்யான யோகம் செய்கிறவன் மேம்பட்டவன் என்பது என்னுடைய கொள்கை. ஆதலால் அர்ஜுன ! நீ கர்மயோகியாகக் கடவாய்.

கேவலம் தவத்தினுலோ, ஆத்ம ஞானத்தினுலோ, கேவலம் கர்மாக்களைச் செய்வதினுலோ பெறும் பயன்களைக் காட்டிலும் மேன்பட்டது ஆத்ம யோகத்தினுல் பெறும் பயன். ஆதலால் அவைகளை விட ஆத்ம யோகமே மேலானது.

**யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா |**
**ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: || 47 ||**

ஸகலவிதமான யோகிகளுக்குள்ளும் எவன் என்னிடம் ஊன்றிய மனமுடையவனுய் பக்தியுடன் என்னை ஆராதிக்கிருனே அவனே மேலான யோகி என்பது என்னுடைய கருத்து.

ஸ்ரீ ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹம்
ஆறும் அத்யாயத்தின் பொருள் சுருக்கம்.

"யோகாப்யஸவிதிர் யோகீ சதுர்த்தா யோக ஸாதனம்
யோக ஸித்தி ஸ்வயோகஸ்ய பாரம்யம் ஷஷ்ட்ட உச்யதே."

ஆத்ம ஸாக்ஷாத்காரம் செய்யும் யோகத்தின் முறையும், நான்கு வகைப்பட்ட யோகிகளும் முன் சொன்ன யோகத்திற்கு ஸாதனமான பயிற்சி, வைராக்யம் முதலானவையும், தொடங்கிய யோகம் பூர்த்தி அடையும் என்பதும், தன்னிடம் செய்யும் பக்தியின் மேன்மையும் இந்த ஆறும் அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

ஆறும் அத்யாயம் முற்றிற்று.